

எந்தக் கூட்டத்தின்
நடுவிலும் அவரை
எளிதில் கண்டுகொள்ள-
லாம். தனித்து நிற்பவர்
அவர். எப்போதுமே, எந்த
விஷயத்திலும் அவருக்-
கென்று ஒரு தனி விருப்பம்.
குழப்பக்காரர் அல்ல,
ஆனால் தனி விருப்பமுண்டு.
அவரது தோற்றம்
மிடுக்காக இருக்க-
வேண்டும். உடைகள்
மஃபத்லால் க்ரூப் துணி-
களாகவே இருக்க-
வேண்டும். ஆம்,
மஃபத்லால் க்ரூப்!

**மபத்லால் க்ரூப் சூட்டிங்குகள்**

'டெரீன்'/ காட்டன், டெரிகாட், அக்ரிலிக், டெபிலேஸ்டு மற்றும் மபின்ஸ்டு ரகங்கள்.

# மதிப்பிற்குரியவர்!




M 358 TM

நியூ ஷொரக் (ஷொரக்), அகமதாபாத் . நியூ ஷொரக், நதியாத் . ஸ்டாண்டர்டு, பம்பாய் . ஸ்டாண்டர்டு (நியூ சைனா), பம்பாய் . ஸ்டாண்டர்டு (தேவாஸ்) . ஸஸூன், பம்பாய் . ஸஸூன் (நியூ யூனியன்), பம்பாய், ஸூரத் காட்டன், ஸூரத் மஃபத்லால் ஃபைன், நவசாரி. மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அகமதாபாத்.

# புதிய ஹிந்துஸ்தான் J6 டிரக் ஒன்றினை ரூ. 10,000-முதல் டிபாஸிட் தொகையாகக் கொடுத்து வாங்கி உங்கள்

# பழைய டிரக்கினை மாற்றிக் கொள்ளுங்கள்



பாக்கித் தொகையை சுலபமான 29 மாதத் தவணைகளில் ரூ. 1,500/- விதம் செலுத்தி விடலாம்.

உங்கள் அருகாமையிலுள்ள ஹிந்துஸ்தான் டிரக் டீலர் வழி ஹிந்துஸ்தான் மோட்டார் கார்ப்பொரேஷன் லிட்., டினைத் தொடர்பு கொள்ளுங்கள்.

இயக்குனர்களுக்கு மிகப் பெரிய அரியதொரு வாய்ப்பு! சக்திவாய்ந்த ஹிந்துஸ்தான் J6 7½ டன்னர் டிரக் வாங்கி, உங்களுடைய பழைய டிரக்கினை மாற்றி விடுங்கள். பராமரிப்பு - பழுது பார்த்தல் - அதிக எண்ணை செலவு களைக் குறைத்து, அதிகமான பளுச் சுமையை ஏற்றிக்கொள்ளும் ஹிந்துஸ்தான் J6 டிரக், நீடித்து பழுது இல்லாமல் உழைத்து அதிகமான பணம் சம்பாதிக்க உதவுகின்றது.

ஆரம்பகாலத்திலிருந்தே சம்பாத்தியத்திற்கு ஏற்ப எந்தவிதமான கஷ்ட-நஷ்டமில்லாமல், தொல்லையில்லாமல் பாக்கித் தொகையைச் செலுத்தி விடலாம்.

அதிகமான பளுச்சுமை
ஏற்றிக்கொள்ளுதல்
அதிகமான லாபங்கள்
மிகக் குறைந்த விலை டிரக்




- நிரூபிக்கப்பட்ட செயல்திறன்மிக்க சக்திவாய்ந்த புதிய பெட்போர்ட் டீசல் என்ஜின் 5420 c. c. (330 cu. in.) 112 H. P. சக்தியை (SAE) அதிகப்படுத்துவது.
- உறுதியான முன் அச்சு 3728 கிலோ கிராம் (8200 பவுண்டுகள்) பின் அச்சு 8182 கிலோ கிராம் (18000 பவுண்டுகள்) கொண்டது.
- பாதுகாப்பு சர்வோ - அஸிஸ்டெட் காற்று அமுக்க பிரேக்குகள் கொண்டது.
- G. V. W. 11000 கிலோ கிராம் (24250 பவுண்டுகள்) W.B. 3.94m (155") 4.24m (167") 4.55m (179").

முழு பார்வார்டு கன்ட்ரோல் மாடல்களும் கிடைக்கின்றன

- விற்பனையாளர்களும் சர்வீஸ் இன்ஜினியர்களும் எல்லா மாகாணங்களிலும் இருக்கின்றனர்.




**ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிமிடெட், கல்கத்தா**

# அற்புதம்!! OK டிரிபில் 'S'

## சோப் பவுடர்

## இப்போழுது மிக்க நூதன உறையில் வருகிறது.

இது ஒரு புதுமையானது O. K. டிரிபில் 'S' சலவைப் பவுடர் இப்பொழுது கவர்ச்சியுடன், சௌகர்யமான உறையில் கிடைக்கிறது. இதைவிட வேறு என்ன வேண்டும்? ஒவ்வொரு உறையிலும் ஒரு உபயோகமுள்ள வெகுமதி அடங்கியுள்ளது.

FREE GIFT INSIDE

OK

SSS new exclusive additive

Soap Powder

எல்லா ஆடைகளையும் நேர்த்தியாகவும், மென்மையாகவும் சலவை செய்ய O.K. டிரிபில் 'S' சோப் பவுடரையே உபயோகியுங்கள்.

சென்னையில் எங்கும் கிடைக்கிறது இப்புதிய சோப் பவுடர்

தயாரிப்பாளர்கள் :




தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட் சென்னை-21

# கல்கி பொருளடக்கம்

லேக ஆடி 13 - ஜூலை 28



பட விளக்கம் 9ம் பக்கம்

'கல்கி'யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


பாரதத்தின்
தார்மிக பண்பு
மன்னர்களுடன்
செய்து கொண்ட
ஒப்பந்தம்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா --- பாரதியார்



மலர் 27 ★ இதழ் 52

# இன்று தேவைப்படும் அரசாங்கம்

இன்று தேசத்தின் எதிரேயுள்ள நெருக்கடி பயங்கரமானது. அரசியல் அறிஞர்கள் யாவரும் இதை உணருகிறார்கள். ஆயினும், இந்திய அரசாங்கம் இதைக் காண மறுக்கிறது. காங்கிரஸ் கட்சி தன்னைப் பற்றி மட்டுமே அக்கறை கொண்டிருப்பதால் மற்ற விஷயங்கள் அதன் கவனத்தைப் பெறுவதில்லை. நெருக்கடியின் தீவிரத்தை முன்னிட்டுப் பிரதமர் சம்பிரதாயங்களை விட்டு, கட்சிப் பற்றற்ற தேசிய அறிஞர் குழுவை அமைத்து அதனிடம் பொறுப்புக்களை அளிக்க வேண்டும் என்று யோசனை கூறப்பட்டது. மந்திரி சபையும் ஆளும் கட்சியும் தமது அதிகாரங்களைத் தாமாகவே இக்குழுவிடம் ஒப்புவித்துவிட வேண்டும்; அல்லது அதன் ஆலோசனையைக் கேட்டு அதன்படி நடக்க வேண்டும் என்று பிரதமருக்கு யோசனை கூறப்பட்டது. ஆனால் இதைப் பிரதமர் ஏற்கவில்லை. யோசனைப்படி செய்தால் இன்றைய ஆட்சியாளரின் ஊழல்களையும் திறமையின்மையையும் பகிரங்கமாக ஒப்புக் கொண்டதாகும் என்ற கட்சிக் கண்ணோட்டத்தில் மேற்படி யோசனை புறக்கணிக்கப்பட்டு விட்டது.

பாகிஸ்தானுக்கு ருஷியா ஆயுத உதவி அளிப்பதை ஒட்டி நம் நாட்டில் மிகுந்த பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது. ருஷியாவோ, அமெரிக்காவோ, பிரிட்டனோ பாகிஸ்தானுக்கு உதவி புரியாமல் இந்தியாவுக்கு மட்டும் உதவி புரியும் என்று நாம் என்றேனும் எதிர்பார்க்க முடியுமா என்ற கேள்வியை நம் மக்களும் நமது நாட்டு ஜனநாயகக் கட்சிகளின் தலைவர்களும் இன்று கேட்டுக் கொள்ள வேண்டும். இவ்விரு நாடுகளிடையே ஒரே போல் நடந்து கொள்ள வேண்டும் என்ற கொள்கையைத்தான் வல்லரசுகள் பின்பற்றும். இந்தியாவின் புறமாக அதிகம் சார்கிற கொள்கையை எந்த வல்லரசேனும் பின்பற்றும் எனக் கற்பனை செய்வது வெறும் அறிவீனமேயாகும். நாம் நடு நிலைமை வகிப்பதாகச் சொல்வது போலவே பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்குமிடையே தாங்கள் நடுநிலைமை வகிப்பதாக வல்லரசுகள் கூறலாம். அவை இந்த நடுநிலைமையை விட்டு நம்மை விசேஷமாக ஆதரிப்பதற்குத் தூண்டுமுகமாக வல்லரசுகளுக்கு நாம் செய்யக்கூடியது எதுவுமில்லை. பிரிட்டன் இந்தச் 'சமத்துவ'க் கொள்கையை விட வேண்டும் என்று நீண்ட காலம் போராடினோம். பயனில்லை. அமெரிக்கா, ருஷியா இவற்றின் விஷயத்திலும் அதே தோல்வியை மீண்டும் காண்கிறோம். இது நாமே எதிர்பார்த்திருக்க வேண்டிய முடிவுதான். எனவே, இதில் ஆச்சரியமோ ஏமாற்றமோ அடைவதற்கு இல்லை. இந்தியாவுடன் கொள்கிற நட்புக்குச் சமமாகப் பாகிஸ்தானுடனும் நட்பு கொள்ள விரும்புகிற வல்லரசிடமிருந்து நாம் விலகிவிட வேண்டும் என்று சொல்வதிலும் அர்த்தமில்லை. அவசரப்பட்டு ஏதேனும் செய்தோமாயின், மற்ற உலக நாடுகளிடமிருந்து நம்மைத் தனித்து ஒதுக்கிக் கொண்டதாகவே முடியும்.

எனவே, இப்போது ஒரே வழி பாகிஸ்தானிடம் உள்ள அவநம்பிக்கையையும் மனோபேதத்தையும் விட்டு நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் வளர்த்துக் கொள்வதுதான். நீண்ட காலச் சம்பவங்களாலும், போக்குகளாலும் இந்த வழிக்கு இடைஞ்சல்கள் உண்டான போதிலும் கௌரவமான வழி இதுவே.

நம்மிடமுள்ள அன்ம பலம் முழுவதையும் செலுத்தி இவ்வாறு அண்டை நாட்டுடன் நட்புச் சூழ்நிலையை உண்டாக்கிக் கொண்டு விட்டோமாயின், எந்த அந்நிய வல்லரசின் போக்கு பற்றியும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

முன்பு நம் அங்கமாயிருந்த நாடு பாகிஸ்தான். அதனுடன் ஆயுதப் போட்டியில் இறங்கினோமாயின் அதை விட அபத்தம் வேறு இருக்க முடியாது. வல்லரசுகளில் ஒன்றிடமிருந்தோ, அல்லது இரண்டிடமிருந்துமோ உதவி பெற்று அதைக் கொண்டு அண்டை நாட்டுடன் ஆயுதப்போட்டி நடத்துவது



ஸ்ரீ காஞ்சி ஜகத்குருவும் இளைய ஸ்வாமிகளும் ஹைதராபாத்தில் சாதுர்மாஸ்யம் அனுஷ்டித்து வருகின்றனர். மேலே வியாஸ பூஜையன்று எடுத்த படம்.

## காமகோடியின் கருணைமொழி

கல்வி, கலாசாரம், கல்ச்சர் எல்லாம் ஒன்றுதான். பிரெஞ்சு மொழியில் 'கொலெ' என்பார்கள். எல்லாவற்றுக்கும் மூலம் 'கல்' என்பது. வரவர வளருவதற்குக் 'கலா' என்று பெயர். அதனால்தான் 'சந்திர கலா' என்று வந்தது. பிறை ஒவ்வொரு நாளும் வளருகிறது அல்லவா?

உயர்ந்த எண்ணம் வளர்ந்து வளர்ந்து உயர்ந்த பல கலைகளாக உருவெடுக்கிறது. சங்கீதம், நாட்டியம், சித்திரம் இவ்வளவும் உயர்ந்த எண்ணங்களுடைய ஒவ்வொரு வகை உருவங்கள். உயர்ந்த எண்ணம் மாத்திரம் இருந்துவிட்டால் போதும். அது சித்திர ரூபமாக, சங்கீத ரூபமாக, தான ரூபமாக, தியாக ரூபமாக உருவம் எடுக்கும். நவரஸங்களாக உருவெடுக்கும். சாந்த நிலை அடைவதும் உயர்ந்த கலைதான். அப்படியே எல்லா உயிர்களிடத்திலும் அன்பு. லோகம் முழுக்க ஒன்றுவதற்கும் கலை என்று பெயர் — கலாசாரம் என்று பெயர்.

---

பொருளற்ற காரியம். நம் சொந்த சக்தியையும் வளத்தையும் கொண்டே இதைச் செய்வதும் முடியாது. ஏனெனில், ராணுவத் தொடர்பற்ற நமது மற்ற உள்நாட்டுக் காரியங்களுக்கே இவை போதவில்லை. நாமும் பாகிஸ்தானும் ராணுவச் செலவைக் குறைத்துக் கொள்ளாவிடில் நம்முடைய பொருளாதாரமும் சரி, அதே போல் பாகிஸ்தானின் பொருளாதாரமும் சரி முற்றிலும் நிலைகுலைய வேண்டியதுதான். இந்த உண்மையை ஒரு மந்திரம் போல் மனத்தில் கொள்ள வேண்டும். இவ்விஷயத்தில் இன்றைய இந்திய சர்க்கார் கொள்கையை மாற்றிக் கொள்ளாது எனில், அரசாங்கம் வேறு கை மாறத் தான் வேண்டும்.

இதே போல் பெர்மிட்–லைசென்ஸ் ஆட்சி முறையைக் கைவிடவும் காங்கிரஸ் கட்சி இணங்காது. மக்கள் அன்றாட வாழ்வில் உண்மைச் சுதந்திரத்தை அநுபவிக்க வேண்டுமெனில் பெர்மிட்–லைசென்ஸ் ஆட்சி முறை அகன்றே தீர வேண்டும். இப்போது உண்மை சுயராஜ்யம் நமக்கில்லை. அதை அடையப் பாடுபட வேண்டும். இன்றைய சர்க்காரின் இடத்தில் எல்லா ஜனநாயக கட்சிகளும் அடங்கிய சத்திய சுயராஜ்ய ஆட்சி அமைய வேண்டும். நாட்டை உருவாக்கும் கோடானு கோடி மக்களின் ஆன்ம சக்தியும், உழைப்புச் சக்தியும் பூரணமாக வெளியாகாதவாறு தடுத்துப் பெர்மிட் லைசென்ஸ் ஆட்சி தருகிற பொருளாதார ஆதிக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு தன்னையே அதிகாரத்தில் நிலை நாட்டிக் கொள்ள விரும்புகிற இன்றைய சர்க்கார் கட்சிப் பற்றற்ற தேசியக் குழு அமைய இடம் தருவதாக இல்லை. ஒரு தேசியக் கூட்டு, அல்லது ஜனநாயகக் கட்சிகளின் இணைப்பு இதனை எதிர்க்க வேண்டும்; இன்றைய அரசாங்கத்தை அகற்றி அதனிடத்தில் அமர வேண்டும்.

கடந்த பல ஆண்டுகளாகத் தவறான திட்டங்களுக்காக ஏராளமான பணம் முதலீடு செய்யப்பட்டு விட்டது. அவற்றை யெல்லாம் உடனடியாக நிறுத்திவிடவும் முடியாது; திருத்திவிடவும் முடியாது. தேச நிலவரத்தை அடியிலிருந்து தூய்மையாக்குவது முடியாது தான். ஆனால் அதற்காக இதே சர்க்கார், இதே கொள்கைகளைத் தொடர்ந்து பின்பற்றி இப்புராதன நாட்டை ஆன்மிகத்திலும் பொருளாதாரத்திலும் திவாலாக்குவதற்கு அநுமதிக்கலாகாது.

தேசத் தேவையை முன்னிட்டு நல்லாட்சியின் அத்தியாவசிய அம்சங்களை மட்டுமே மனத்தில் கொண்டு, மற்ற யாவற்றையும் தாற்காலிகமாகத் தியாகம் செய்துவிட்டு, சர்க்கார் சர்வாதிபத்தியத்தை விரும்பாத அனைவரும் ஒன்றுபட வேண்டும். சட்டசபை ஜனநாயகத்திலும், சக்திக்குத் தகுந்த பொருளாதாரத்திலும் நம்பிக்கை கொண்ட யாவரும் ஐக்கியமாகி காங்கிரஸை ஆட்சியிலிருந்து அகற்ற வேண்டும்.

உணவு உற்பத்தியை உயர்த்துவதில் முக்கியமான ஈடுபாட்டைக் காட்டி அதற்குரிய எல்லா நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும். ராணுவச் செலவைக் குறைப்பதற்கான சகல காரியங்களையும் செய்ய வேண்டும். அந்நியர்களிடம் பட்டுள்ள கடன்களைத் தீர்க்க இயன்ற தவ்வளவும் செய்ய வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக, தரும நெறிகளை மீண்டும் நிலை நாட்டுவதற்கு நம்மால் முடிந்த அனைத்தையும் செய்ய வேண்டும். இல்லாவிடில் தேசத்தின் விதி நாசமேயாகும். இந்த நான்கு பெரும் பொறுப்புக்களையும் அகத் தூய்மையோடு ஏற்று, அதிகாரப் பசியின்றி ஆளக்கூடிய தேசிய யூனியன் சர்க்காரே இன்றைய தேவை.

('ஸ்வராஜ்ய'வில் ராஜாஜி எழுதியது.)

# என்ன சேதி?

## தில்லியில் வள்ளுவர்

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

என்று பாடினார் மகாகவி பாரதி. ஆம், வள்ளுவரின் கருத்துக்கள் எல்லா நாட்டு மக்களும் எல்லாச் சமய மக்களும் ஏற்கத் தக்கவைதாம். திருக்குறள் பல மேனாட்டு மொழிகளில்கூட மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

இந்தியாவுக்கு அதிலும் தில்லிக்கு ஆண்டு தோறும் ஆயிரக்கணக்கில் மேனாட்டினர் வருகின்றனர். இந்திய மக்களின் வாழ்க்கை முறை, சிந்தனை, சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்கள், இலக்கிய ஆசிரியர்கள் — ஆகிய பலப்பல விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்துடன் வருகின்றனர். அவர்களில் பலர் தமிழகம் வரை வந்து திரும்ப வாய்ப்பே இல்லாமல் போய் விடுகிறது. அப்படிப்பட்டவர்களின் கவனத்தைக் கவருவதற்காக, தில்லியில் ஒரு வள்ளுவர் சிலை நிறுவ முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. தில்லி மக்கள் சபை அங்கத்தினர் திரு க. இராசாராம் எம். பி. அவர்கள் தலைமையில் இயங்கும் 'வள்ளுவர் கலை மன்றம்' இப்பணியில் முழுமூச்சுடன் இறங்கியுள்ளது. எந்த நல்ல பணியும் நிதியின்றி நிறைவேறுதல்லவா? ஆகவே, தமிழ் கூறும் நல்லுலகிலுள்ள எல்லா நன்மக்களும் இச்சீரிய பணி சிறப்புற நிறைவேறக் கீழ்க்கண்ட விலாசத்துக்குத் தங்களால் இயன்ற பண உதவி அனுப்பி வைக்குமாறு கோருகிறோம்.

திரு க. இராசாராம், எம். பி., 'வள்ளுவர் சிலை நிதி', 2/142 மவுண்ட்ரோடு, சென்னை-2

## மாணவர்களும் போதனைமொழியும்

சமீபத்தில் பிரான்ஸில் நடந்த குழப்பங்கள், கலவரங்களுக்கெல்லாம் காரணம், மாணவர்கள் கிளர்ச்சிதான். சர்வகலாசாலை வகுப்புக்களில் மாணவர்கள் கூட்டம் பெருகிப் போய், ஒன்றுமே கற்க முடியாத நிலை ஏற்பட்டு விடுகிறது. இந்த நிலையை மாற்ற வேண்டும் என்று கோரிக் கிளர்ச்சி செய்யும்போது, "நியாயந்தானே?" என்று யாருக்குமே படும்.

மாணவர்கள் கிளர்ச்சிகளில் அரசாங்கம் முதலில் அலட்சிய பாவனையோடு இருந்து விட்டால், சமுதாயத்தில் உள்ள தீய சக்திகள், அராஜகக் கட்சிகள் தங்கள் சுயநலனுக்கு மாணவர் கிளர்ச்சியை உபயோகப்படுத்திக் கொள்ளத் தொடங்கிவிடுகின்றன. இத்தகைய சூழ்நிலைதான் பிரான்ஸ் தேசத்தில் உருவாகியது.

தமிழகத்தில் மாணவர்கள் ஆங்கில போதனை மொழியே வேண்டும் என்று கோருகின்றனர் என்று நிதரிசனமாகத் தெரிந்து விட்டது. அரசாங்கக் கல்லூரிகளில் "தமிழ் போதனை முறை" எடுத்துக் கொண்டால் தான் இடம் கிடைக்கும் என்று பலாத்காரம் செய்ததால் இப்போது அவ்வகுப்புக்கள் நிறைந்துள்ளன! இதை வைத்துத் தமிழகத்தில் தமிழ் மூலம் விஞ்ஞானம் கற்க மாணவர்கள் சம்மதித்து விட்டார்கள் என்று நினைத்தார்களானால் அது வெறும் பகற்கனவுதான். "மந்திரிக்கு அழகு வரும் பொருளுரைத்தல்" என்பார்கள். இன்று மந்திரிகளே ஆட்சியாளர்களாக இருப்பதால் மாணவர்களின் மனநிலையை உணர்வதும், அதன் நியாயத்தை உணர்ந்து நடப்பதும் அவர்கள் தலையாய கடமையாக உள்ளது.

# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்திய சர்க்கார் நான் சொல்வதைக் கேட்காது. ஆனாலும் அவர்கள் கேட்கிறார்களோ இல்லையோ, நாட்டுக்கு நல்லது என்று நான் நம்புவதை அவர்களுக்குச் சொல்வது என் கடமை.

தென் இந்தியர்களுக்கும் வட இந்தியர்களுக்கும் மொழிப் பளு சமமாக இருக்க வேண்டும் என்ற கருத்தில் மும்மொழித் திட்டத்தை உருவாக்கி, வட இந்தியர்களைத் தமிழ் படிக்கச் செய்வது கேலிக்கூத்தாகும். ஒரு சில வட இந்திய இளைஞர்களே தமிழ் படிப்பதில் அக்கறை கொண்டிருக்க முடியும். ஸ்பானிஷ் மொழி அல்லது ருஷிய மொழி படிப்பதில் சிலருக்கு ஆர்வமிருப்பது போல் தமிழ் படிப்பதிலும் ஒருசில வட இந்தியர்களுக்கே ஆர்வமிருக்கும். ஆனால் வட இந்தியர் அனைவரையும் ஒரு தென் மொழியைப் படிக்கவைப்பதற்கு இந்த ஆர்வம் போதாது.

இந்திய சர்க்காரின் நிருவாக மொழியாகவும், மத்திய சர்க்காருக்கும் ராஜ்ய சர்க்கார்களுக்கும் தொடர்பு மொழியாகவும், ராஜ்ய அரசாங்கங்களுக்கிடையே தொடர்பு மொழியாகவும் ஆங்கிலமே இருக்கும் என்று இந்திய சர்க்கார் திட்டவட்டமாகத் தீர்மானித்து விட்டால், அரசாங்க அதிகாரத்தின்றி நாமாகவே **சுயேச்சையாக** ஹிந்தி பேசாத பகுதிகளில் சமூக காரியங்களுக்கும், அரசாங்கச் சார்பற்ற காரியங்களுக்கும் ஹிந்துஸ்தானியை அகில இந்தியப் பொது மொழியாக அபிவிருத்தி செய்யலாம். இதனால் நிர்ப்பந்தமின்றி ஐக்கியம் காணமுடியும். நிர்ப்பந்த ஐக்கியத்துக்கு இணங்காதவர்களை ஏதோ ஒரு விதத்தில் தண்டிப்பதும் நடைபெறாது. மும்மொழித் திட்டம் என்ற பெயரில் ஹிந்தியை மறைமுகமாகத் திணிப்பதைவிட இதுவே உண்மையில் சக்தி வாய்ந்த முறையில் ஒருமைப்பாட்டுக்கு உதவும்.

ஃஃஃ

ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் மக்கள் சபையிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டது எனக்கு ஆச்சரியமூட்டவில்லை. தேசம் ஒரு நெருக்கடிக்கு முகம் கொடுக்க வேண்டியுள்ளது என அவர் உணர்ந்திருக்கிறார். ஆட்சியிலுள்ள கட்சியும் அரசாங்கமும், இதைக் காணவிடினும், தேசிய விவகாரங்களைப் பற்றி நான் கொண்டுள்ள உணர்ச்சிகளையே ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட்டும் கொண்டிருக்கிறார் என்று ஓரளவு நிச்சயமாகவே சொல்வேன். தம்மை இன்றையப் பார்லிமெண்ட் அங்கத்தினரோடு ஒரு குடும்பத்தினராக அவரால் கருத முடியவில்லை.

ஃஃஃ

லண்டனிலிருந்து கிடைத்துள்ள ஜூலை 12ந் தேதியிட்ட ராய்ட்டர் செய்தி வருமாறு:

கருத்தடை மாத்திரை உபயோகிப்பதற்கும் ரத்த ஓட்டம் தடுத்து நிறுத்தப்படுவதற்கும் தொடர்பு இருக்கிறது என்பதற்கு மேலும் மேலும் ஆதாரம் கிடைத்து வருகிறது—இவ்வாறு 'லான்ஸெட்' என்ற அதிகார பூர்வமான வைத்திய சஞ்சிகை எச்சரிக்கிறது.

இவ்விஷயமாகக் கிடைக்கக் கூடிய சகலவிதமான கேஸ்களையும் ஆராய்ந்துள்ள வைத்திய நிபுணர்கள், 'ரத்தம் கெட்டிப்படுவதால் இறந்து போகும் இளம் பெண்களின் எண்ணிக்கை உயருவதற்கும் கருத்தடை மாத்திரைக்கும் ஒரு காரண—காரிய சம்பந்தம் இருப்பதாகத் தெரிகிறது என்று தமது அறிக்கையில் கூறியுள்ளனர்.

இந்தியாவைப் பொறுத்த மட்டில் எந்த மருந்துக் கம்பெனியா யிருந்தாலும் எதையாவது கருத்தடைச் சாதனம் என்று தயாரித்துவிட்டால் அதுவே டாக்டர் சந்திரசேகரன் அவர்களுக்குப் போதுமானது. அதன் விநியோகத்தைப் பரப்ப உதவுகிறவர்களுக்கெல்லாம் அவர் பணம் தருவார். அதை வாங்கி உபயோகிப்பவருக்கும் பணம் தருவார். நம் கிராம மக்களின் வறுமை அவர்களைப் பத்து ரூபாய் அல்லது அதற்கும் குறைந்த தொகைக்காகவும் கூட எந்தப் பரீட்சைக்கும் தம்மை ஆட்படுத்திக்கொள்ளச் செய்கிறது. அரசாங்கம் எதை வேண்டுமானாலும் நிரூபிப்பதற்குப் புள்ளி விவரக் கணக்கு இருக்கவே இருக்கிறது.

ஃஃஃ

கபீர்தாஸரைப் பற்றி சாகித்திய அகாடெமி ஒரு நூல் பிரசுரித்துள்ளது. இந்தியா வெங்கணும் மக்களின் அன்புக்குப் பாத்திரமாகியுள்ள இந்தச் சாது சிரேஷ்டரின்—கவிஞரின் வாழ்க்கை சரித்திர பூர்வமாகத் தெரியவில்லை. அவரது பெற்றோர், அவருடைய சாதி முதலியன பற்றி வரலாற்றாசிரியர்கள் எதுவும் திட்டவட்டமாகக் கண்டு பிடிக்க முடியாமல் முரணான அநுமானங்கள் ஏற்பட்டுள்ளன. இது வருந்தத்தக்கது. ஆனால் இதை இன்னொரு கோணத்திலும் பார்க்கலாம். இன்றைய சாதுக்களுக்கும் தேசபக்தர்களுக்கும் எவ்வளவு மாறுபட்டவர் கபீர்! இன்றிருப்பவர்கள் எந்த நல்லது செய்தாலும் உடனே அது ஊரெங்கும் பரப்பப் படுகிறது. அவர்கள் புகழைப் பரப்ப எவ்வளவு பிரசாரம் செய்யலாமோ அவ்வளவும் செய்யப்படுகிறது. கபீர் இப்படி இல்லை. தமது புனிதப் பணியைச் செய்து மறைந்தே போய்விட்டார்.

கபீரும், மற்ற வட இந்திய, தென்னிந்திய ஞானிகளும் சடங்குகள், உபவாசங்கள், தீர்த்தாடனம், க்ஷேத்திராடனம் ஆகியவை பயனற்றவை என்று கூறுகின்றனர். இதன் உட்பொருள் யாதெனில், இவற்றுக்கு அடிப்படையாக உண்மையான பக்தி இல்லாமல் இந்த வெளி ஆசாரங்களை மட்டும் பற்றி ஒழுகுவதால் பயனில்லை என்பதே யாகும். இந்த ஆசாரங்களை அநுஷ்டிக்காமல் விட்டுவிட்டால் அதுவே பாராட்டுக்குரியது என்பதல்ல ஞானியரின் உத்தேசம். இயந்திர கதியில் பக்தியின்றிச் செய்கிற அநுஷ்டானத்தால் பயனில்லை என்பதே அவர்கள் வலியுறுத்திய உண்மை. இந்த எச்சரிக்கையைத் தவறாகப் புரிந்துகொண்டு அவர்கள் சம்பிரதாய அநுஷ்டானங்களை எதிர்த்துப் புரட்சி செய்தவர்கள்

என்று நாம் எண்ணக் கூடாது. மக்கள் மதாநுஷ்டானத்தை விடவேண்டும் என்பது அவர்கள் கருத்தல்ல; அநுஷ்டானமுள்ளவர்கள் அவற்றில் உண்மை பக்தியைக் கலக்க வேண்டும் என்பதே அவர்களது உபதேசத்தின் தாத்பரியம். காலக்கிரமத்தில் எந்தச் சடங்குமே ஜீவனிழந்து விடக்கூடிய ஏது இருப்பதாலேயே அவர்கள் இவ்வாறு வலியுறுத்தி உபதேசித்தனர்.

ஃஃஃ

''பனிப்போர் என்று சொல்லப்படும் பழைய விரோதம் தேய்ந்து மறைந்தேயாக வேண்டும் என்று நம்புகிறேன். நன்கு நிலைப்பட்ட, அறிவு பொருந்திய தலைமையின் கீழ் இவ்விரோதம் மறையும் என்பது என் நம்பிக்கை'' என்று அமெரிக்க ஜனாதிபதி ஜான்ஸன் கூறியிருக்கிறார்.

''ருஷியாவுக்கும் அமெரிக்காவுக்குமிடையே ஒத்துழைப்பு தவிர்க்க முடியாதது. உலகிலுள்ள இவ்விரு பெருநாடுகள் ஒத்துழைக்காமல் இருக்க முடியாது'' என்று ருஷியப் பிரதமர் கோஸிஜின் கூறியுள்ளார்.

இச்செய்திகள் பிரார்த்தனையில் நம்பிக்கையுள்ளோருக்கெல்லாம் உற்சாகமூட்டும். அமெரிக்காவும் ருஷியாவும் ஒன்றுகூடி உலகில் அணு ஆயுத பயங்கரத்தை ஒழிக்கக் கூடும் என்பதே நம்மை முக்கியமாகக் கவரும் அம்சம்.

ஆழ்ந்த கருத்து வேற்றுமை இருந்த போதிலும் இவ்வாறு இருநாடுகளும் கூடி உழைப்பதன் அவசியத்தையும், அவ்வாறு உழைப்பது சாத்தியம் என்பதையும் ருஷியத் தலைவர்கள் உணர்ந்திருக்கின்றனர் என்பதையே கோஸிஜினின் கருத்து வலியுறுத்துகிறது.

ஒத்துழைப்பின் பயனைச் சமீபத்தில் கையெழுத்தான அணு ஆயுதப் பரவல் தடுப்பு ஒப்பந்தத்தில் காண்கிறோம். உலகில் ஆயுத பரிகரணம் ஏற்படுவதற்காக ருஷியா தயாரித்துள்ள ஒன்பது அம்சத் திட்டம், ருஷியாவும் அமெரிக்காவும் கூடிப் பணி புரிய வேண்டிய அவசியத்தை அடிக்கோடிட்டுக் காட்டுகிறது.

ஃஃஃ

ஜடப் பொருளுக்கும் உயிருக்குமிடை உள்ள பிரிவினைக்குப் பாலமிடுவதில் சயன்ஸ் நிபுணர்கள் மும்முரமாக இருக்கிறார்கள். அவர்கள் வெற்றியை நெருங்கி விட்டதாகச் சொல்லலாம். மனமும் உயிரும் எவ்வளவு சிக்கலான அமைப்புக்கள், அவை எப்படியெல்லாம் வளர்ந்துள்ளன என்று ஆராயும் போதே நமக்கு ஓர் அச்சமும் மரியாதையும் உண்டாகின்றன. இவ்வாறு நாம் கொள்கிற அச்ச உணர்வும் மரியாதை உணர்வும்கூட அந்த மனமெனும் விந்தையில் அங்கமே. இம்மனம், உயிர் ஆகியவையும் ஜடப் பொருளிலிருந்து பரிணமித்தவையே என்று ஸயன்ஸ் பெருமளவுக்கு நிலைநாட்டியிருக்கிறது. இதைக் கண்டு, ஏதோ ஒரு பெரிய புதிரைத் தீர்த்தாகிவிட்டது என்று சாமானிய மனிதன் எண்ணுகிறான். இது ஓர் அசட்டுத் திருப்தி. மனம், உயிர் இவற்றைக் குறித்த புதிரை இப்போது சயன்ஸானது ஜடப் பொருளிடம் திருப்பிவிட்டது என்பதே உண்மை. 'வெறும்' ஜடம் என்று இத்துணைக் காலமாக நினைக்கப்பட்ட ஒன்று உயிராகப் பரிணமிக்கும் என்பதால் அந்த ஜடவஸ்துவின் புதிர்த் தன்மை வெளிப்படுகிறது. எனவே, நம்முடைய பயபக்தியை இனி ஜடவஸ்துவின்பால் செலுத்த வேண்டும்.

உபநிஷதங்களிலிருந்து நாம் பெறுகிற தறிந்து தத்துவ ஞானம், ஜடத்துக்கும் உயிருக்குமிடையே மாறுபாடு காணவேயில்லை. 'ஆதியில் 'ஸத்' என்ற ஓர் உண்மை இருந்தது. அதிலிருந்தே சகலமும் உண்டாயின. 'ஸத்' ஒன்றுதான் உண்மை' என்பதே உபநிஷதக் கருத்து. நானூறு ஆண்டுகளுக்குமுன் கியோர்டினோ ப்ருனோ சொன்னார்: ''யாவுமே சாரத்தில் ஒன்றுதான்; யாவற்றுக்கும் காரணம் ஒன்றுதான். ஒவ்வோர் அணுவிலும் பௌதிகமும் ஆன்மிகமும் பிரிக்கவொண்ணுமல் கலந்துள்ளன. மாறுபட்டுப் பலவாகத் தெரிவதில் ஒன்றினைக் காண்பதே தத்துவ சாஸ்திரத்தின் இலட்சியம். 'ஆண்டவனின் அன்பு' என்பதே அறிவு ரீதியில் பார்க்கும்போது 'உலக வஸ்துக்கள் சகலத்திலுமுள்ள ஒருமைப்பாடு' என்று சொல்லப்படுகிறது. இந்த ஒருமை நிலைக்கு உயர்த்துவதே தத்துவ சாஸ்திரக் குறிக்கோள்.''

ப்ருனோவைப் போலவே, அவருக்கு முன்னால் தோன்றிய சங்கரரும் உயிரற்ற ஜடத்தின் ஒவ்வோர் அணுவிலும் ஆண்டவனைக் கண்டார்.

'ஸத்திலிருந்தே அகில விசுவமும் தோன்றியுள்ளன. சூனியத்திலிருந்து அவை தோன்றியிருக்க முடியாது' என்றார் சாந்தோக்கிய உபநிஷத முனிவர்.

ஜீவ சாஸ்திரப் பரிணாம நிபுணர்களின் ஆராய்ச்சியால் சின்னஞ்சிறிய ஜீவாணுவுக்குள் மனிதனாக வளர்வதற்குரிய சகல அம்சங்களையும் காண்கிறோம். இப்போது சயன்ஸ் நிபுணர்கள் உயிரற்ற ஜட அணுவுக்குள், ஜீவாணுவிலுள்ள சகலமும் இருப்பதாகச் சொல்கிறார்கள். எனவே, மதம் என்கிற பயபக்தி இப்போது 'உயிரற்ற' ஜடத்திடம் விஸ்தரிக்கப்பட வேண்டும். யிர் என்பது ஜடத்திலிருந்து தோன்றியது என்பதால் பயபக்தி மறைந்து விடவேண்டியதில்லை. உயிரிடத்தில் காட்டிய பயபக்தியை இனி ஜடத்திடமும் காட்ட வேண்டும்,

அமெரிக்காவில் வெளியாகும் 'ஸாடர்டே ரிவ்யூ'வில் ஜோஸப் க்ராட்ச் எழுதியுள்ள ஒரு கட்டுரையைப் படித்ததன் மீது இந்தச் சிந்தனைகள் எழுந்தன.

மூன்று சங்குகள் ஒன்றினுள் ஒன்றாக அமைந்ததுபோல் தோற்றமளிப்பது திரிசங்கு. அபூர்வமாகவே காணப்படும் திரிசங்கினை நண்பர் ஒருவரது பூஜை அறையில் பார்த்து விட்டுப் படம் பிடித்து அனுப்பியவர் **குமாரி சாரதா ராஜன்**. இந்தச் சங்குக்கு வெள்ளிப் பூண் போட்டுத் தாமரை வடிவில் அமைந்த வெள்ளித் தட்டின் மீது வைக்கப்பட்டிருப்பதைப் பொருளடக்கப் பகுதியில் காண்கிறீர்கள்.

# கல்லூரி மாணவர்களுக்கு.....

கல்கி பத்திரிகை தனது இருபத்தேழாண்டு இலக்கியப் பணியைப் பூர்த்திசெய்து இருபத்தெட்டாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கவிருக்கிறது. இந்த நன்னுளை யொட்டி இதோ [கல்லூரி மாணவ, மாணவியரின் இலக்கிய உணர்வு வளர உதவும் வகையில் ஒரு போட்டி.

ஆகஸ்டு 4-ந் தேதி இதழ் முதல் டிசம்பர் இறுதி இதழ் வரையில் கல்கிப் பத்திரிகையில் இடம் பெறும் எல்லாச் சிறப்புச் சிறுகதைகளையும் ஆழ்ந்து படித்துப் பாருங்கள். அவற்றில் சிறந்தது என நீங்கள் கருதும் ஏதேனும் ஒரு சிறப்புச் சிறுகதை குறித்து கல்கியில் இரண்டு பக்கங்களுக்கு மேற்படாத வகையில், இலக்கியத் திறனாய்வு செய்து எமக்கு 1969 ஜனவரி 15-ந் தேதிக்குள் கிடைக்குமாறு அனுப்பி வையுங்கள். சிறந்த இலக்கியத் திறனாய்வுக் கட்டுரைகளுக்கு முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகள் உண்டு. முதல் பரிசு: அடுத்த கல்லூரி ஆண்டுக்கான முழு சம்பளத் தொகை. இரண்டாம் பரிசு: இரண்டு 'டர்ம்' (Term) களுக்கான சம்பளத் தொகை. மூன்றாவது பரிசு: ஒரு 'டர்ம்' சம்பளத் தொகை. பரிசுத் தொகை கல்லூரி முதல்வருக்கு அனுப்பி வைக்கப்படும்.



திறனாய்வுக்குச் சிறப்புச் சிறுகதைகளை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். உறையின் மீது 'இலக்கியத் திறனாய்வுக் கட்டுரை' என்று குறிப்பிட்டு, ஆசிரியர், கல்கி, சென்னை—10 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். அடுத்த ஆண்டு கல்லூரிப் படிப்பைத் தொடர நினைப்பவர்கள் மட்டுமே இப்போட்டியில் கலந்துகொள்ளவும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. கட்டுரைகளைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கல்கி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

## ஓர்



அழகான முறையில் பல சித்திரங்களுடனும் மூவர்ண மேலட்டையுடனும் தயாராகியுள்ள இந்தச் சிறுகதைத் தொகுப்பில் **ராஜாஜி, அமரர் கல்கி, அகிலன், கு. அழகிரிசாமி, கி. ராஜேந்திரன்** ஆகியோர் எழுதிய ஏழு அருமையான சிறுகதைகள் அடங்கியுள்ளன.

**'பொன்னியின் செல்வன்'** மீண்டும் தொடர்ந்து கல்கியில் பிரசுரமாகவிருக்கும் குதூகல நிகழ்ச்சியையொட்டி கல்கி நேயர்களுக்கு இந்தப் புத்தகத்தை அன்பளிப்பாகத் தர முடிவு செய்துள்ளோம்.

ஒரு நிபந்தனை. ஜூலை 15ந் தேதி முதல் ஆகஸ்டு 15ந் தேதி வரை உள்ள ஒரு மாத இடைக்காலத்துக்குள் நமது காரியாலயத்துக்கு கல்கிக்கு ஓராண்டுச் சந்தாத் தொகை அனுப்பி வைப்பவர்களுக்கு மட்டுமே இந்தப் புத்தகம் இலவசமாக வழங்கப்படும்.

ஏற்கனவே நமது காரியாலயத்தில் கல்கிக்குச் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொண்டிருப்பவர்களும் இந்தப் புத்தகத்தை

வயோதிகர், வாலிபர் வாண்டுகள் முதலிய குடும்பத்தில் உள்ள அனைவரும் விளையாட்டாகப் பங்கு பற்றி மகிழ்ந்து பரிசும் பெறக்கூடிய ஒரு சுவாரஸ்யமான போட்டி பற்றி ஆகஸ்டு 4ந் தேதி ஆண்டு மலரில் அறிவிக்கிறோம். பரிசு: ஓராண்டுக்கான கல்கி சந்தா! 52 கல்கி இதழ்கள் வெற்றி பெற்றவரின் வீடு தேடி வரும். வெற்றி பெறுபவர் ஏற்கெனவே கல்கி சந்தாதாரராக இருப்பின் அவரது சந்தா ஓராண்டுக்கு நீடிக்கப்படும்.

# ஆகஸ்டு 4உ ஆண்டு மலரில் புதிய அம்சங்கள்:

- ஹனுமான் சிரித்தார்! — ராஜாஜி
- மகரிஷியின் குறுநாவல்: **துயரங்கள் உறங்குவதில்லை!'**
- பொன்னியின் செல்வனுக்கு வண்ண ஓவியங்கள்
- சிறப்புச் சிறுகதை
- சிறுவர் விருந்து: வாண்டு மாமா அளிக்கும் வண்ண மடல்
- சினிமா சிந்தனை
- எழுத்தில் புதுமை
- குடும்பப் பிரச்னை

128 பக்கங்கள் — விலை: 40 காசு

# அன்பளிப்பு




இலவசமாகப் பெற முடியும். அதற்கு அவர்கள் மேலே குறிப்பிட்டுள்ள காலத்துக்குள் (15–7–68 முதல் 15–8–68க்குள்) தங்கள் சந்தாவை ஒரு வருடத்துக்குப் புதுப்பித்துக் கொண்டால் போதும். அவர்களுடைய தற்போதைய சந்தா எந்தத் தேதியில் முடிகிறதோ, அதற்கு அடுத்த இதழிலிருந்து தொடங்கி மேலும் ஓராண்டுக்குப் புதுப்பிக்கப்படுவதுடன் **'பிரபல நட்சத்திரம்'** சிறுகதைத் தொகுப்பும் இலவசமாக அனுப்பப்படும்.

ஓர் ஆண்டுச் சந்தாவை மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு நேரடியாக மேற்படி தேதிக்குள் அனுப்ப வேண்டுகிறோம். சந்தாத் தொகை அனுப்பும்போது **"கல்கி சந்தா – புத்தக அன்பளிப்புத் திட்டம்"** எனத் தவறாது குறிப்பிடவும்.

**ஆண்டுச் சந்தா**

**இந்தியா: ரு 20 வெளிநாடு: ரு. 40 இலங்கை: ரு. 21** (இலங்கை நாணயம்)





[கலகக்கார நாகர்கள் மூவாயிரம் பேர்கள் இன்று செஞ்சீனாவில் கெரில்லாப் போர்முறை பயிற்சி பெற்று வருகிறார்கள் என்ற ஜூலை 14ந் தேதி செய்தி இந்த எல்லைப் புறப் பிரதேசம் பற்றிய கவலையை அதிகரித்திருக்கிறது.]

“உங்களுக்குத் தெனாலிராமன் கதை தெரியுமல்லவா? 'என் முகத்தில் இனி விழிக்காதே' என்று அரசன் கட்டளை இட்டதும் தெனாலிராமன் முகத்தையும் தலையையும் மாத்திரம் ஒரு பானையால் மூடிக் கொண்டு, தன்னைத் தலைமறைவு செய்துகொண்டு அரச சபைக்கு வந்தானாம். இது போலத்தான் 'தலை மறைவு நாகர்கள்' என்று குறிப்பிடப் படுபவர்களும் செய்கிறார்கள். தலையில் பானை இல்லாமலேதான் அவர்கள் இன்றும் நடமாடுகிறார்கள். ஆனாலும் அவர்களுக்குத் தலைமறைவு நாகர்கள் என்ற பெயர் நிலைத்துவிட்டது” என்று ஆரம்பித்தார் ஸ்ரீ வி. கிருஷ்ணமூர்த்தி.

# நாகாலாந்தில்

**பார்லிமெண்டு உறுப்பினரான கடலூரைச் சேர்ந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி** சமீபத்தில்தான் நாகாலாந்துப் பிரதேசத்தில் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு திரும்பி இருந்தார். மேலும் தொடர்ந்து அவர் பேசியதிலிருந்து இன்றைய நாகாலாந்தைப் பற்றிப் பல ரசமான விஷயங்களைச் சேகரிக்க முடிந்தது.



நான்கு மாவட்டங்களைக் கொண்டு இணைக்கப்பட்டிருக்கும் பிரதேசம்தான் நாகாலாந்து. இதன் தலைநகரம் கோஹிமா. தலைநகரம் என்றவுடன் சென்னையைப் போலவோ ஹைதராபாத்தைப் போலவோ இருக்குமென்று நினைத்துவிட வேண்டாம். சுமார் ஆயிரம் வீடுகளைக் கொண்ட சிறிய கிராமம்தான் இது. இதற்கு நவீன நாகரிக வசதிகள் சமீபத்தில்தான் அளிக்கப்பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு மாவட்டமும் ஒரு டெபுடி கமிஷனர் மேற்பார்வையின் கீழ் இருக்கிறது. முதல் மந்திரி அங்காமி கோஹிமாவில் தம் காரியாலயத்தை வைத்துக் கொண்டிருக்கிறார். நாகாலாந்துக்கு என்று தனி கவர்னர் கிடையாது. அஸ்ஸாம், மணிபூர், நாகாலாந்து மூன்றுக்கும் சேர்ந்துதான் ஒரே கவர்னர். நாகர்களுக்கு இது ஒரு குறை. தங்களுக்கு என்று ஒரு தனி கவர்னர் தேவை என்பதையும் அடிக்கடி ஒரு பிரச்னையாக எழுப்புகிறார்கள்.

நாகாலாந்தின் மொத்த ஜனத்தொகை ஒரு லட்சத்து தொண்ணூற்று ஓராயிரம்தான். அநேகமாக ஆண் பெண்கள் சரி

சமமாகவே இருக்கிறார்கள். வரி போடுதல், வசூலித்தல் முதலிய தொல்லைகள் இந்த நாட்டு முதன் மந்திரிக்கோ, அவருடைய சகாக்களுக்கோ கிடையாது. காரணம், இவர்களுடைய சர்க்காரில் வரி போடுதல் என்ற பேச்சே கிடையாது. இந்தப் பிராந்தியத்தின் பராமரிப்பு முழுதையும் மத்திய அரசாங்கம் ஏற்றுக் கொண்டு ஆண்டு ஒன்றுக்கு இருபத்தைந்து கோடிகளை வாரி வழங்குகிறது. அப்பாவி நாகர்களுக்குச் சம்பளமாகவும், மானியமாகவும் வழங்கப்படும் தொகைகளில் ஒரு பகுதியை, தலைமறைவு நாகர்கள், வாய்ச் சவுடாலாலும், மிரட்டலாலும் பறித்துக் கொண்டு போய், சர்க்

**படங்கள் :**

இடது பக்கத்தில் :—

- ☐ நாகாலாந்தில் ஒரு பள்ளிக்கூடம்.
- ☐ சாலை அமைக்க உதவும் நாகர்குல நங்கையர்.
- ☐ நாகாலாந்தில் நிலைமையை ஆராய்ந்து திரும்பிய ஸ்ரீ வி. கிருஷ்ணமூர்த்தி (தமிழக எம்.பி)

இந்தப் பக்கத்தில் :—

- ☐ பெரும்பாலான நாகர்கள் அமைதியான வாழ்க்கையையே விரும்புகிறார்கள். எனினும் துப்பாக்கி ஏந்திய ராணுவத்தினரின் பாதுகாப்போடுதான் அவர்கள் விவசாயத்தில் ஈடுபட முடிகிறது.
- ☐ நாகர்ப் பெண்மணியின் விசித்திர ஆடை.
- ☐ உழைப்புக்கு அஞ்சாத அவர்கள் காட்டைத் திருத்தி வயலாக்குகிறார்கள்.





# நடப்பது என்ன?



காரரையே எதிர்க்க உபயோகப்படுத்துகிறார்கள்.

கலகக்கார நாகர்கள் என்று சொல்லப்படுபவர்களின் எண்ணிக்கை எண்ணாயிரத்துக்கு அதிகமாக இருக்காதாம். இவர்கள் அவ்வப்போது ஒதுங்கி வாழும் சாது நாகர்களைப் பயமுறுத்தி அவர்களில் சிலரைத் தங்கள் படைகளில் வலுக் கட்டாயமாகச் சேர்த்துக் கொள்கிறார்கள். இந்தத் தலைமறைவு கலகக்கார நாகர்களுடைய தலைவர்களில் மகிஷு, மால், குஹாதோ ஷுகாய், ஜெனரல் கயத்தோ முதலியவர்கள் முக்கியமானவர்கள்.

இவர்களில் மால்தான் பிரதம சேனாதிபதியாம். இப்போது செஞ்சீனாவில் இருக்கிறார், பயிற்சி பெற்றுக் கொண்டு! குஹாதோ ஷுகாய் பிரதம மந்திரியாக இருந்து துரத்தப்பட்டவர். கயத்தோ தாம்தான் இப்போது பிரதம மந்திரி என்று சொல்லிக் கொள்கிறார். இவர்களுக்குள்ளேயே ஜனநாயக அரசியல் அமைப்புத் தேவையா — அல்லது சர்வாதிகார ஆட்சி தேவையா என்ற அபிப்பிராய பேதமும் உண்டு. ஒரு காலத்தில் தலைமறைவுக்காரர்களாக இருந்தவர்களில் பலர், இன்று சட்டசபை உறுப்பினர்களாக அங்காமி சர்க்காரில் செயலாற்றுகிறார்கள்.

செஞ்சீனப் பகுதிக்குக் கெரில்லாப் போர்முறை பயிற்சிக்காகப் போகும் கலகக்கார நாகர்கள் பர்மியப் பிரதேசத்தைக் கடந்துதான் செல்ல வேண்டும். பர்மியப் பிரதேசத்தில் காவல் உண்டு. பெயரளவில்தான். இதற்காகப் போகும்போது ஒவ்வொருவராக, இடைவெளிவிட்டுக் காடுகளில் புகுந்து செல்கிறார்கள். ஆனால் பயிற்சி பெற்றுத் திரும்பும்போது கூட்டமாகத் துணிந்து திரும்புகிறார்கள். இவர்களைத் தடுத்துப் பிடிக்கப் போதுமான அளவில் காவல் படையினர் இல்லாததே காரணம். பர்மிய எல்லைப்புறக் காவலை இப்போது தீவிரப்படுத்தும் யோசனையும் இருக்கிறது.

இந்தக் கலக நாகர்களுக்கு ஆயுதவெறியை ஏற்படுத்தியது இரண்டாவது உலகப் போர். ஜப்பானியர்கள் காலி செய்யும் வேகத்தில் அவர்களிடமிருந்த துப்பாக்கிகள், மெஷின்கன்கள் முதலிய தளவாடங்களை விட்டுவிட்டுச் சென்றார்கள். அவைகளைப் பொறுக்கி எடுத்த நாகர்கள் அவற்றைக் கொண்டு மற்றவர்களை மிரட்டிக் கொண்டிருந்தார்கள். இந்த ஆயுதங்களையெல்லாம் நாளடைவில் சர்க்கார் பறிமுதல் செய்தும், அவர்களிடம் தோன்றியிருந்த ஆயுத வெறி உணர்ச்சியைப் பறிமுதல் செய்ய முடியவில்லை. அந்த வெறியை நன்கு புரிந்து கொண்டுதான் சீனர்கள் இப்போது ஆயுத தானம் செய்ய முன்வந்திருக்கிறார்கள். அப்போதுதானே, அவர்களுக்குச் சாதகமான சூழ்நிலையை உண்டாக்கிக் கொள்ள முடியும்?

இங்கிருந்த மைக்கேல் ஸ்காட் பாதிரியார், ஒரு நல்ல கைங்கரியத்தைச் செய்துவிட்டுப் போயிருக்கிறார். நாகர்கள் அனைவரையும் ஆங்கிலம் கற்கச் செய்திருக்கிறார். அவர்களுடைய பல்வேறு மொழிகளையும் ரோமன் லிபியில் அமைக்க உதவியிருக்கிறார். ஆகவே, கலக நாகர்கள் உலகச் செய்திகளை ஆங்கிலத்தின் மூலம் நன்கு அறிந்து கொள்கிறார்கள். தங்களைப் பற்றிய செய்திகளைப் பத்திரிகைகளில் பார்க்கும் போது அவர்களுக்குப் பெருமை தாங்குவதில்லை. அதைக் காண்பித்தே அப்பாவி நாகர்களை மிரட்டி, ''பார்த்தீர்களா, எங்கள் வீரத்தை! கொஞ்ச நாளில் தில்லியையே அடிபணிய வைத்து விடுவோம்!'' என்று மார் தட்டித் தங்கள் தேவைக்கான பணத்தை வசூலித்துக் கொண்டு விடுகிறார்கள். 'தலைமறைவு நாகர்களின் அட்டகாசங்களைப் பற்றி அதிகம் பத்திரிகைகளில் வெளியிடாமல் இருப்பதே, நாம் மற்ற நாகர்களுக்குச் செய்யக்கூடிய நன்மையாகும்' என்று நாகாலாந்து அரசாங்க அதிகாரிகள் நினைக்கிறார்கள். ஆனால் நாகாலாந்து நிலவரம் பற்றி மக்கள் நன்கு தெரிந்து கொள்ளச் செய்ய வேண்டியதைப் பத்திரிகைகள் கடமையாகக் கருதுகின்றனவே !

கடந்த பதினைந்து ஆண்டுகளாக நாகாலாந்துப் பகுதியில் உதவி கமிஷனராக இருக்கும் நபர் ஒருவர் கால்நடையாகவே சுமார் நாலாயிரம் மைல்கள் போய் அநேகமாக எல்லா நாகர்களையுமே நேரில் சந்தித்திருக்கிறார். 'நாகர்களில் எழுபத்தைந்து சதவிகிதத்துக்கு மேலாகவே விசுவாசமுள்ள பிரஜைகளாக இருக்கிறார்கள். மீதி உள்ளவர்கள்தான் அமைதியை விரும்பாதவர்களுடன் தோழமை கொள்பவர்களாக இருக்கிறார்கள்' என்பது அவர் கண்டறிந்த விஷயம்.

கோஹிமாவுக்குச் சமீபத்திய ரயில் நிலையம் டிம்மாப்பூர். சுமார் நாற்பது மைல் தூரத்தில் இருக்கிறது. இந்த ரயில் நிலையத்தைக்கூட சென்ற ஆண்டில் கலக நாகர்கள் ஒரு கை பார்த்தார்கள்.

இந்த நாற்பது மைல் பாதையும் அடர்த்தியான காடுகள், செங்குத்தான மலைகள் வழியாகச் செல்லுகிறது. கலக நாகர்கள் ஒளிந்து தாக்குவதற்கு மிக வசதியான இடங்கள் இங்கே இருக்கின்றன. அமைதி உடன்பாடு ஏற்படுவதற்குமுன் டிம்மாப்பூரிலிருந்து கோஹிமா போவதற்கு ஆண்டவன் அருள்தான் அதிகம் தேவையாக இருந்தது.

கோஹிமா சுத்தமான கிராமமாகவே காணப்படுகிறது. மக்களும் துப்புரவாகவே இருக்கிறார்கள். பள்ளிக்கூடங்கள் நிறைய இருக்கின்றன. நாகர்களில் பெரும்பாலோர் சர்க்கார் காரியாலயங்களில் பணியாற்றுகிறார்கள். மாட்டிறைச்சி அவர்களுடைய பிரதான உணவு.

நாகாலாந்தின் மேற்பார்வை, உள்நாட்டு அமைச்சின் பிடியில் இல்லாமல் வெளிநாட்டு விவகார அமைச்சிடம் இருப்பது ஒரு விநோதமான விஷயம். மத்திய அரசின் காபினெட் அந்தஸ்து பெற்ற மந்திரிகள் யாரும் நாகாலாந்துக்குப் போய் வராதது மற்றொரு விசித்திரமான விஷயம். போய் வருபவர்கள் துணை மந்திரிகளாகவும் உதவி மந்திரிகளாகவும் இருக்கிறார்கள் !

உட்பகுதியில் தள்ளியிருக்கும் கிராமங்களுக்கு இப்போது யாரும் போய்வரலாம். முன்போல் தாக்கப்படுவோமோ என்ற பயத்துக்கு இடமில்லை. கலக நாகர்கள் இப்

# வரிப் பூனை !

வரிக்குதிரை, வரிப் புலி என்பதைப் போல் வரிப் பூனை என்ற ஓர் இனமும் இருக்கிறது என்பதை நிரூபிக்கிறது இந்த விசித்திரக் காட்டுப் பூனை ! மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த டுயிஸ்பர்க் என்ற இடத்தில் உள்ள மிருகக் காட்சி சாலைக்கு வந்து சேர்ந்துள்ள இந்தப் புதிய பேர்வழிக்குத் தாயகம் கம்போடியா.

— யூ. பி. எஸ்.



## நடிகர் மன்றங்கள் அங்கும் உண்டு



சிவாஜி சங்கம், எம். ஜி. ஆர். மன்றம் எல்லாம் ஏராளமாய் இருப்பது நமக்குத் தெரியும். ஹாலிவுட்டிலும் கூட சில நடிகர்களின் பெயர்களில் மன்றங்கள் உள்ளன. டானி கர்டிஸ் மன்றம் எப்போதும் அவருடைய மனைவி ஜெனெட் லேயோடு அவரே நடிக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறது. இத்தகைய மன்றங்களினால் நடிகர்களுக்கு எவ்வித இன்னலும் ஏற்படுவதில்லை. ஒரு மன்றமும், மற்றொரு மன்றமும் மோதுவதை அங்கு காண முடியாது. அங்குள்ள நட்சத்திரங்களில் பெரும்பாலானவர்கள் அரசியலைப் பற்றிக் கவலைப்படுவதே இல்லை.

— பி. வி. கிரி

போது தங்கள் முகாம்களைக் காடுகள் மத்தியில் அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனாலும் அவர்களில் சிலர் வரும் பொதுத் தேர்தலில் நிற்க விரும்புகிறார்களாம்.

நாகாலாந்து, அஸ்ஸாம், மணிப்பூர் ஆகியவற்றில் இருக்கும் நாகர்கள் வாழ்பிரதேசங்களை யெல்லாம் இணைத்து ஒரு தனிப் பிரதேசமாக உருவாக்க வேண்டும் என்பது கலகக்கார நாகர்களின் கோரிக்கை. நாகாலாந்துக்குத் தனி கவர்னர் வேண்டும் என்பது இவர்கள் லட்சியம். இந்த நிலைமையைச் சீனர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள முன்வருகிறார்கள். இவர்களும் சீனர்களின் தூண்டுதலுக்கு ஆளாகிக் கலவரத்தில் ஆனந்தம் காண்கிறார்கள். எல்லைப்புறத்தில் இப்படி அமைதி குலைந்திருப்பது எவ்வளவு ஆபத்து என்பதை விவரிக்க வேண்டியதில்லை.

''கோஹிமாவிலும் நமது தமிழர்கள் இருக்கிறார்கள். அவர்கள் போகாத இடமில்லை. முதல் மந்திரி அங்காமியின் அந்தரங்கக் காரியதரிசியே நம் மயிலாப்பூரைச் சேர்ந்த ஷண்முகம் என்பவர்தான். கோஹிமா வானொலி நிலைய நிர்வாகியும் ஒரு தமிழர் தான். நாகர்களைக் குஷிப்படுத்த மத்திய சர்க்கார் அங்கே ஒரு வானொலி நிலையத்தையும் நிறுவியிருக்கிறார்கள்'' என்று முடித்தார் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி.

''இப்போது நாகாலாந்து சென்று திரும்பியவர் நீங்களா அல்லது நானா என்ற சந்தேகம் வந்துவிட்டது'' என்று சொல்லி விடைபெற்றேன்.

— திருமூலர்




விவசாயம் என்று எடுத்துக் கொண்டால் ஆராய்ச்சிக்கு அதில் எத்தனையோ கிளைகள் இருப்பதை அறிவோம். விதைகளைப் பற்றி ஆராயப் புகுந்தால் அதற்கு ஒருவர் வாழ் நாள் காணாது என்று ஆகிவிடும். அப்படியே தான் எரு வகைகள்; அப்படியேதான் நீர் வளம் பற்றிய விஷயங்கள்.

ஆகவே, இப்படிப்பட்ட விவசாயத் துறையில் ஒருவர் ஆராய இறங்குகிறார் என்றால் அவர் ஏற்கனவே பல்லாண்டுகள் இவ் விஷயம் பற்றிப் படித்து, பயின்று தேர்ந்திருப்பார் என்றுதானே நினைப்போம். ஆனால் டாக்டர் தட்சிணாமூர்த்தி இந்த விதிக்கு முற்றும் மாறுபட்டவர். சற்றும் எதிர்பாராத விதமாக விவசாய ஆராய்ச்சித் துறைக்கு வந்து சேர்ந்தார். தற்சமயம் டில்லியிலுள்ள இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகத்தில் பௌதிக விவசாயத் துறைக்குத் தலைவராக விளங்கும் டாக்டர் சி. தட்சிணாமூர்த்தி.

டாக்டர் தட்சிணாமூர்த்தி படித்தது பௌதிக விஞ்ஞானம். அதிலும் அணு விஞ்ஞானத்தில் (Nuclear Physics) ஆராய்ச்சிகள் புரிந்து வந்தார். இருபதாண்டுகளுக்குமுன் சென்னை அரசாங்கம், வெளிநாடுகளில்சென்று ஆராய்ச்சி புரியத் தருவதாகச் சொன்ன உபகாரச் சம்பளம் அவரைச் சாதாரண பௌதிக ஆராய்ச்சியிலிருந்து, விவசாயத் துறைக்குத் தொடர்பு கொண்ட மண்வள பௌதிக ஆராய்ச்சிக்குத் திருப்பி விட்டது. அந்தத் துறையில் அவர் மகத்தான வெற்றி கண்டு உலக விஞ்ஞானிகளால் மதிக்கப்படும் விஞ்ஞானியாகப் புகழ் ஈட்டி விட்டார்!

பௌதிக ஆராய்ச்சியிலும் விவசாய ஆராய்ச்சியிலும் ஈடுபட்டுள்ள விஞ்ஞானிகள் இந்தியாவில் ஒருசிலரே. அவர்கள் யாவரும் டாக்டர் சி. தட்சிணாமூர்த்தி அவர்களிடம் ஊக்கமும் பயிற்சியும் பெற்ற விஞ்ஞானிகளே!

அணு ஆராய்ச்சியின் விளைவாகக் கண்டு பிடிக்கப்பட்டது ரேடியோ ஐஸோடோப்புக்கள். இவை வைத்தியத் துறையிலும் இன்னும் பல துறைகளிலும் மனிதனுக்கு லாபகரமாகப் பயன்படக் கூடியன! ஆகவே, இந்த ரேடியோ ஐஸோடோப்புகள் விவசாயத்தில் எந்த அளவுக்குப் பயனாகின்றன என்பதை ஆராய உலகில் ஏழு நாடுகளில் ஏழு இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அதில் ஒன்று இந்தியா. இங்கு இந்தப் பொறுப்பு டாக்டர் தட்சிணாமூர்த்தி அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. 'மண்ணின் மேல் பாகத்திலிருந்து, வேருக்கு ஐயான் சத்துக்கள் எந்த வேகத்தில் செல்கின்றன' என்பதை ஆராய ஐ. நா. சபையின் ஆதரவில் நடக்கும் உணவு விவசாயக் கழகமும், அகில உலக அணுசக்திக் கமிஷனும் இத்திட்டத்தை மேற்கொள்ளச் செய்திருக்கின்றன. இத் துறையில் ஆராய்ந்து, தமது முதல் அறிக்கையை வியன்னாவில் நடைபெற்ற இத்துறை விஞ்ஞானிகள் கூட்டத்தில் சமர்ப்பித்தார். இவ் விஷயம் பற்றி எப்படி ஆராய வேண்டும் என்பதனைக் குறித்து அவர் சில யோசனைகளை வெளியிட்டிருந்தார். அவை இதுவரையில் கேள்விப்படாத முறைகளாக இருந்ததால் அங்கு கூடியிருந்த விஞ்ஞானிகளின் பாராட்டைப் பெற்றன.

அவர் 1948ல் ஒவ்வொரு வகை மண்ணுக்கும் களிமண்ணுக்கும் தனிப்பட்ட ஐஸோ கண்டக்டிவ் வால்யூ (Iso Conductive Value) இருக்கிறது என்றும், அதற்குத் தகுந்தபடி தான் மண்ணின் வளம் அமைகிறது என்றும் கூறினார். இக்கருத்தினை மற்ற அந்நிய விஞ்ஞானிகளும் உண்மை என்று தங்கள் ஆராய்ச்சி மூலம் கண்டு ஒப்புக் கொண்டனர். இந்த உண்மையை முதலில் வெளியிடக் கூடிய வாய்ப்பும் பெருமையும் அவருக்கு அமைந்ததற்குக் காரணம், அன்று வெளிநாடு செல்லச் சென்னை அரசாங்கம் அளித்த உபகாரச் சம்பளமே! பிரிட்டனில் பிரிஸ்டலிலிருந்தபோதுதான் மேற்கண்ட ஆராய்ச்சி முடிவை வெளியிட்டார்.

விஜயநகரத்துக்குப் பக்கத்தில் ஒரு கிராமத்தில் பிறந்த தட்சிணாமூர்த்தி அவர்கள் ஆந்திர சர்வகலாசாலையில் எம். எஸ்ஸி. பட்டமும் காசி ஹிந்து சர்வகலாசாலையில் டி. எஸ்ஸி. பட்டமும் பெற்றார்.

இவர் எந்தப் பதவி வகித்தாலும், அது இவருக்காக ஏற்படுத்தப்பட்ட பதவியாக இருந்ததே தவிர, முன்னிருந்த ஒருவர் காலி செய்த பதவியை ஏற்றுக் கொண்டார் என்ற நியதி இவர் வாழ்க்கையில் இல்லை!

இங்கிலாந்துக்குப் போகுமுன் சர்வகலாசாலைப் பேராசிரியராக இருந்தார். இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்ததும், டில்லியிலுள்ள இந்திய விவசாயக் கழகத்தில் சேர்ந்தார். இங்குள்ளது போன்ற பௌதிக விவசாய ஆராய்ச்சித் துறை உலகில் வேறு மூன்று தேசங்களில்தான் உள்ளது!

டாக்டர் தட்சிணாமூர்த்தி, விஞ்ஞானத் துறையில் டாக்டர் ஸி. வி. ராமன் வழியைப் பின்பற்றுபவர். அவர் அறையில் டாக்டர் ஸி. வி. ராமன், டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன், டாக்டர் எஸ். பகவந்தம் இவர்களது படங்கள் திகழ்வதைக் காணலாம்!

ஆதாரம்: ''ஹிந்து''



# புதிய பூமி

டாக்டர் கதிரவன் ஒரு போலீஸ் அதிகாரியின் மகன்; பிரபல கொள்ளைக்காரனாகிய காங்கேயனைப் பிடிக்க அந்தப் போலீஸ் அதிகாரி தீவிர முயற்சி எடுத்துக் கொண்டிருந்ததனால் கொள்ளைக் கூட்டத்தினர் கதிரவனைத் தீர்த்துக் கட்டிப் பழி தீர்த்துக் கொள்ள முயன்று அவனிடம் உதை வாங்கிக் கட்டிக் கொள்கின்றனர். (ஒரு டாக்டருக்கு இத்தனை சண்டைப் பயிற்சி எங்கே அளிக்கிறார்களோ!) காயமடைந்த கதிரவனைக் காப்பாற்றிய மலையடிவாரக் கிராமத்து நங்கை கண்ணம்மாளுக்கும் கதிரவனுக்கும் கடைசியில் டும் டும் டும் பீப்பீ!

"புதிய பூமி" திரைக் கதையிலோ, பாத்திரங்களின் படைப்பிலோ, நடிகர்களின் தேர்விலோ, அல்லது நடிப்பிலோ புதுமையும் இல்லை; புரட்சியும் இல்லை. ஆனால் வறட்சி இருக்கிறது! தமிழகத்தில் திரைக் கதைக்கு ஏற்பட்டிருக்கும் வறட்சி காரணமாகத்தானே திரைக் கதைக்காக வடநாட்டுக்குக் காவடி தூக்குகிறார்கள்! காவடி தூக்கியதுதான் தூக்கினார்களே, நல்ல, அழுத்தமான கதையாகப் பெற்று வரக்கூடாதா? மாலாசின்ஹா நடித்து வண்ணப் படமாக வெளிவந்த "ஹிமாலய் கி கோத்மே" என்ற ஹிந்திப் படத்தை அப்படியே தமிழாக்கி யிருக்கிறார்கள்.

மாலா சின்ஹாவின் பாகத்தை நம் தமிழ் நாட்டுக் கவர்ச்சிக் கன்னி ஜயலலிதா ஏற்றிருக்கிறார். காலையும் கையையும் தூக்கி, இடுப்பை வளைத்து இன்னும் என்னவெல்லாமோ கோணங்கி செய்து ஆடுகிறார். எம். ஜி. ஆர். இதற்கெல்லாம் சளைத்தவரா? பதிலுக்குச் சக்கைப் போடு போடுகிறார். சண்டைக் காட்சிகளில் கேட்க வேண்டுமா? அவருக்கு இணை அவர்தான். ஏழை மக்களோடு ஏழை மகனாக ஆடிப் பாடிக் குதிக்கும் காட்சியில் ரசிகப் பெருமக்களின் கரகோஷ ஆரவாரத்தை அமோகமாகப் பெறுகிறார்!

இந்தப் படத்தில் இரண்டு ஆபரேஷன் காட்சிகள் வருகின்றன. இரண்டும் சரியாகச் செய்யப்படவில்லையாதலால் பொறுமையைச் சோதிக்கின்றன. வெட்டி எறிந்திருக்கலாம்!

நம்பியார், அசோகன் இருவரும் வழக்கம்போல் நடித்திருக்கின்றனர். விசேஷமாகக் கூற எதுவும் இல்லை. பண்டரிபாய் பரம்பரையாக வந்து கொண்டிருக்கும் திரையுலகத் தாய்!

கதிரவனின் அத்தை மகள் நளினாவாக வரும் ஷீலா கொள்ளைக்காரர்களிடம் நெக்லேஸைப் பறி கொடுத்துத் திரைக் கதைக்குப் பெரிதும் உதவிய தோடு சரி. நம் நினைவிலிருந்து மறைந்து விடுகிறார்.

நாகேஷ் — ரமாப்ரபா இருவரும் தமாஷ் ஜோடி. நாகேஷின் அனுமான் உபாசனை, விரதம் இவையெல்லாம் 'முரடன் முத்து' வில் வந்த கதைதானே! எப்படி ரஸிப்பது? ஒரு பருவப் பெண்ணின் முதுகில் ஊர்ந்த கரப்பான் பூச்சியை அவன் ஜாக்கெட்டுக்குள் கையை விட்டுப் பிடித்து.... ஐயைய்ய...! என்ன அசிங்கமான காதல்!

"நான்தாண்டி காத்தி" என்ற கிராமப் பெண்களின் நடனப் பாட்டும் நடனமும் ஒரே 'போர்!' கொடிது கொடிது இரண்டுமே கொடிது! "சின்னவளை முகம் சிவந்தவளை" என்ற பாட்டு நன்றாயிருக்கிறது.

படத்தில் திரைக் கதை: குகநாதன் என்று வெளியிட்டிருக்கிறார்கள். அது தவறு. "ஹிமாலய் கி கோத்மே" என்ற ஹிந்திப் படத்தின் தமிழாக்கம் என்று வெளியிட்டிருந்தால் கௌரவமாக இருந்திருக்கும்.

புதிய பூமி — பூமி இருக்கிறது. புதுமை எங்கே? எங்கே?










[கல்லூரி மாணவ மாணவிகளுக்காகச் சர்வதேச ரீதியில் நடந்த ஆங்கிலச் சிறுகதைப் போட்டி ஒன்றில் தில்லி சர்வகலாசாலையைச் சேர்ந்த தமிழக யுவதி ஒருத்திக்கு முதற் பரிசு கிடைத்திருக்கிறது. —பத்திரிகைச் செய்தி]

பரிசு பெற்ற மாயாகிருஷ்ணமூர்த்தி இப்போது சென்னையில்தான் இருக்கிறார் என்று தெரிந்து கொண்டு ஃபோன் செய்தேன்.

''மாயா கிருஷ்ணமூர்த்தி அவர்களைச் சந்திக்க வேண்டும் — சிறுகதைப் போட்டியில் வெற்றி பெற்ற விஷயம் பற்றி...?''

''மாயாவா? அப்படி யாரும் இங்கே இருப்பதாகத் தெரியவில்லையே!... இந்த விலாசம் தானுவென்று கவனித்தீர்களா?''

''அவரைச் சியாமளா வென்றும் கூப்பிடுவார்களாம்!''

''கொஞ்சம் இருங்கள்! எங்கள் வீட்டுப் புது மருமகள் பெயர் அதுதான். டில்லிப் பெண்! கேட்கிறேன்...''

சில விநாடிகள் ஓய்வுக்குப் பின் டெலிபோனின் மறுமுனையிலிருந்து ஓர் இளைஞர் குரல் ஒலித்தது.

''ஹலோ...! நான்தான் சியாமளாவின் கணவர் பேசுகிறேன். உங்களுக்கு என்ன வேண்டும்?''

''உங்கள் மனைவி சமீபத்தில் நடந்த அகில உலகச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற விஷயம் பற்றிப் பேச அவரைச் சந்திக்க விரும்புகிறேன்... எப்போது...?''

''நீங்கள் சொல்வது புரியவில்லையே! அவள் கதை எழுதுகிறாளா? அவளுக்குப் பரிசு கிடைத்திருக்கிறதா?... ஒரு நிமிஷம்! அவளையே பேசச் சொல்லுகிறேன்.''

''ஹலோ ?''

''கன்ராகுலேஷன்ஸ்'' என்றேன் சம்பிரதாயமாக.

''எதற்கு?''

''அமெரிக்கக் கல்லூரி ஒன்று நடத்தும், 'பிகாஸஸ்' (Pegasus) என்னும் இலக்கிய சஞ்சிகையில் வெளியான உங்கள் சிறுகதைக்கு முதற் பரிசு கிடைத்ததற்காக!''

''அப்படியா? எனக்குத் தெரியாதே! அந்தக் கதையின் தலைப்பு என்ன என்று சொல்ல முடியுமா?''

''தி ரிப்ரீவ்'' (The Reprieve) என்பது தலைப்பு.''

''ஆமாம்!... நான் எழுதி அனுப்பிய கதை தான். அதை நான் மறந்தே போய்விட்டேன். பரிசு கிடைத்த விஷயம் பற்றி எனக்கு ஏதும் தகவல் இல்லையே!''

''சென்ற மாத மத்தியில் 'ஹிந்து'ப் பத்திரிகையில் 'டில்லி யுவதியின் திறமை' என்ற தலைப்பில் இந்தச் செய்தி ஏழாம் பக்கத்தில் வெளியாகி யிருந்ததே...''

''அப்படியா? என் திருமண மும்முரத்தில் பத்திரிகைச் செய்தியைக் கவனிக்காமல் இருந்திருப்பேன். இப்போது தேடிப் பார்க்கிறேன்.''

''நாளைக் காலையில் சுமார் பதினொரு மணி அளவில் தங்களைச் சந்திக்க வரலாமா?''

''என் கணவரைக் கேட்டுச் சொல்லுகிறேன்!''

ஃ ஃ ஃ

ஆரம்பக் கல்வியை டில்லிப் பள்ளிகளில் முடித்துக் கொண்ட சிறுமி சியாமளாவுக்கு வாஷிங்டன் நகரில் உள்ள உட்ரோ வில்சன் உயர்நிலைப் பள்ளியில் பதினொராவது வயதிலிருந்து பதினாறுவது வயது வரை படிக்கும் வாய்ப்புக் கிட்டியது. காரணம் தில்லியில் உயர்ந்த உத்தியோகத்திலிருந்த இவர் தந்தை திரு சி. எஸ். கிருஷ்ணமூர்த்தி அமெரிக்காவில் பொறுப்பான ஒரு பதவியை ஏற்க வேண்டியிருந்ததுதான்!

உட்ரோ வில்ஸன் பள்ளியில் சேர்ந்ததும் அவருடைய வகுப்பு ஆசிரியை, சியாமளா தன் நெற்றியில் இட்டுக் கொண்டு போன பெரிய குங்குமப் பொட்டைப் பார்த்து ஆச்சரியப்பட்டு, அந்த அலங்காரத்துக்கான விளக்கத்தைக் கேட்டாளாம்.

சியாமளா கொஞ்சம் கூடத் தயங்காமல் இந்தியப் பெண்கள் நெற்றிப் பொட்டுக்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தைப் பற்றி விளக்கி யிருக்கிறார். அவர் விளக்கம் அந்த ஆசிரியையைப் பிரமிப்பில் ஆழ்த்தியது.

''உன் விளக்கத்தை ஒரு கட்டுரை உருவில் எழுதிக் கொடுத்தால் நம் பள்ளி சஞ்சிகையில் வெளியிட முயலுவேன்'' என்றார் அந்த ஆசிரியை.

சியாமளாவின் இந்தக் கட்டுரைதான் அவருடைய முதல் சிருஷ்டியாக உட்ரோ

வில்சன் உயர்நிலைப் பள்ளி சஞ்சிகையில் வெளியாயிற்று. மங்களகரமான ஆரம்பம்.

ஐந்தாண்டுகள் கழித்து அவர் தாயகம் திரும்பி டில்லி சர்வகலாசாலையில் மேல் படிப்பைத் தொடர்ந்தபோது, பல அமெரிக்கச் சஞ்சிகைகளுக்கு எழுத ஆரம்பித்தார்.

''ஏதோ ஒரு வேகம் என்னைப் பிடித்துத் தள்ளும். உடனே ஒரு கதையோ கட்டுரையோ எழுதி அனுப்பி விடுவேன். ஆனால் அதைப் பற்றி மறந்தும் போய்விடுவேன். இப்போது 'பிகாஸஸ்' சஞ்சிகையில் பரிசு பெற்ற கதையைச் சென்ற ஆண்டு செப்டம்பரிலோ அக்டோபரிலோ அனுப்பி வைத்தேன். அப்புறம் அதைப் பற்றிய நினைவு, நீங்கள் டெலிபோனில் பேசிய பிறகுதான் வந்தது'' என்றார் ஸ்ரீமதி சியாமளா. இவருக்குக் கவிதைகள் எழுதுவதிலும் ஆர்வம் உண்டு. டில்லி சர்வகலாசாலையில் சில இலக்கியப் போட்டிகளில் கலந்துகொண்டு பரிசுகளும் பெற்றிருக்கிறார்.

இப்போது பரிசு பெற்றிருக்கும் இவருடைய கதை குற்ற மனப்பான்மையில் ஆழ்ந்து தவிக்கும் ஒரு பாத்திரத்தைச் சுற்றி வருகிறது. இரண்டாவது பரிசை டப்ளின் டிரினிடி காலேஜைச் சேர்ந்த டேனியல ஹின் என்பவர் பெற்றிருக்கிறார். ஐம்பது டாலர் பரிசு. டாலர் செக்குகளை அந்தந்த நாட்டு ஐ. நா. சபைத் தூதுவர்கள் பெற்று, அனுப்புவதாக ஏற்பாடு.

ஸ்ரீமதி சியாமளாவுக்கு பிரெஞ்சு மொழி நன்கு பரிச்சயமானது. வீணை வாசிக்கவும் பயின்றிருக்கிறார். டில்லி சர்வகலாசாலையில் ஆங்கில இலக்கியப் பாடத்தைத் தேர்ந்தெடுத்த ஹானர்ஸ் வகுப்பு மாணவி இவர்.

''தமிழ் இலக்கியங்களையும் இன்றைய தமிழ் எழுத்துத் துறையையும் இனிமேல் தான் நான் அணுக வேண்டும். அதற்கான தைரியம் இனிமேல் வருமென்று நான் நம்புகிறேன். ஆரம்ப நாள் முதல் இன்றுவரை பள்ளியிலோ கல்லூரியிலோ தமிழ் பயில எனக்கு வாய்ப்பில்லை'' என்கிறார் ஸ்ரீமதி சியாமளா.

அவர் ஆங்கில உச்சரிப்பில் அமெரிக்க வாடை கலந்திருந்தாலும், அவருடைய பண்பிலும் குணத்திலும் அசல் தமிழ் மணம் கமழ்கிறது.

நகரத்தில் ஒரு பிரபல டாக்டருக்கு மருமகளாகவும், முன்னணிக்கு வந்துகொண்டிருக்கும் டாக்டர் ஒருவருக்கு மனைவியாகவும் பதவி ஏற்றுக் கொண்டிருக்கும் ஸ்ரீமதி சியாமளா விசுவநாதன் என்னுடன் பேசும் போது நின்று கொண்டே பேசிக் கொண்டிருந்தார். அப்போதுதான் நான் அந்த ஹாலின் மறு கோடியில் அவருடைய மாமியார் நின்று கொண்டிருப்பதைக் கவனித்தேன். அந்த அம்மையாரை நான் உட்கார வேண்டிக் கொண்டேன். அவர் உட்கார்ந்த பிறகுதான், மருமகளும் ஜன்னல் விளிம்பில் ஒண்டி மரியாதையுடன் உட்கார்ந்தார். இந்த நாகரிக யுகத்தில் இந்தப் பண்பாடு அபூர்வ விஷயமாயிற்றே! —பட்டினத்தார்



# பழக்கம் படுத்தும் பாடு!

— கற்பூரம்

முப்பது ஆண்டுகளுக்கு மேல் அரசாங்க உத்தியோகத்தில் இருந்துவிட்ட ஒருவர் கடைசியில் 'ரிடையர்' ஆகவேண்டி வந்தது. பொழுது போகவில்லை அவருக்கு. கையைக் கட்டிக் கொண்டு எப்படிச் சும்மா உட்கார்ந்திருப்பது ?

ஒரு நாள் கொத்தவால்சாவடிப் பக்கம் வந்தார். ஒரு பெரிய வியாபாரியைப் பார்த்து, ''ஏதாவது ஒரு வேலை கொடுங்கள். அது எந்த வேலையாக இருந்தாலும் பரவாயில்லை....'' என்றார்.

''மூன்று லாரி உருளைக்கிழங்கு மூட்டை வந்திருக்கிறது. மூட்டைகளை இறக்கி இப்படி அவிழ்த்துக் கொட்ட வேண்டும். இதுதான் இப்பொழுது என்னிடம் உள்ள வேலை. விருப்பமிருந்தால் செய்யுங்கள்!'' என்று கூறிவிட்டுச் சென்றார் வியாபாரி. மாலையில் அவர் வந்து பார்த்த போது மூட்டைகள் பிரிக்கப்படவே இல்லை. ஏன் என்று வினவினார் வியாபாரி. 'மூட்டைகளைக் கவிழ்த்துக் கொட்டிவிடுவேன் நிமிஷமாக. அது ஒன்றும் சிரமமில்லை. ஆனால் எந்த மூட்டையை முதலில் அவிழ்ப்பது என்று நீங்கள் சொல்லவில்லையே! அதுதான் தயக்கம்!' என்றார் முன்னாள் சர்க்கார் உத்தியோகஸ்தர்.

வியாபாரி ஒரு பெருமூட்டையின் மேல் நம்பர் போட்டுக் கொடுத்து அதன்படி பிரித்துக் கொட்டச் சொன்னார். கூலியும் கொடுத்தனுப்பினார்.

மறு நாள் காலையில் அந்தக் கடைக்காரர் முன்னால் வந்து நின்று வேலை கேட்டார் முன்னாள் அரசாங்க அதிகாரி. அவர் மேல் பரிவு கொண்ட அந்த வியாபாரி, இன்றைக்கு இலகுவான வேலை கொடுக்கலாம் என்று எண்ணி, ''நேற்று நீங்கள் கீழே கொட்டிய உருளைக்கிழங்குகளைப் பிரித்துப் போடுங்கள். பெரிய கிழங்குகளை இந்தப் பக்கமும் சிறு கிழங்குகளை அந்தப் பக்கமும் போடுங்கள்'' என்று சொன்னார். அவருக்கு வேறு அவசர வேலை இருக்கவே, இவரிடம் இந்த வேலையை ஒப்படைத்து விட்டு வெளியே போய் விட்டார்.

மாலையில் திரும்பி வந்த அவருக்குத் திகைப்பாக இருந்தது. முன்னாள் அரசாங்க அதிகாரி திருதிரு என்று விழித்துக் கொண்டிருந்தார். உருளைக் கிழங்குகள் கொட்டி வைத்த இடத்தில் அப்படியே இருந்தன. தாம் சொன்னது அவருக்குக் கேட்கவில்லையோ என்ற சந்தேகம் வரவே வியாபாரி அவரைப் பார்த்து, ''ஏன் பேசாமல் நின்று கொண்டிருக்கிறீர்கள்? நான் சொன்னது நினைவில்லையா ?'' என்று கேட்டார்.

''நன்றாக நினைவிருக்கிறது. பெரிய கிழங்குகளை இந்தப் பக்கமும், சிறிய கிழங்குகளை அந்தப் பக்கமும் போடச் சொன்னீர்கள்.''

''பின்னே பிரித்துப் போடுவதுதானே ?''

''நான் மடமடவென்று பிரித்துப் போட்டுவிடுவேன். ஆனால் இதில் எது பெரிய கிழங்கு, எது சிறிய கிழங்கு என்பதை நீங்கள் தீர்மானிக்க வேண்டாமா ? நானாக எப்படி முடிவுக்கு வருவது ?''



# துருவங்கள் சேர்ந்தால்!

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் டாக்டராக மாறி நர்ஸிங் ஹோம் நடத்தினால்......!

“**பை**யா! பேஷண்டுகள் யாரும் வந்திருக்காங்களா? அவங்களுக்குச் சீட்டுக் கொடுத்து வரிசைக் கிரமமா, முன்னாலே வந்தவங்க முன்னாலே, பின்னாலே வந்தவங்க அப்புறங்கற முறைப்படி அனுப்பி வைக்கணும்!... கம்பௌண்டர் வந்துவிட்டாரா?... சரி, சரி! டெலிபோன் அலறுது பாரு! யாருன்னு கேளு. மருந்துக்கடைக்காரரா? பாக்கிக்கு ஞாபகப்படுத்தச் சொல்றாரா? வாட்! ஏது பாக்கி? கொண்டா இப்படி ரிஸீவரை!.... ஹலோ!... திருப்பதி மெடிகல்ஸா?... உங்களுக்கு ஏது பாக்கின்னு கேட்கறேன்? கணக்குக் கிணக்கு வச்சிருக்கீங்களா? இல்லே தமிழ் மகாநாட்டுக் கணக்கு மாதிரிதானா? என்னையா பதிலையே காணோம்!... நான் இரண்டு தடவை செக்காகவும், இரண்டு தடவை பணமாகவும் அனுப்பியிருக்கிறேன்! வரவு 'காலத்'தை எழுதாமே, நீங்க சப்ளை பண்ணின மருந்துக்கு மாத்திரம் செலவுக் காலத்திலே எழுதி வச்சிட்டீங்களா என்ன? இப்படித்தான் எல்லார்கிட்டேயும் வசூல் பண்றீங்களா? ரசீது கூட அனுப்பிச்சிருக்கீங்களே!... உங்க கம்பெனியிலே யாராவது டுப்ளிகேட் ரசீதுப் புத்தகம் வச்சிருக்காங்களா? ... நயா பைசா பாக்கியில்லே!...உடனடியாகக் கணக்கைச் செக் பண்ணி முழு விவரங்களுடன் ஒரு ஸ்டேட்மெண்ட் வரணும்!... கணக்குன்னா கணக்குத்தான்!... கணக்குக் காட்டா விட்டால் கடைசிவரைக்கும் விடமாட்டேன்!

ஃ ஃ ஃ

**வா**ங்க! உடம்பு எப்படி இருக்கு? இன்னும் வயிற்றுவலி அப்படித்தான் இருக்கா? இது அபரிமிதமான வேலைச் சுமையாலும் கவலையாலும் ஏற்படுகிறது. மருந்தினால் மட்டும் குணமடையாது. மன அமைதியும் ஓய்வும் தேவை. என் நர்ஸிங் ஹோமிலே பேசாமல் கொஞ்ச நாள் படுத்திருங்கன்னு நீங்க அங்கேயும் பைல் கட்டுக்களைக் கொண்டாரச் சொல்லி ஆபீஸ் நடத்தறீங்க. அண்ணா கிட்டக் கத்துக்கிட்டீங்களா? அப்புறம் டைரக்டர்ஸ் மீட்டிங்குக்கு மட்டும் போய் விட்டு வந்துடறேன்னு சொல்லிட்டுக் கிளம்பிடறீங்க. அண்ணா சட்டசபைக்குப்போனாரே, அதுபோல. கடமை உணர்ச்சி தேவைதான். ஆனா சுவரை வைச்சுக்கிட்டுத்தானே சித்திரம் தீட்டணும்? மருந்து சாப்பிட்டால் மட்டும் போதாது உங்களுக்கு. புரியுதா?

ஃ ஃ ஃ

**பை**யா!... டெலிபோன் அலறுது பாரு! அந்தத் திருப்பதி மெடிகல்ஸ் அவசரத்திலே மறுபடியும் ஏதாவது தப்புக் கணக்குச் சொல்லப் போறான்! ...யாரு? நம்ம வீட்டிலேயிருந்து கூப்பிடறாங்களா? கொண்டா போனை இப்படி!... என்ன விஷயம்? “என்ன உன் பெண் சினிமாவுக்குப் போகணும்குதா? அதற்கு ஏன் என்னைக் கேட்கறே? அம்மாக்காரி பாடு பெண் பாடு!... நான் என்ன தமிழ் நாட்டு சட்டசபை சபாநாயகரா, 'சைடு' எடுக்க? குடும்பத்திலே நான் நடுநிலைமை வகிக்கிறவன்னு உனக்குத் தெரியுமில்லே?.... உன் அபிப்பிராயத்தை அவகிட்டப் போய்ப் பிரசாரம் பண்ண நான் தயாரில்லே!.... இதுக்கெல்லாம் கூப்பிட்டுத் தொந்தரவு பண்ணாதே!... இங்கே பேஷண்டுகள் காத்துக்கிட்டு இருக்காங்க... போனை வச்சுடு.... பையா! அடுத்த ஆசாமியை வரச்சொல்லு.

ஃ ஃ ஃ

**வா**ங்க சார், காங்கிரஸ்காரரே! என்ன ஆச்சு உங்களுக்கு? கொஞ்ச நாளைக்கு முன்னாலேதானே சரிஞ்சு விழுந்து உடம்பு பூராவும் காயம் பட்டுக்கிட்டு வந்தீங்க? நெற்றிப் பொட்டு வீக்கம் முதல் கணுக்கால் பிராக்சர் வரை உடம்பு முழுதும் கட்டுப் போட்டு வைச்சுக் கண்ணுங் கருத்துமா பாதுகாத்து அனுப்பிச்சேன். இப்போ மறுபடியும் முழங் கையை முறிச்சுக்கிட்டு வந்து நிக்கறீங்களே! எங்கே மோதிக்கிட்டு விழுந்தீங்க? தென்காசியிலா? அடடா! பார்த்து நடக்கக்கூடாது? போகட்டும். 'டிஸ்லொகேஷனை' சரிப்படுத்திக் கட்டுப் போட்டு விடறேன். எலும்பு சேர்ந்து

ணமான பிறகு கைக்குக் கொஞ்சம் பயிற்சி தேவைப்படும். இல்லேன்னு வணங்கி வராமல் விரைப்பா நிற்கும். தினம் கொஞ்ச நேரம் கைராட்டை சுற்றுங்க. அது நல்ல பயிற்சியாக அமையும். என்ன, எப்படி நூற்கிறதுன்னு மறந்து போச்சா? சரிதான் போங்க!

ஃ ஃ ஃ

ஹலோ! வாப்பா! சௌக்கியமா? காலேஜிலே வாத்தியார் மார்க் போடலேன்னு உண்ணாவிரதம் இருந்து உடம்பைக் கெடுத்துக்கிட்டே பரவாயில்லே! தேறிப்போச்சு!... போகட்டும்! நான் கொடுக்கிற மருந்திலே உனக்கு எஃபக்ட் இல்லேன்னு நெனேப்பா? டாக்டர் காமராஜையும் கன்ஸல்ட் பண்ணினியாமே? நாங்க ரெண்டுபேரும் நண்பர்கள் தான் தம்பி! இரண்டு பேரும் ஒரே தொழிலைத் தான் நடத்தறோம். அவரும் அதே டானிக்கைத்தான் எழுதிக் கொடுத்தாரா?... பார்த்தியா? நோயாளிங்களைப் பொறுத்த வரை எங்க 'டயக்னோஸிஸ்' ஒன்றாகத்தான் இருக்கும்! மருந்து 'டோஸ்' அளவிலே அபிப்பிராய பேதம் இருக்கலாம்!... கிளம்பிட்டியா?... பையா!... கதவை மூடு!... நேரமாயிடுச்சு! — கோமதி சுவாமிநாதன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆




## வழிகாட்டி மரம்

காட்டில் வழிதப்பிப் போவோர்களுக்குப் பயன்படக் கூடிய மரம் ஒன்றை வழிகாட்டி மரம் என்று கூறுகின்றனர். இம்மரம் மேல் நாடுகளில் மிகுதியாக உள்ளது. நான்கு அடியிலிருந்து ஆறு அடி வரையில் வளரும். கொழுந்து இலைகள் எப்போதும் வடக்கு முகமாக நீட்டிக் கொண்டிருக்கும். வழி தவறியவர்கள் கொழுந்து இலைகளைப் பார்த்து, திசையை உணர்ந்து தாங்கள் போக வேண்டிய திக்கில் செல்லலாம்.



## சீட்டியடிக்கும் மரம்

பிரெஞ்சு நாட்டில் ''விஸ்லிங் ட்ரீ'' என்னும் பெயருடைய மரம் ஒன்று இருக்கிறது. இம்மரத்தின் இலைகளில் தொளைகள் இருக்கின்றன. அதன் வழியாகக் காற்று இடைவிடாமல் புகுந்து அருமையான கானத்தை உண்டாக்குகிறது. இக்கானம் தொடங்கும்போது அஞ்சத் தக்கதாக இருக்கும். இலைகளில் உள்ள தொளைகள் புழுக்களால் ஏற்பட்டவை. இத்தகைய மரங்கள் அரேபியாவிலும் சில இடங்களில் உள்ளன.



## ஒப்பாரி மரம்

இது அமெரிக்காவிலுள்ள மரம். கலிபோர்னியா, நிவேதா, ஆர்சோனு பகுதிகளில் உண்டு. இது பத்து முதல் இருபதடி உயரம் வளரும். காற்றானது இம் மரங்களின் மீது படுமாயின் இலைகள் தங்களுடைய வருத்தத்தையும் வெறுப்பையும் உடனே காட்டி விடுகின்றன. இலைகளெல்லாம் சல சல என்று அசைந்து ஒருவிதமான தொனியை நான்கு பக்கங்களிலும் பரவச் செய்கின்றன. அத்தொனி பெரும்பாலும் ஒப்பாரியைப் போன்றிருக்கும். அம்மரங்களிலிருந்து வரும் காற்று கெட்ட நாற்றத்தை உடையதாக இருக்கிறது.



## மழை பெய்யும் மரம்

தென் அமெரிக்காவில் அதிக உஷ்ணமான பகுதிகளில் மழை பெய்யும் மரங்கள் இருக்கின்றன. இம்மரம் அறுபதடி உயரம் வளரும். அதன் இலைகளுக்குக் காற்றில் இருக்கிற ஈரத்தைக் கிரகித்துத் தண்ணீராக்குகிற சக்தி இருக்கிறது. நீண்ட கிளைகளில் இருக்கிற இலைகள் எல்லாம் இவ்வாறு ஈரத்தைக் கிரகிப்பதால் தண்ணீர்த் துளிகள் எப்பொழுதும் கீழே விழுந்து கொண்டேயிருக்கின்றன. ஆதலால் அம்மரத்தைச் சுற்றியுள்ள இடங்களெல்லாம் ஈரமாகிப் புல் பூண்டு முதலியவைகள் மூளைத்துச் செழிப்பாக வளருகின்றன. இவ்வாறு மழைத் துளியை வெளிப்படுத்தும் இம்மரங்களுக்கு மழை மரங்கள் என்றே பெயரிட்டிருக்கிறார்கள். —க. இனியன்



# மகாபாரதம்

## ராஜாஜி



"உன் தம்பிகள் என் பேச்சைக் கேளாமல் தண்ணீர் அருந்தினார்கள். அவ்வாறு நீயும் செய்யாதே. என் வினாக்களுக்கு விடை கொடுத்து விட்டுப் பிறகு பொய்கையில் இறங்கித் தாகம் தீர்த்துக் கொள். இது என்னுடைய வசத்தில் இருக்கிற குளம்" என்றது.

யுதிஷ்டிரன் இது யாரோ யக்ஷன் வாக்கு என்று தெரிந்து கொண்டு, அசரீரியின் பேச்சுக்கு இணங்கி, "உன் கேள்விகளைக் கேள்" என்றான்.

ஒன்றன் பின் ஒன்றாக அசரீரி பல கேள்விகளைக் கேட்டது.

"எது தினமும் ஆதித்யனை உதிக்கச் செய்கிறது?" என்றது அசரீரி.

"பிரம்மம்" என்றான் யுதிஷ்டிரன்.

"மனிதன் எதனால் எப்பொழுதும் துணையுள்ளவனாகிறான்?"

"தைரியமே மனிதனுக்குத் துணை" என்றான் யுதிஷ்டிரன்.

"எந்த சாஸ்திரம் படித்து மனிதன் புத்திமான் ஆகிறான்?"

"எந்த சாஸ்திரம் படித்துமல்ல; பெரியோர்களை அடுத்தே மனிதன் புத்திமான் ஆகிறான்" என்றான் தருமபுத்திரன்.

"பூமியைக் காட்டிலும் கனமானது எது?" என்றான் யக்ஷன்.

"மக்களைத் தாங்கும் தாய் பூமியைக் காட்டிலும் கனமானவள்."

"ஆகாயத்தைக் காட்டிலும் உயர்ந்தது எது?"

"பிதா."

"காற்றைக் காட்டிலும் விசை கொண்டது எது?"

"மனம்" என்றான் யுதிஷ்டிரன்.

"புல்லினும் அற்பமானது எது?"

"கவலை."

"தேசாந்திரம் போகிறவனுக்கு யார் தோழன்?"

"வித்தை."

"வீட்டில் இருப்பவனுக்கு யார் தோழன்?"

"மனைவி."

"சாகப் போகிற கிழவனுக்கு யார் நண்பன்?"

"தானம். அதுதான் மரணத்தின் பின் தனியாகச் செல்லும் உயிரின் கூடப் போகும்."

"பாத்திரங்களுக்குள் எது பெரியது?"

"எல்லாவற்றையும் தனக்குள் அடக்கக்கூடிய பெரிய பாத்திரம் பூமி" என்றான் யுதிஷ்டிரன்.

"எது சுகம்?" என்றான் யக்ஷன்.

"சுகம் நல்லொழுக்கத்திலே நிலை பெறுகிறது."

"எதை விட்டுப் பிரிந்தால் மனிதன் எல்லோருக்கும் பிரியனாகிறான்?"

"தன்னைப் பற்றிய கர்வத்தை விட்டால் மனிதன் மற்றவர்களுக்குப் பிரியமானவனாகிறான்."

"எதை இழந்து விடுவதில் துயரம் இல்லை?"

"கோபத்தை விட்டால் துயரம் உண்டாது."

"எதை இழந்தால் மனிதன் தனவான் ஆகிறான்?"

"ஆசையை விட்டால் மனிதன் சம்பத்து அடைகிறான்."

"பிராம்மண்யமானது குலத்தினாலா? ஒழுக்கத்தினாலா? படிப்பினாலா? நிச்சயமாகச் சொல்லு" என்றான் யக்ஷன்.

"குலமும் படிப்பும் பிராமண்யத்துக்குக் காரணமல்ல. ஒழுக்கமே காரணம். ஒழுக்கத்தில் குறைபட்டவன் பிராமணன் ஆகமாட்டான். எவ்வளவு படித்தவன் ஆனாலும் கெட்ட வழக்கங்களில் சிக்கினவன் பிராமணன் ஆக மாட்டான். நான்கு வேதங்களையும் ஓதியிருந்தாலும் கெட்ட நடத்தையுள்ளவன் இழிகுலத்தவனாவான்."

"உலகத்தில் எது பெரிய ஆச்சரியம்?"

"நாள்தோறும் பிராணிகள் யமன் வீட்டுக்குப் போய்க் கொண்டே விருப்பதைப் பார்த்தும், மிஞ்சியுள்ள மனிதர்கள் தாம் நிலையாக இருக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். இதுவே பெரிய ஆச்சரியம்."

இவ்வாறு இன்னும் பல கேள்விகளை யக்ஷன் கேட்டான். எல்லா வினாக்களுக்கும் யுதிஷ்டிரன் அற்புத அறிவுடன் விடை தந்தான்.

முடிவில் யக்ஷன், "அரசனே! இறந்த சகோதரர்களில் ஒருவன் பிழைக்கக் கூடும்! நீ எவனை விரும்புகிறாயோ அவன் பிழைப்பான்" என்றான்.

யுதிஷ்டிரன் ஒருகணம் யோசித்தான், பிறகு, "சியாமள நிறமும், தாமரைக்

கண்களும் அகன்ற மார்பும் நீண்ட கைகளும் கொண்டு ஆச்சா மரம்போல் விழுந்து கிடக்கும் நகுலன் உயிரோடு எழுந்திருக்கட்டும்'' என்றான்.

அப்போது யக்ஷன் யுதிஷ்டிரனுக்குப் பிரசன்னமாகி, ''பதினாயிரம் யானைகளுக்குச் சமமான பலம் படைத்த பீமனை விட்டு விட்டு ஏன் நகுலனுடைய உயிரைக் கேட்டாய்? பீமசேனன் உனக்கு ரொம்பப் பிரியம் என்றல்லவோ எல்லோரும் சொல்கிறார்கள். அருச்சுனனுடைய சாமர்த்தியமல்லவோ உங்களுடைய பாதுகாப்பு? அவ்விருவரையும் விட்டு விட்டு ஏன் நகுலன் பிழைத்தெழுந்திருக்க விரும்பினாய்?'' என்று கேட்டான்.

''யக்ஷனே! தருமமே மனிதனைப் பாதுகாக்கிறது. பீமனுமல்ல; அருச்சுனனுமல்ல. புறக்கணிக்கப்பட்டால் தருமமே மனிதனைக் கொல்லுகிறது. என் பிதாவுக்குக் குந்தியும், மாத்திரியும் இரு மனைவிகள். நான் குந்திக்கு ஒரு புத்திரன் மிஞ்சினேன். மாத்ரி புத்திரனும் ஒருவன் உயிருடன் இருந்தால் சமமாக இருக்கும். நகுலன் பிழைத்தெழுந்திருக்கட்டும்'' என்றான்.

''பட்சபாதமறியாத என் மகனே! உன்னுடைய எல்லாத் தம்பிமார்களும் உயிர் பெற்று எழுவார்கள்'' என்று யக்ஷன் வரம் தந்தான்.



மானாகவும் யக்ஷனாகவும் வந்தது தரும தேவதையே. தன் மகனை யுதிஷ்டிரனை நேரில் பார்த்து அவன் குணாதிசயத்தைச் சோதித்து மகிழ்ச்சியடைவதற்காக வந்த தரும தேவன் யுதிஷ்டிரனைத் தழுவிக் கொண்டு ஆசீர்வதித்தான்.

“பன்னிரண்டு வருஷ வனவாசம் முடிவதற்கு இன்னும் வெகு சில நாட்களே இருக்கின்றன. இனி பதின்மூன்றாவது வருஷத்தில் செய்து கழிக்க வேண்டிய மறைவுப் பிரதிக்ஞையும் சரியாகவே பூர்த்தியாகும். உன்னையும் உன் தம்பிமார்களையும் பகைவர்கள் யாவரும் கண்டுபிடிக்க முடியாமல் உங்கள் தவத்தை வெற்றிகரமாகவே முடிப்பீர்கள்” என்றும் யமதருமன் யுதிஷ்டிரனுக்கு வரம் தந்து மறைந்தான்.

பாண்டவர்கள் வனவாசத்தின் கஷ்டங்களை யெல்லாம் பொறுத்தார்கள். அருச்சுனன் தகப்பனான இந்திரனிடமிருந்து அஸ்திரங்கள் அடைந்து திரும்பினான்.

பீமனும் அண்ணன் மாருதியைச் சௌகந்திக் தடாகத்தண்டை சந்தித்து அவனைக் கட்டியணைத்துப் பன்மடங்கு பலம் பெற்று விட்டான்.

நச்சுப் பொய்கையண்டை யுதிஷ்டிரன் தன் பிதாவான சாக்ஷாத் தரும தேவதையால் ஆலிங்கனம் செய்யப்பட்டுத் தகப்பனுக்குத் தகுந்த புத்திரனாக விளங்கினான்.

“தரும புத்திரன் தன் பிதாவைத் தரிசித்த இந்தப் புண்ணிய கதையைக் கேட்டவர்களது மனமானது எந்தக் காலத்திலும் அதர்மத்தில் செல்லாது. மித்ர பேதத்திலும் பிறர் பொருளைக் கவர்வதிலும் பிரவேசிக்காது. தனக்கு உரிமை டல்லாத ஸ்திரீயை யாவது புருஷனையாவது கண்டு மயங்க மாட்டார்கள். அற்பப் பொருள்களில் பற்றுதல் கொள்ள மாட்டார்கள்” என்று இந்த யக்ஷப் பிரச்னைக் கதையைப் பற்றி ஜனமேஜய ராஜாவுக்கு வைசம்பாயனர் சொல்லுகிறார். குற்றங் குறையுடன் சுருக்கமாகத் தமிழில் நான் எழுதியிருப்பதை அன்புடன் படித்த மக்களும் மகளிரும் அதே நற்பயனைப் பெறுவார்களாக!

## 43. அடிமைத் தொழில்

“பிராமணோத்தமர்களே! நாங்கள் திருதராஷ்டிர குமாரர்களால் வஞ்சிக்கப்பட்டு ராஜ்யம் இழந்து தரித்திர நிலை அடைந்தோமானாலும், சந்தோஷமாக வனத்தில் உங்களோடு இவ்வளவு காலம் கழித்தோம். பதின்மூன்றாவது வருடம் வந்து விட்டது. இனித் துரியோதனனுடைய ஒற்றர்களால் கண்டுபிடிக்கப்படாமல் பன்னிரண்டு மாதங்கள் கழிக்க வேண்டும். உங்களை விட்டுப் பிரிய வேண்டியிருக்கிறது. நாங்கள் ராஜ்யத்தை மறுபடியும் அடைந்து, உங்களோடு சேர்ந்து சுகமாக, சத்துருக்களைக் குறித்துப் பயப்படாமல் வாழும் காலம் என்று வருமோ? அது ஈசுவரனுக்குத் தெரியும். இப்போது உங்கள் ஆசீர்வாதத்தைக் கேட்கிறேன்! திருதராஷ்டிரர்களிடம் பயந்தோ, பொருள் பெற்றோ எங்களைக் காட்டிக் கொடுத்துவிடக் கருதுகிறவர்களுக்கு நாம் இன்னார் என்று தெரியாமல் மறைந்திருந்து பன்னிரண்டு மாதங்கள் கழிக்க வேண்டும்” என்று யுதிஷ்டிரன் அதுவரையில் தங்களுடன் வசித்துவந்த பிராமணர்களைப் பார்த்துச் சொன்னான். சோகத்தினால் அவனுடைய குரல் தடுமாறிற்று.

தௌமியர் சமாதானம் செய்து, “அப்பனே! கற்றறிந்தவனாகிய நீ இவ்வாறு மனம் தளர்தல் ஆகாது. தைரியமாக இனிச் செய்ய வேண்டியதை யோசிப்பாயாக. தைத்யர்களால் வஞ்சிக்கப்பட்ட இந்திரன் முன் நாட்களில் பிராமணன் வேஷம் தரித்து நிஷத தேசத்தில் மறைந்து வாசம் செய்யவில்லையா? அவ்வாறு ஒளிந்திருந்து இந்திரன் தன்னுடைய பகைவர்களுடைய பலத்தை அழிக்கும் காரியங்களைச் செய்தான். நீயும் அவ்வாறே செய்ய வேண்டும். மகாவிஷ்ணுவானவர் காரிய சாதனத்திற்காக அதிதி வயிற்றின் கர்ப்பப் பையில் ஒடுங்கியிருந்து மனிதனாகப் பிறந்து பலி சக்கரவர்த்தியினிடமிருந்து ராஜ்யத்தை அடைந்து உலகத்தைக் காப்பாற்றினாரல்லவா? விருத்ராசுரனை வெல்வதற்காக நாராயணன் இந்திரனுடைய ஆயுதத்தில் பிரவேசித்து மறையவில்லையா? தேவகாரியமாக அக்னிபகவான் ஜலத்தில் மறையவில்லையா? சூரியன் தினசரி பூமியில் மறைந்து நிற்பதைக் காணவில்லையா? ராவணனைச் சம் ஹாரம் செய்வதற்காக மகாவிஷ்ணு தசரதனுடைய வீட்டில் மனிதனாகப் பிறந்து துக்கப்பட்டுப் பல்லாண்டுகள் கழிக்கவில்லையா? இவ்வாறு பூர்வத்தில் அநேகம் மகாத்மாக்கள் மறைந்தும் ஒளிந்தும் காரியசித்தி அடைந்திருக்கிறார்கள். அப்படியே நீயும் பகைவரை வென்று பாக்கியம் பெறுவாய்” என்று தேற்றினார்.

யுதிஷ்டிரன் பிராமணர்களிடம் அனுமதி பெற்று, அவர்களையும் மற்ற எல்லாப் பரிவாரத்தையும் ஊருக்குத் திரும்

பிப் போகச் சொன்னான். அவர்களும் அவ்வாறே நகரத்துக்குத் திரும்பிப் போய்ப் பாண்டவர்கள் எங்களை நடு நிசியில் விட்டு விட்டு எங்கேயோ மறைந்து போய் விட்டார்கள் என்று சொல்ல, ஜனங்கள் மிகவும் துயரம் அடைந்தார்கள்.

பாண்டவர்கள் வனத்தில் ஒரு தனி யான இடத்தில் உட்கார்ந்து யோசிக்க லானார்கள். ''அருச்சுனா! நீதான் உலக விவகாரங்கள் நன்றாகத் தெரிந்தவன். பதின்மூன்றாவது வருஷத்தை எந்த இடத்தில் கழிப்பது நலம்?'' என்று தரும புத்திரன் கேட்டான்.

அருச்சுனன், ''மகாராஜாவே! யம தேவனிடம் இதற்காக வரம் பெற் றிருக்கிறீர். நாம் யாராலும் அறியப் படாமல் பன்னிரண்டு மாதங்களையும் எளிதாகவே கழிப்போம். எல்லோரும் ஓரிடத்திலேயே இருப்போம். மனத் துக்கு இனிமையான பல தேசங்கள் இருக்கின்றன. பாஞ்சால தேசம் இருக் கிறது. மத்ஸ்ய தேசம் இருக்கிறது. சால்வம், வைதேகம், பாஹ்லிகம், தசார்ணம், சூரசேன நாடு, கலிங்கம், மகதம் ஆகிய நாடுகள் எல்லாம் இருக் கின்றன. இவற்றில் எது உமக்குப் பிரியமோ அந்தத் தேசத்துக்குப் போகலாம். என்னைக் கேட்டால் விரா டனுடைய தேசமான மத்ஸ்ய தேசமே மேலானது என்பேன். விராடனுடைய நகரம் மிக்க அழகும் ஐசுவரியமும் நிரம்பியது. உம்முடைய இஷ்டத்தைச் சொல்லவும். நீர் துக்கப்படலாகாது'' என்றான்.

''மத்ஸ்ய தேசாதிபதி விராடன் மிக்க பலமுடைய அரசன். நம்மிடம் பிரியம் வைத்திருப்பவன். தர்மசீலன். வயது முதிர்ந்தவன். துரியோதனன் பேச்சைக் கேளாதவன். விராட ராஜன் அருகில் மறைந்து வாசம் செய்வதே நலம் என்று எண்ணுகிறேன்'' என்றான் யுதிஷ் டிரன்.

''அவ்வாறே செய்வோம். அரசனே! நீர் விராடனிடத்தில் என்ன காரியத் தில் அமர்வீர்!'' என்றான் அருச்சுனன்.

இவ்வாறு கேட்கும்போது அருச்சுன னுக்குத் துயரம் மேலிட்டது. 'கபட மறியாத மகாத்மா, ராஜாதிராஜனாக ராஜசூய யாகம் செய்து புகழ் பெற்ற யுதிஷ்டிர மகாராஜன் மற்றொரு அரச னிடம் மாறுவேஷம் தரித்துச் சேவகத் தில் அமர நேரிட்டதே!' என்று எண் ணித் துக்கப்பட்டான்.

யுதிஷ்டிரன் சொல்லலானான்:

''நான் விராடனிடம் ஆஸ்தானப் பணிவிடை வேலைக்கு என்னை எடுத்துக் கொள்ளக் கேட்கலாம் என்று இருக் கிறேன். அரசனிடம் உட்கார்ந்து பாய்ச் சிகை விளையாட்டு விளையாடி அதில் சாமர்த்தியம் காட்டிச் சந்தோஷப்படுத் துவேன். சந்நியாசி வேஷம் தரித்துக் கங்கன் என்ற பெயரிட்டுக் கொண்டு, சொக்கட்டான் விளையாடுவதோடு அர சனுக்கு ஜோதிடம், பட்சி சகுனங்கள், வேதம், வேதாங்கங்கள், நீதி சாஸ்திரம் முதலியவற்றில் பண்டிதனாக இருந்து அவனைச் சந்தோஷப் படுத்துவேன். சபைப் பணிவிடையும் செய்வேன். நான் முந்தி யுதிஷ்டிரனுக்குப் பிராண சிநேகிதனாக இருந்து இவையெல்லாம் கற்றேன் என்று சொல்லி ஜாக்கிரதை யாகவே இருந்து வருவேன். நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப்பட வேண் டாம். பீமசேனனே! விராடனிடம் நீ எந்த விதமான வேலையில் அமர்வாய்? யக்ஷ ராக்ஷதர்களை அடக்கினவனே! பிராமணனுக்காகப் பகாசுரனை வதம் செய்து ஏகசக்ரபுரத்தைக் காப்பாற்றி னாய். இடும்பனைக் கொன்றாய். கோப மும், பலமும் பொங்கி வழியும் வீர னாகிய நீ மத்ஸ்ய ராஜனிடத்தில் எவ் விதம் அடங்கி ஒடுங்கி எந்த வேலையில் அமர்வாய்?'' என்று கண்களில் நீர் ததும்பக் கேட்டான்.

பீமசேனன், ''நராதிபனே ! நான் விராடன் அரண்மனையில் சமையல் வேலை கேட்டுப் பெறலாம் என்று இருக்கிறேன். எனக்கு மடைப்பள்ளி வேலை நன்றாகத் தெரியும் என்பதை அறிவீர்கள். இதற்குமுன் விராடன் கண்டிராத ருசியுள்ள பதார்த்தங் களைப் பக்குவம் செய்து அவனைத் திருப்திப்படுத்துவேன். காட்டிலிருந்து மரங்களை வெட்டி அடுப்புக்கு ஏராள மாக விறகுச் சுமைகளைக் கொண்டு வந்து போடுவேன். அரசனிடம் வரும் குஸ்திக்காரர்களுடன் போட்டி போட்டு மல்யுத்தத்தில் அவர்களை வென்று ராஜாவுக்கு மகிழ்ச்சி உண் டாக்குவேன்'' என்றான்.

இதைச் சொல்லவும் யுதிஷ்டிர னுக்குக் கவலை உண்டாயிற்று. குஸ்தி யில் பீமன் புகுந்தானானால் ஆபத்து என் பது அவன் பயம். உடனே பீமன் அவ னுக்குச் சமாதானம் சொன்னான்.

''நான் யாரையும் கொல்லமாட் டேன். நன்றாகக் கசக்கித் துன்பப் படுத்துவேனே யொழிய யமலோகத் துக்கு அனுப்பிவிட மாட்டேன். மதங் கொண்ட காளைகளையும் எருமைக் கடாக்களையும் காட்டு மிருகங்களையும் அடக்கி விராடனுக்கு வேடிக்கை காட்டுவேன்'' என்றான். **(தொடரும்)**

‘அந்த
அதிகரித்த
வெண்மை
எங்கிருந்து
வருகிறது?’

Tinopal

# டினோபால்

## வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது

துவைத்த துணிகளை அலசு
வதற்கு முன் நீரில் சிறிதளவு
டினோபால் சேர்த்தால்,
சலவையின் வெண்மை
எப்படிப் பளிச்சிடுகிறது—
ஷர்ட்டுகள், புடவைகள்,
படுக்கை விரிப்புகள்,
டவல்கள் எல்லாம்!

இத்தனைக்கும் ஆகும்
செலவுதான் என்ன?
துணிக்கு ஒரு பைசாவுக்கும்
குறைவே! துணிகளைப்
பாழாக்காமல் சாஸ்திரீய
முறையில் வெண்மை
பளிச்சிடச் செய்வது
டினோபால்.

டினோபாலின் மற்ற பேக்குகள்:



ஒரு வாளித் துணிக்கு ஒரு பேக்கெட்




புதிய சிக்கனப் பேக்




**படத்தில் நீங்கள் காண்பவர் ஸ்ரீமதி ஹெல்கா ஆண்டன். ஜெர்மானியர். பாரதி என்றால் இவருக்கு உயிர். இவர் கூறுகிறார்:**

"உறங்கிக் கொண்டிருந்த பாரத சமுதாயத்துக்குத் தமது கவிதைகளால் விழிப்புணர்ச்சி அளித்தவர் பாரதி. சுதந்திரக் கனல் தெறிக்கும் அவரது பாடல்களிலேதாம் எவ்வளவு புதுமைக் கருத்துக்கள்! ஐரோப்பிய நாடுகளின் வரலாற்றினை ஆராய்ந்து, பலப் பல முன்னேற்றக் கருத்துக்களைத் தமது கவிதைகளிலே புகுத்தி நவ பாரதத்தினை உருவாக்கும் பணியை மேற்கொண்டார் கவி சுப்பிரமணிய பாரதி. இத்துறையில் அவருக்கு முன்னோடிகள் என்று யாருமே இருந்ததில்லை. இதுவே பாரதியின் தனிச் சிறப்பாகும். அவரது கவிதைகளிலே நான் பெரிதும் விரும்புவது 'குயில் பாட்டு'. அதன் தத்துவமே அதன் சிறப்புக்குக் காரணம்.'' பெர்லின் ஹம்போல்ட் சர்வகலாசாலையில் தமிழ் இலக்கியப் பேராசிரியர் டாக்டர் (ஸ்ரீமதி) ஹெல்கா ஆண்டன். தமிழ் தவிர, கன்னடம், மலையாளம், தெலுங்கு மொழிகளையும் பயின்று தீவிர ஆராய்ச்சி செய்யும் நோக்கத்துடன் சென்னைக்கு வந்துள்ள ஸ்ரீமதி ஆண்டனுக்கு வயது 29. பெற்றோர்களுக்கு ஒரே பெண். இவரது கணவர் ஜெர்மன் ஜனநாயகக் குடியரசில் (கிழக்கு ஜெர்மனி) பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார். குழந்தைகள் இல்லை. இவரது தகப்பனார் மரச் சாமான்கள் தயாரிக்கும் தொழிலை மேற்கொண்டிருந்தாராம். தமிழ் அழகாக எழுதுகிறார். சுப்பிரமணிய பாரதியார் இயற்றிய நூல்களைப் பற்றி ஆராய்ச்சிக் கட்டுரை (Thesis) எழுதி டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். ஆங்கிலத்திலும் நன்றாக உரையாடுகிறார்.

''கிழக்கு ஜெர்மனியில் ருஷ்ய மொழியும் ஜெர்மன் மொழியும் கட்டாயமாகப் பயில வேண்டியவை. இவை தவிர, ஆங்கிலமும் நானாகவே விரும்பிப் பயின்றேன். நான் இங்கு தங்கியிருக்கப் போகும் ஓராண்டுக் காலத்தில் என் தமிழறிவை விருத்தி செய்து கொள்ள விரும்புகிறேன்'' என்கிறார் டாக்டர் ஆண்டன்.

''பாரதியைப் போல, புதுமைக் கருத்துக்கள் கொண்ட கவிதைகளை இயற்றிய புரட்சிக் கவிஞர்கள் ஜெர்மனியில் இருந்திருக்கிறார்களா?'' — என்று கேட்டதற்கு, ''மூன்று கவிஞர்களைப் பாரதிக்கு ஒப்பிடலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த கேயோர்க் வெர்த் (Georg Weerth) ஹைன்ரிஷ் ஹைனெ (Heinrich Heine) பதினெட்டாம் நூற்றாண்டுக் கவிஞரான ஷில்லர் (Schiller) ஆகிய மூவருமே புரட்சிக் கவிஞர்கள்தாம். பல சிற்றரசுகளாகச் சிதைவுண்டு கிடந்த எங்கள் நாட்டின் ஒற்றுமையை இவர்கள் வலியுறுத்தினார்கள். மக்களிடையே சமத்துவம், சகோதரத்துவம் நிலவ வேண்டியதையும் வற்புறுத்தினார்கள் அக்காலத்திலேயே'' என்றார். இவர் பிறந்த 1939ஆம் ஆண்டில் இரண்டாவது உலகப் போர் தொடங்கி விட்டதால், மேற்கு ஜெர்மனியை இவர் பார்க்கவே சந்தர்ப்பம் கிட்டவில்லையாம். 1946ல் ஏழாவது வயதில் ஆரம்பக் கல்வி பயிலத் தொடங்கிய ஸ்ரீமதி ஆண்டன் 1967ல் தமது ஆராய்ச்சிக்கான டாக்டர் (Ph.D.) பட்டம் பெற்றார்.

பாரத நாட்டின் சிறந்த சிறுகதைகள் சிலவற்றைப் பொறுக்கி ஜெர்மானிய மொழியில் புத்தகமாக வெளியிட உதவியவர்களுள் ஸ்ரீமதி ஹெல்கா ஆண்டன் ஒருவர். 'புலிராஜா' என்பது இந்தப் புத்தகத்தின் பெயர். அமரர் கல்கியின் புலி ராஜா என்ற சிறுகதை இப்புத்தகத்தில் சிறப்பிடம் பெறுகிறது.



— 'பாணன்'




அன்று கண்ட கூட்டத்தை அரக்கோணம் என்றுமே கண்டிராது. அப்படி ஒரு கூட்டம் கூடியது கல்யாணம் கார்த்திகைக்கோ அல்லது தேர் திருவிழாவுக்கோவா? இல்லை. பதினாறு பதினேழு வயதுள்ள பாரஸ்மல் லோடா என்னும் பாலகன், துறவுத் தீட்சை பூண்டதற்காக.

பற்றற்றான் பற்றினைப் பற்றுவதற்கும் இப்படி ஒரு கோலாகலமான கூட்டம் என்றால் பாரதத்திலே பாரமார்த்திகம் எவ்வளவு ஆழ வேரூன்றி இருக்கிறது என்பது விளங்கு கிறதல்லவா?

அப்பாலகனுக்குத் துறவு தீட்சை அளித்த வர் ஆசாரிய துளசி என்னும் சமணப் பெருந் துறவியார்.

"அப்பனே! இன்னும் காலம் தாழ்ந்து விடவில்லை. உன் மனத்தில் ஒரு சிறிதாவது லௌகாயதப் பற்றுகள் இருக்குமானால் இப் போதே சொல்லி விடு! துறவு வாழ்க்கையில் எத்தனை எத்தனையோ இடையூறுகளைச் சமா ளித்தாக வேண்டும். ஒரு காரியத்தை ஒருவர் மீது வலியத் திணிப்பது அஹிம்சை ஆகாது! அஹிம்சையையே பெருந்தனமாகக் கொண்டு இயங்குவது இந்தச் சமண மதம். எனவே, உனக்கு உறுதி இருக்கிறதா, சொல்!"

ஆசாரிய துளசி அந்த மாபெரும் கூட் டத்திலே தாய் — தந்தை, உற்றார் உறவினர் சூழ நின்ற பாரஸ்மல்லைக் கேட்டார்.

உள்ளத்து உறுதி முகத்திலே தெரியத் தலையசைத்த பாலகன் பாரஸ்மல், அடுத்த சில விநாடிகளில் துறவற தீட்சை பெற்றான். இரும்பையும் பொன்னாக்கும் ஆற்றல் 'பாரஸ்' என்னும் கல்லுக்கு உண்டாம். அத்தகைய பண்பு பாரஸ் முனி பெற வேண்டும் என்று இறைஞ்சாத இருதயங்கள் அந்த நேரத்தில் அங்கே இருந்திருக்க முடியாது.

மகாவீரர் நிறுவிய சமண மதத்தைத் தழு வியவர் ஆசாரிய துளசி அவர்கள்.

ஆதி ஸ்தாபகர் மகாவீரர் நிறுவிய சமண மதத்திலும் பல கிளைகள் உண்டு: 'திகம் பரர்கள், சுவேதாம்பர ஸ்தானகவாசி, தேரா பந்தி' என்று.

ஆசாரிய துளசி அவர்கள் 'தேராபந்தி' சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்.

ஆண்டவனை அடைய 'நான்' என்னும் அகந்தை போக வேண்டும் என்பதுதானே ஆன்றோர் வாக்கு? அதைப் போக்க 'எல்லாம் உன்னுடையது' என்ற மனப்பான்மையை வளர்க்கிறது 'உன் வழி' என்னும் பொருள் தரும் 'தேராபந்தி'.

இவ்வழி வந்தவர் எட்டாவது ஆசாரிய ரான காலுகனி. அவரிடம் தீட்சை பெற்ற வர் ஆசாரிய துளசி அவர்கள். தமது பதி னோராவது வயதிலேயே துறவுக் கோலம் பூண்ட இவர் சமண மத நூல்களை நன்கு பயின்றவர். இதர மத நூல்களையும் சிறப் பாக ஆராய்ந்தவர். அதன் பயனாக ஆன் றோர் கருத்துக்களெல்லாம் ஒன்றாகவே இருக் கும் என்ற முடிவுக்கு வந்தவர்.

மக்களின் வாழ்க்கை எப்படியெல்லாம் தாறுமாறாகச் செல்கிறது. ஒழுக்கம் என்பது எப்படி ஒடுக்கப்பட்டு விட்டது. மனிதப் பண்பு எவ்வளவு தாழ்ந்து விட்டது என்பதை யெல்லாம் ஆராய்ந்தவருக்குச் சமுதாயத்தைச் சீர்திருத்தி அமைக்க ஒரு தார்மீகப் புரட் சியை மேற்கொள்ள வேண்டும் என்று தோன்றியது. அதுவே அணுவிரத இயக்க மாக உருவெடுத்தது.

'ஜாதி மத பேதமின்றி யாவரும் இந்த இயக்கத்தில் சேரலாம். அவரவரும் மக்கட் சமுதாயத்துக்குத் தீது ஏற்படாத வகையில் தங்களால் இயன்ற சிறு சிறு நோன்புகளைக் கடைப்பிடிக்கலாம். மொழியோ, மத வேறு பாடுகளோ இவற்றுக்குக் குந்தகமாக இருக்கக் கூடாது. எடுத்துக் கொள்ளும் நோன்புக்கு மனித சமுதாயத்தின் நலன் ஒன்றே குறிக் கோளாக இருக்க வேண்டும்.'

இப்படி ஒரு நிபந்தனையை விதித்து அணு விரத இயக்கத்துக்கு ஆக்கம் தேடலானார்.

இவர் கூறும் அணுவிரத நோன்புகளோ மிக மிகச் சிறியவை; சுலபமானவை. எளிதில் கடைப்பிடிக்கக் கூடியவை. எனவேதான் 'அணுவிரதம்' என்று அழைக்கப்படுகின்றன.

'கீழ்த்தரமான ஆபாசச் சொற்களைப் பயன்படுத்த மாட்டேன். ஆபாசமான புத்தகங்களைப் படிக்க மாட்டேன்!'

இது மாணவர்களுக்கான அணுவிரதங்களில் ஒன்று.

'நான் அரசியல் கட்சிகளில் முக்கிய பங்கு எடுத்துக்கொள்ள மாட்டேன். மாணவர்களையும் அரசியலில் பங்கெடுக்கத் தூண்ட மாட்டேன்.'

இது ஆசிரியர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நோன்பு.

வணிகர்கள் 'நான் வாணிபத்தில் நாணயமாக இருப்பேன். கள்ள வியாபாரம் செய்ய மாட்டேன்!' என்று விரதம் ஏற்றால் என்ன?

தொழிலாளி, தன்னுடைய செயலில் உண்மையாக இருப்பதாக முடிவு செய்து கொள்ளலாம்.

'நான் அதிக விலை கிடைக்குமென்ற ஆசையில், உணவுப் பண்டங்களை மிகையாகச் சேர்த்து வைக்க மாட்டேன்!' இவ்விரதம் விவசாயிகள் மேற்கொள்ள வேண்டியது.

'நான் அசுத்தத்தைப் பரப்ப மாட்டேன்!'

பொது மக்கள் இந்த விரதத்தை மேற்கொண்டால், நகரசுத்தியாளர்களுக்கு வேலை குறையும் அல்லவா?

அரசாங்க ஊழியர்கள் 'லஞ்சம் வாங்குவதில்லை' என்ற விரதம் ஏற்றால், கொடுக்க வருபவர்களும் 'தானாகக் குறைந்து விடுவார்களே!

'நான் மிதமான செலவாளியாக இருப்பேன். மற்றவர்களைப் பின்பற்றி வீண் செலவு, ஆடம்பரம், அழகு ஒப்பனைகள் இவைகளைச் செய்ய மாட்டேன்!'

பெண்மணிகள் இவ்விரதமேற்றால், நாட்டின் பணம் எவ்வளவு மிச்சமாகும்?

இப்படியே வாக்காளர், வேட்பாளர்களுக்கு விரதம் கூறும் முனிவர், சட்ட மன்ற உறுப்பினர்களுக்கும் ஒரு விரதத்தைக் கூறுகிறார்: 'நான் முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு, மறு தேர்தலின்றிக் கட்சி மாற மாட்டேன்!'

கலைஞர்களையும், எழுத்தாளர்களையும்கூட மக்களைத் தவறான பாதையில் செலுத்தும் கலைகளையும் இலக்கியங்களையும் படைக்காமல் இருக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறார்.

இப்படி அவரவர் இயல்பு, தொழில்—இவற்றுக்கு ஏற்ப ஒரு சிறு நோன்பை மேற்கொண்டாலும், அது நாட்டுக்குப் பெரிதும் பயன் தரும் என்று நம்புகிறார். அவரது நம்பிக்கை நமக்கும் நம்பிக்கை அளிக்கிறது.

உலகமறை தந்த திருவள்ளுவர், புலனடக்கம், இன்னா செய்யாமை, பொய்யுரையாமை, புலால் உண்ணாமை, வெஃகாமை போன்ற நெறிகளுக்கு என்னவெல்லாம் இலக்கணங்கள் கூறியிருக்கிறாரோ, அவற்றையே தான் தற்காலத்து இந்தச் சமண முனிவரும் வலியுறுத்துகிறார்.

ஆதிகாலம் தொட்டு ஆன்றோர்கள் என்ன சொல்லி வந்திருக்கிறார்களோ, நடமாடும் தெய்வமான ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி மற்றும், ஏனைய உலக நலன் நாடும் பெரியார்கள் என்ன சொல்லி வருகிறார்களோ, அதையேதான் ஆசாரிய துளசி அவர்களும் சொல்லி வருகிறார்கள்.

சிறு நோன்பு ஏற்றுக் கொண்டாலும், சிறு துளி பெருவெள்ளம் ஆவது போல் அது மக்களினத்துக்குப் பெரும் நன்மை பயக்கும் என்று நம்புகிறார். இதற்காக வட நாடு முழுதும் பல ஆயிரம் மைல்கள் பாத யாத்திரை செய்தவர் தென்னாட்டுக்கும் சமீபத்தில் விஜயம் செய்திருக்கிறார்.

எளிமையே உருவான ஆசாரிய துளசி அவர்களின் தலைமையில் நூற்றுக் கணக்கான துறவிகள் இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள். நாள்தோறும் இந்த இயக்கம் வளர்ந்து வருகிறது.

ஜூலை மாதம் ஏழாம் தேதி சென்னை நகரிலே ஸ்ரீ ஆசாரிய துளசி அவர்களுக்கு, மாபெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது. தமிழக முதலமைச்சர் திரு சி. என். அண்ணாதுரை அவர்கள் தென்னாட்டில் சமண மதம் புரிந்திருக்கும் சமூகப் பணியையும் இலக்கியப் பணியையும் நினைவுகூர்ந்து, ஆசாரிய துளசியை வரவேற்றுப் பேசினார்.

ஆசாரிய துளசி அவர்கள் தமிழக மண்ணின் மாண்பினைத் தாம் நன்கு அறிந்திருப்பதாகவும் இம் மண்ணிலே தமது அணுவிரத இயக்கம் மகா விரதமாகப் பெருகி மக்கள் சமுதாயத்துக்கு நன்மை பயக்கும் என்று தாம் நம்புவதாகவும் கூறினார்.

மாரிக்காலத்தில் துறவிகள் சாதுர்மாஸ்ய விரதம் மேற்கொண்டு ஒரே இடத்தில் தங்கியிருக்க வேண்டும் என்ற பண்டைய பழக்கத்தைத் தழுவிச் சென்னை மாநகரத்தில் அக்டோபர் வரை தங்குகிறார்கள். அதற்குப் பின் தமிழ் நாடு, கேரளம், மைசூர் முதலிய பகுதிகளுக்குப் பாத யாத்திரை சென்று தமது இயக்கத்தைப் பரப்பவிருக்கிறார்கள். 'எம்மதத்துக்கும் சம்மதமான ஒன்றே தெய்வம்' என்னும் கோட்பாட்டினை வலியுறுத்தி, மதங்களுக்கெல்லாம் அப்பால் சென்று மனித சமுதாயத்துக்குப் பணி புரியும் ஆசாரிய துளசி அவர்களைப் பல நாடுகளும் அழைக்கின்றன. "உங்கள் நாட்டினைப் போரின் கொடுமை அவ்வளவாகப் பாதிக்கவில்லை. எங்கள் நாட்டுக்கு உங்கள் பணி தேவை. அஹிம்சை வழியை எங்களுக்குப் புகட்ட வாருங்கள்" என்று ஜெர்மனி போன்ற போரில் அடிபட்ட நாடுகள் அழைக்கின்றன வென்றால் அதற்குப் பொருள் என்ன?

'பாரதத்தின் பாரமார்த்திக வாழ்வு அத்துணை பெருமை வாய்ந்தது! அது காட்டும் அஹிம்சை வழி அற்புதமானது! உலகனைத்தையும் ஒன்றாகப் பாவித்து, மனித இனத்துக்கு நலன் செய்யும் ஆற்றல் பாரத மண்ணில் இருக்கிறது!' என்பதுதானே!

இந்த நற்பணியில் ஈடுபட்டுப் பாரதத்தின் பழம் பெருமைக்குப் புதுப் பெருமை சேர்க்கும் ஆசாரிய துளசி அவர்களையும் அவர்களுடைய துறவிக் குழாத்தையும் வரவேற்பதைக் காட்டிலும் மற்றுமொரு பெருமையையும் நாம் பெற, அவர்களுடைய அணுவிரத இயக்கத்தில் ஒவ்வொருவரும்கலந்துகொண்டு, ஸ்ரீ ராமபிரானுக்கு உதவிய அணில் குஞ்சைப் போல் தம் பங்கைச் செய்ய வேண்டும்.

# அம்மாவுக்கு கண்ணுக்கினிய குளுமையான வெளிச்சம் தேவை

அம்மாவுக்குத் தையல் வேலை செய்வதில் ஆர்வம் அதிகம். ஆகையால் அவள் நாள் தோறும் மாலையில், இருட்டிய பிறகும், அந்த நுணுக்கமான வேலையில் ஈடுபடுகிறாள். ''அப்படி வேலை செய்யாதே; கண்கள் சோர்வடைந்து கெட்டுவிடும்'' என்று சொன்னால், ''என் கண்களுக்கு ஒரு கெடுதலும் வராது. நான் ஃபிலிப்ஸ் ஆர்ஜண்டா பல்பு வெளிச்சத்தில் அல்லவா வேலை செய்கிறேன்'' என்று அவள் உறுதியுடன் கூறுகிறாள். ஃபிலிப்ஸ் ஆர்ஜண்டா பல்புகளில் ஒரு விசேஷமான வெள்ளைப் பூச்சு பூசப்பட்டிருக்கிறது. அதன் நன்மைகள்:

☐ கண் கூசாது ☐ இருண்ட நிழல் படியாது

☐ ஒரே சீரான வெளிச்சம் பரவும்

அம்மாவுக்கு மட்டுமே அல்லாமல், எங்கள் குடும்பத்திலுள்ள அனைவருக்குமே ஃபிலிப்ஸ் ஆர்ஜண்டா பல்புகள் குளுமையான வெளிச்சம் தந்து, கண்களுக்கு இதமளிக்கின்றன. ஃபிலிப்ஸ் ஆர்ஜண்டா பல்புகள் 40, 60 மற்றும் 100 வாட்களில் கிடைக்கின்றன. ஃபிலிப்ஸ் கம்பெனியார் ஆர்ஜண்டாவைத் தவிர, பூச்சு தடவாத சாதாரண மாதிரி பல்புகள், பல்வேறு உபயோகத்துக்கான நானாவித பல்புகள், ஃப்ளுரஸெண்ட் ட்யூப்கள், மற்றும் மெர்குரி வேபர் லாம்ப்கள் தயாரிக்கிறார்கள்.






ஃபிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

## ஃபிலிப்ஸ் ஆர்ஜண்டா




இதமான ஒளிதருவதில் இணையற்றது

PHL-7369 A

# 17. கலியாணப் பேச்சு




விழாவுக்காக முன் பக்கம் பெரிய கீற்றுக் கொட்டகை போடப்பட்டிருந்தது. உள்ளே விதானமாகக் கட்டப்பட்டிருந்த வெள்ளைத் துணிகளின் ஓரங்கள் ஜிகினு வேலைப்பாட்டில் பளபளத்தன. வண்ணக் காகித ஆரங்களும், பிளாஸ்டிக் பூங்கொத்துக்களும் ஆங்காங்கே அழகுறப் பொருத்தப்பட்டிருந்தன. நடு மேடையில் அழகிய வேலைப்பாடமைந்த மேசைகளும், நாற்காலிகளும் வட்ட வடிவில் அமைக்கப்பட்டிருந்தன. கீழே வரிசையாக நாற்காலி அணிகள். சுற்றிலும் குரோட்டன்ஸ் பூந்தொட்டிகள்.

எழுத்தாளப் பெருமக்களும், மற்றும் அழைப்பு பெற்ற முக்கியமானவர்களும் அங்கே குழுமி விட்டனர். மீனுட்சி சுந்தரம் ராகவனும் ஷீலாவும் வரட்டும் என்று சிறிது நின்ருர். பிறகு அவர்கள் அருகில் வந்ததும் மெல்ல நடக்கலானுர். காரியாலய உள் அறையில் வசந்தன் முன்பே வந்து உட்கார்ந்திருந்தான். சீலியா அவனைப் பார்க்கும் போதே அவனும் அவளைப் பார்த்து விட்டான். இத்தனை பெரிய கூட்டத்திலும் அவர்களின் கண்களின் சந்திப்பில் ஏகாந்தத்தின் சிலிர்ப்பு ஏற்பட்டது.

வசந்தன் அவள் முகம் நோக்கி விட்டுத் தன் எதிரிலிருந்த ஆசனத்தையும் பார்த்தான். விநோதமான உபசரிப்பு அது. சீலியா அவன் எதிர் ஆசனத்தில் அமர்ந்தாள். பிறரால் உரை முடியாத உபசரிப்பு அது. அப்போதுதான் வசந்தனைக் கண்ட மீனுட்சி சுந்தரம் அவனைப் புன்னகையோடு வரவேற்றுவிட்டுச் சீலியாவைப் பார்த்தார். ''இவர்தானம்மா முதல் பரிசைப் பெற்றவர். வசந்தன் என்று பெயர். நீ படிக்கும் மருத்துவக் கல்லூரியில்தான் இவரும் படிக்கிருர்'' என்று அறிமுகம் செய்து வைத்தார்.

''வணக்கம்'' என்று புதிதாக அறிமுகப்படுத்தப்பட்ட பாணியிலே புன்னகை செய்தாள் அவள்.

தெரிந்தவர்களுக்குள்ளே தெரியாதவர் செய்யும் அறிமுகத் தவிப்பில் தத்தளித்தவாறே ஒரு சங்கடமான சிரிப்புடன் வசந்தன் பதில் வணக்கம் செய்தான்.

''தமிழரசி என்பது ?'' என்று தன் பெரியப்பா முகத்தைப் பார்த்தவாறே கேட்டாள் சீலியா. அப்பட்டமான குறும்பு அவள் குரலில் ஒலித்தது.

''நான் தமிழரசியைப் பார்த்ததேயில்லை அம்மா. வரட்டும், உனக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன். மிக நல்ல எழுத்துப் படைப்புக்கள் அவருடையவை!'' என்ருர் மீனுட்சி சுந்தரம்.

சீலியா தனக்குள் மகிழ்ந்துபோனுள், 'மிகுந்த தன்னடக்கமும் தமிழ்ப்பற்றும் மிக்க ஒருவர் வாயால் ஓர் எழுத்தாளருக்கு இத்தகைய பாராட்டா ?' என்று.

மீனுட்சி சுந்தரம் தம் அறைக்குச் சென்று விட்டார். ராகவனும் அவரைப் பின்தொடர்ந்தார். எதிரில் அமர்ந்திருக்கும் வசந்தன் சீலியாவை விந்தையோடு பார்த்தான். 'தமிழரசி'யைப் பார்க்க வேண்டும் என்று ஆர்வம் காட்டிய இவளே அல்லவா தமிழரசி ? மீனுட்சிசுந்தரத்துக்கே இது தெரியாதா? என்ன குழப்பம் இது ? இதைக் கலைத்து உண்மையறிய வேண்டுமானுல் சீலியாவுடன் பேச வேண்டும். எப்படிப் பேசுவது? மற்றவர்கள் சுற்றியிருக்கும் போது இது சாத்தியமா? எனவே, வசந்தன் மௌனமாகவே உட்கார்ந்திருந்தான்.

குறிப்பிட்ட நேரம் வந்த போது அனைவரும் மேடையருகே சென்று அமர்ந்தனர். மிகச் சிறிய ஒரு முன்னுரையுடன் மீனுட்சி சுந்தரம் ஆரம்பித்தார். ''தற்போது முதற்பரிசைப் பெற்றிருக்கும் வசந்தன் அவர்கள் மருத்துவக் கல்லூரி மாணவர். அவர் எழுதிய கதையைப் பற்றியும், அதன் தரத்தைப் பற்றியும் இப்போது நான் சொல்லப் போவதில்லை. அதைப் படிக்கும் போது நீங்களே உணர்வீர்கள்.

எனவே, முதற்பரிசு ரூபாய் எழுநூறுக்கான 'செக்'கை மேடைமேல் வந்து பெற்றுக் கொள்ளும்படி வசந்தன் அவர்களை வேண்டிக் கொள்கிறேன்.''

பலத்த கரகோஷத்திடையே பிளாஷ் பல்புகளின் ஒளியில் குளித்தவாறே பரிசைப் பெற்றுக் கொண்டு வணங்கிவிட்டுத் தன் இருப்பிடம் வந்து அமர்ந்தான் வசந்தன்.

''இரண்டாம் பரிசு பெற்றிருக்கும் 'தமிழரசி' அவர்களின் உண்மைப் பெயர் திருமதி சீலியா என்பது.''



சீலியா பெரியப்பாவின் வார்த்தைகளால் திடுக்கிட்டாள். எல்லாம் உணர்ந்த சிரிப்புப் பார்வை மீனாட்சிசுந்தரத்திடமிருந்து சீலியாவிடம் பறந்தது. அவள் வெட்கத்தோடு சிரித்துக் கொண்டாள்.



மீனாட்சிசுந்தரம் தொடர்ந்தார்: ''உதவியாசிரியர் நிர்மலன் அவர்களைக் கேட்டேன், 'தமிழரசி வரவில்லையா?' என்று. 'கடிதம் அனுப்பியிருந்தோம். வந்துவிடுவார்கள்!' என்றார். ஆனால் வந்ததற்கான அறிகுறிகளையே காணோம். அப்பொழுதுதான் என் இளைய சகோதரன் விஷயத்தை என்னிடம் கூறினான். நான் திடுக்கிட்டாலும் மகிழ்ந்தேன். ஒருசில மணி நேரத்துக்கு முன்புதான் 'தமிழரசி' என் சகோதரனின் மகள் சீலியா என்பது தெரிந்தது. தமிழரசியின் எழுத்துக்களைப் பற்றி நான் கூறித் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை நீங்கள். இரண்டாம் பரிசுக்கான 'செக்'கை வந்து பெற்றுக் கொள்ளும்படி அவளை வேண்டுகிறேன்.....''

பலமான கை தட்டல்களுக்கிடையே சீலியா பரிசைப் பெற்றுக் கொண்டாள். வசந்தன் வியப்பில் ஆழ்ந்தான். சீலியாவைப் பற்றிய தகவல்கள் எல்லாம் மிகுந்த ஆச்சரியமாக இருந்தன. மீனாட்சிசுந்தரத்தின் சகோதரன் மகளா? பிரபல வக்கீல் ராகவனின் மகளா? இதை அவன் கூறியதே இல்லையே! உம்! அதற்குரிய சந்தர்ப்பமும், வேளையும் எங்கே வாய்த்தது? ஆனாலும் அவன் மனத்தில் அது ஓர் அந்தரங்க மனத்தாங்கலாக உறுத்தியது. கூட்டம் கலைந்து வெகு நேரமானபின் வசந்தன், மீனாட்சிசுந்தரத்திடம் விடைபெற்றுக் கொண்டான். சீலியா தன் தந்தையோடு தூர அமர்ந்திருந்தாள். விழிகளால் அவனைப் பார்க்க மட்டுமே முடிந்தது அவளால். இரவு விருந்துக்கு அவனை வரும்படி நிர்ப்பந்தித்த மீனாட்சிசுந்தரம் தம் காரையே அவனுக்கு அனுப்பி வைப்பதாகக் கூறியிருந்தார். அப்போது அவன் விடுதிக்குத் திரும்பவும் அவர் கார் தயாராக நின்றது. அவன் காரில் ஏறி அமர்ந்து கொண்டான். சீலியாவுக்கும் தனக்குமிடையே இருந்த அந்தஸ்து வேற்றுமை அவனை அச்சத்தில் ஆழ்த்தியது. கைவசமாகாத பரபரப்பு மனத்தைப் பிறுண்டியது.

“ஏனம்மா, சீலியா! எனக்குத் தெரியக் கூடாதென்றுதான் நீ ஹாஸ்டல் முகவரியிலிருந்து எழுதினாயாமே? ஏன் அப்படி ?”

என்று விசாரணையைத் தொடங்கினார் மீனாட்சிசுந்தரம்.

''ரவீந்திரநாத தாகூர் செய்தது போல் செய்தேன். நான் யார் என்று தெரியாமலேயே இருந்தால்தானே என் திறமையைப் புரிந்து கொள்ள முடியும்? தாகூர்கூடத் தம் சகோதரனே நடத்திய பத்திரிகையில் இப்படித்தான் எழுதி வெற்றி கண்டார்.''

ராகவன் சிரித்துக் கொண்டார். சுற்றிலுமிருந்தோர் திகைத்தனர்.

''பெரியப்பா! நீங்கள் தமிழரசியைப் பற்றிப் புகழும்போதெல்லாம் நான் எத்தனை சந்தோஷமடைந்தேன், தெரியுமா? என் பிறந்த நாளுக்குப் பரிசாக எனது சிறுகதைத் தொகுதியையே தந்தீர்களே. உங்களிடமிருந்து அந்தப் பரிசையும், உங்கள் வாயிலிருந்து என்னைப் புகழும் சொற்களையும் பெற்றுக்கொள்ள எத்தனை பாக்கியம் செய்திருக்கிறேன் நான்.....!'' பாசத்தின் பிணைப்பில் குழைவுற்ற குரலோடு சீலியா கூறியபோது அவளது இமைக் கரைகள் பனித்து விட்டன.

''இப்போதெல்லாம் எழுத்தாளர்களைக் கௌரவிக்கக் கற்றுக் கொண்டோம். நல்ல முறையில் அவர்களை மனம் விட்டு வாயாரப் புகழவும், கௌரவிக்கவும் செய்கிறோம். சிறுகதைத் தொகுதி வெளியிட்ட போதுகூட உண்மைப் பெயரைக் கூற விரும்பவில்லை என்ற உனது கடிதம் வந்தது. பாரதி என்பது உன் தோழியா? அவளையே தான் நாங்கள் தமிழரசி என்று நம்பி வந்தோம்.''

''ஆமாம், பெரியப்பா! நான் பாரதியை அவ்வாறு ஒப்புக் கொள்ளச் செய்தேன். எனது கதைகளின் உண்மையான மதிப்பீட்டையும் தரத்தையும் தூர இருந்தே உங்கள் வாயால் கேட்கும் சபலம்; வேறொன்றுமில்லை.''

''நல்லதம்மா. உன் தொழில்துறையில் எத்தனை நெருக்கடி ஏற்பட்டாலும், இந்த எழுதும் வித்தையையும், வாய்ப்பையும் மறுத்து விடாதே. மறந்து விடாதே. இதைத்தான் நான் உனக்குச் சொல்ல விரும்புகிறேன்.''

சீலியா எழுந்தாள். ராகவனும் எழுந்து நின்றார். மீனாட்சிசுந்தரம் தம்பியின் முதுகைத் தட்டிக் கொடுத்தார். ''ராகவா! குழலி மொழியின் மீதும், இலக்கியத்தின் மீதும் பற்றே இல்லாமல் வெறும் பெண் சொரூபமான ஆசைகளையும், பாசங்களையும் மட்டும் சுமந்து கொண்டிருக்கிறாளே என்று நான் வருந்தியிருக்கிறேன். இந்தக் கணம் முதல் அந்த நிராசை மறைந்து விட்டது. என்னுடைய ஆசைகளின் குறிக்கோள் உருவெடுத்து உன்னிடத்தில் வந்து கிளைத்து விட்டிருக்கிறது. என் மனப் பிரதிபலிப்பின் பரிபூர்ணமான உயிர் ஒன்றை உன்னை அறியாமலேயே நீ எனக்குத் தந்து விட்டிருக்கிறாய். நீ அவளது அழகுக்கும், அறிவுக்கும் மதிப்பளிப்பாய். நான் அவளிடம் இருக்கும் தமிழுக்கு மதிப்பளிக்கிறேன்.... உம், ராகவா, நீ புறப்படு! சீலியா! போய் வாம்மா.... நான் பிறகு வருகிறேன்.''

விடைபெற்ற கார் காந்திநகருக்குப் புறப்பட்டது. சீலியாவின் மனத்தைச் சுற்றிக் கட்டி, மல்லிகைப் பந்துக்குள் அமிழ்த்தியது போன்ற இனிமை பரவி நின்றது. சீலியாதான் காரோட்டிக் கொண்டிருந்தாள். அவள் அருகில் ராகவன் அமர்ந்திருந்தார். அவர் மனத்திலும் பரவசச் சுமை இதமாய் அழுந்தி நின்றது.

மதியச் சாப்பாட்டின் பொழுது, ''குழலிக்குத் திருமணம் நிச்சயமாகும் போல் இருக்கிறது'' என்று பேச்சை ஆரம்பித்தாள் துளசி.

''ஆமாம். அண்ணாகூட என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார்'' என்றார் ராகவன்.

''அப்படியா? சீலியாவைக் காட்டிலும் இரண்டு வயது சின்னவள் இல்லையா அவள்?'' வயதை ஆராய்ந்தாள் லிஸ்ஸி.

ஆனால் திருமணம் என்ற சொல்லைக் கேட்டதுமே வேறு ஒரு புதிய உலகுக்குப் பறந்துவிட்டது சீலியாவின் உள்ளம். சுகந்த மலர்ப் படுக்கையின் நடுவே மென்மையில் புதையுண்ட சிலிர்ப்பு. கண்கள் தெளிக்கும் கனவுகள். செயல்கள் விளக்கும் எண்ணங்கள். நெளிந்தோடும் தூண்டல்கள். கூற முடியாத மனச் சலனம். தெளிந்த இனிய மனச் சுமை. அந்த நினைவின் சுகத்தில் தாங்க முடியாத பூரிப்பும், அதை மறைக்கும் வித்தையுமாக இரு வேறு பணிகள் அவளுக்கு. அந்தப் பணியில் மார்பு படபடத்தது. எல்லோருக்கும் முன்னிலையில் தன் ரகசியமான உணர்வை மறைத்துத் தனக்குத் தானே மூடவும் முடியாமல் மகிழவும் முடியாமல் அவள் தவித்தாள்.

''நாம்தான் இன்று மாலை அண்ணா வீட்டுக்கு விருந்துக்குப் போகிறோமே! குழலிக்குப் பார்த்திருக்கும் அந்தப் பையனும் வருகிறானாம். முக்கியமாக இந்தச் சாக்கில் குழலியும் பையனைப் பார்த்து விடட்டும் என்றுதான் அண்ணாவின் ஏற்பாடு. அது பிரபலமாகிவிடக் கூடாதென்றுதான் பரிசளிப்புவிழாவை

# உங்களுக்கான: குளுமையான நறுமணத்தின் "முத்திரை"

# எக்லா உன்னதமான புதிய டால்க்

கிக்ரமான நறுமணம்...எக்லாவின் புத்துணர்ச்சி அளிக்கும் உயர்ந்த தன்மை! உபயோகித்துப் பாருங்கள்! இதன் ஆனந்தமான புத்துணர்ச்சி உங்கள் உடம்பு முழுவதும் பரவி இருப்பதை உணருங்கள். இது தான் குளுமையான நறுமணத்தின் முத்திரை. நாள் முழுவதும் நீங்கள் நிகரற்ற அழகுடன் விளங்க தயாரிக்கப்பட்டது. இன்றே எக்லா வாங்குங்கள். தினமும் உபயோகியுங்கள்.




கால்கேட்டின் உன்னதமான தயாரிப்பு.

EC.G.4.TAM



# உங்கள் அரவைப் பிரசினைகளை கிஷன் க்ரைண்ட்மாஸ்டர் கவனிக்கட்டும்!

சமையலறையில் உங்களுடைய தொல்லை—அரைப்பதுதான் கிஷன் கிரைண்ட்மாஸ்டரிடம் அதை விட்டுவிடுங்கள். தேங்காய் உட்பட எந்தப் பண்டமானாலும் கச்சிதமாக, சௌகரியமாக, விரைவாக, மாவாகவோ, பொடியாகவோ, அரைத்துத்தருகிறது. 5 முதல் 15 நிமிடங்களுக்குள் வேலை முடிகிறது உங்களிடம் கட்டாயம் இருக்க வேண்டிய பொருள்.

விருந்தாளிகள் வரும்போது, புத்தம்புதிய மசாலாப் பொடியில் சிற்றுண்டிகள் தயாரித்து அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்துங்கள். கிஷன் கிரைண்ட்மாஸ்டர் ஒன்று சொந்தமாக்கிக் கொள்ளுங்கள். இன்றே ஒன்று வாங்குங்கள்.

கிஷன் கிரைண்ட்மாஸ்டர்-மைனர், 100 கிராம் முதல் ½ கிலோகிராம் வரை அரைக்கக்கூடியது: கிஷன் கிரைண்ட்மாஸ்டர்–மேஜர் முக்கால் கிலோகிராம் முதல் 4 கிலோ கிராம்வரை அரைக்கக்கூடியது கிஷன் மினி: 50 கிராம் முதல் 250 கிராம்.

விவரமான துண்டுப் பிரசுரத்துக்கு இன்றே எழுதுங்கள்

**கிஷன் மானுபாக்சரிங் இண்டிஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.**

186, ஜகாரியா பந்தர் ரோடு, சிவ்ரி, பம்பாய்-15 போன்: 379461 & 374186



KMI-6

யொட்டி காரியாலயத் தொடர்புள்ளவர்கள் அனைவருமே இந்த விருந்துக்கு வருகிறார்கள் என்று வைத்திருக்கிறார்.''

சீலியா கொஞ்ச நேரம் எங்கோ பார்த்திருந்துவிட்டு யோசனையில் ஆழ்ந்தாள். வசந்தன் இவ் விருந்துக்கு அழைக்கப்பட்டிருப்பாரா? அவரை மறுபடியும் இன்று சந்திக்கும் வாய்ப்புக் கிட்டுமா?

சாப்பாடு முடிந்ததும் ராகவன் படுக்கச் சென்றார். துளசிக்குச் சரஸ்வதியிடமிருந்து அழைப்பு வந்தது. அவள் எதிர்வீட்டுக்கு ஏகினாள். லில்லி ஏதோ ஒரு நாவலைத் தொடர்ந்தாள். சீலியா கற்பனையில் மிதந்தாள். முதல் தினம் வசந்தனைச் சந்தித்த போது, 'காப்பியம்' இதழில் பிரசுரிக்கவென அவன் எடுத்த சின்ன அளவு புகைப் படங்களைக் கொணர்ந்து காட்டினான். மொத்தம் மூன்று படங்களில் ஒன்று சீலியாவிடம் சிறைப்பட்டது. அதைப் பாரதியின் கண்களினின்றும் மறைக்கத் தனது 'வானிட்டி' பையில் போட்டுக் கையோடு கொண்டுவந்து விட்டிருந்தாள் அவள். அந்தப் பையை அருகே இழுத்து ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்து மறைத்தவாறே புகைப் படத்தை எடுத்து அதில் பதிய வைத்துப் பார்த்தாள் அவள். 'இதற்குப் பதிலாக என் போட்டோ வேண்டுமாமே' என்று மனத்துக்குள் முணுமுணுத்துக் கொண்டாள். வைத்த கண் வாங்காமல் அதையே பார்த்தாள். அவனே நேரில் நின்று ஏதேதோ பேசுவது போல் இருந்தது. இது என்ன புதுமையான பழக்கம், புதுமையான போதை! இந்த நூதன உணர்வு படர்ந்த சுவட்டோடு — தாலாட்டும் களைப்பும் மேலிட்டது. அந்தப் புத்தகம் கரங்களின் அணைப் பூடே மார்பில் கவிழ மிக மெல்லிய குட்டித் தூக்கம் அவள் இமைகளை ஒட்டி மூடியது.

நாவலின் சுகமான முடிவில் லயித்த நிம்மதியோடு எழுந்த லில்லி, சீலியா சோபாவில் உட்கார்ந்த நிலையிலேயே மார்பில் புத்தகத்தைக் கவிழ்த்தவாறே உறங்குவது கண்டு அவளருகே வந்தாள். மென்மையான அவளது பிடியினின்றும் புத்தகத்தை எடுத்தபோதே சீலியா திடுக்கிட்டு விழித்தாள்.

''தூக்கம் வந்தால் நன்றாகப் படுத்து உறங்கேன்'' என்ற லில்லி புத்தகத்தை எடுத்தபின் அதனுள்ளிருந்து உதிர்ந்த புகைப்படத்தைக் குனிந்து எடுத்தாள். சீலியா தவிப்போடு தாயாரின் முகத்தை நோக்கினாள். 'ஹூ ஈஸ் திஸ் ?' என்ற கேள்வி பிறந்தது. கடுகு சிறுத்த காரமாகச் சின்னச் சன்னக் குரலில் உலகக் கடுமையே வந்துற்றது போலிருந்தது.

தாயின் முகம் நோக்கச் சேய்க்குத் துணிவில்லை. இந்த மாதிரி வேளையில் தாயும் மகளும் எதிரிகளாகவே நிற்க நேரிடுகிறது. சீலியாவின் உடலில் உவகையால் பரபரத்த பூரிப்பு ஒடுங்கி விட்டது.

(தொடரும்)







மாடர்ன் ஆர்ட்டிஸ்ட் மருதாசலம் : 15





# ஓவல்டின்

## புரதப் பொருள், வைட்டமின்கள், ஃபாஸ்பேட்டைடுகள், எடுகட்டிய புத்தம்புதிய பால், முதிர்ந்த பார்லி மால்ட் ஆகியவை வளப்பமாக அடங்கியது.

**உடல்நலமும், வலிமையும், தென்பும் உருப்பெற இவை யாவும் உங்களுக்குத் தேவை**



உடல்நலமும், வலிமையும், தென்பும் உருப்பெற உங்களுக்கு இன்றியமையாத எல்லா ஊட்டப்பொருள்களும் செறிந்தது ஓவல்டின். பாலுடன் ஓவல்டின் சேர்க்கும்போது, நீங்கள் சேர்ப்பது இன்சுவை மட்டுமல்ல —உடல்நலம், வலிமை, தென்பு.

அருந்துங்கள் இன்சுவைமிக்க **ஓவல்டின்**

இன்றும்.. நாளையும்... என்றும்!






ASP/JI/22/Tam.

ஓவல்டினைப் பாரதத்தில் [illegible] இண்டஸ்ட்ரீஸ் லிட். நிறுவனம், [illegible] ஏ. வாண்டர் லிமிடெட்டின் லைசென்ஸ் பெற்றுத் தயாரிக்கிறது. ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்

# படித்துப் பாருங்கள்

## நாடகக் கலை

நாடகத்தைப் பார்ப்பது எளிது: அதில் நடிப்பது கூட எளிது என்று சொல்லி விடலாம். ஆனால் அந்தக் கலையைப் பற்றி எழுதுவது அவ்வளவு சுலபமல்ல. ஆயினும் மிக ரஸமானதொரு நூல் தமிழர்களுக்குக் கிடைத்துள்ளது.

நாடகத் துறையில் ஐம்பது வருடங்களாக ஈடுபட்டு, நாடகத் துறையின் வளர்ச்சிக்கு அரும்பணி புரிந்து, நடிப்புத் துறையில் முன்னணியில் நின்று, அரசாங்கத்தின் கௌரவத்தைப் பெற்று மேல்சபைக்கு நியமனம் பெற்றுள்ள அவ்வை டி. கே. ஷண்முகம் அவர்களின் 'நாடகக் கலை' என்னும் நூலைத்தான் குறிப்பிடுகிறோம்.

இலக்கியம், அனுபவத்தின் தொகுப்பு என்பது இலக்கணமானால் அதற்கொரு இலக்கியமாக விளங்குகிறது இந்நூல்.

ஆதிநாளிலிருந்து தமிழகத்தில் எப்படி நாடகம் வளர்ந்து வந்திருக்கிறது என்பதைத் தமது அநுபவங்களுடன் பிணைத்துக் கூறும் போது, எழுத்தில் சுவை பிறந்து விடுகிறது.

''1918ஆம் ஆண்டில் என் ஆறாவது வயதில் நான் நாடகத்துறையிலே சேர்க்கப்பெற்றேன்.

''நான் நாடகத் துறையிலே இறங்கிய அந்த நாளில் நாடகக் கலைஞர்கள் மிகவும் இழிவாகக் கருதப்பட்டார்கள். கொலைகாரன், கொள்ளைக்காரன் முதலியவர்களைக் கண்டால் மக்கள் எப்படிப் பயந்து ஒதுங்கி வாழ்வார்களோ, அதே நிலைதான் நாடகக்காரனுக்கும் இருந்து வந்தது. நாடகக்காரனென்றால் குடியிருக்க வீடுகூடக் கொடுக்க மக்கள் பயந்தார்கள். அநேக ஊர்களில் மயானக் கரைக்கு அருகே பேய் வசிக்கும் வீடென்று ஒதுக்கப்பட்ட வீடுகளில்தான் அந்தக் காலங்களில் நாங்கள் குடியிருக்க நேர்ந்தது. 'ஒரு தொழிலுமில்லாதார் நாடகக் காரரானார்' என்பது ஒரு பழமொழியாகக் கூட உருவாகியிருந்த காலம்...''

இப்படி இருந்த நிலை எப்படி மாறியது என்பதை விளக்கும்போது நமக்கே மெய் சிலிர்க்கிறது. பம்மல் சம்பந்த முதலியார், சங்கரதாஸ் சுவாமிகள் போன்றோரும் பல நாடக சபைகளும், பல நடிகமணிகளும் உழைத்து இந்தக் கலையை உயர்த்திய வரலாற்றை ஓரளவு விரிவாகத் திரு அவ்வை சண்முகம் நினைவுகூர்கிறார் இந்நூலில்.

''நடிப்புக் கலை''யைப் பற்றிய கட்டுரையில் பொதுவான பல கருத்துக்களையும், இன்றைய நடிகர்களுக்குப் பயன் தரத்தக்க பலப் பல யோசனைகளையும் கருத்துக்களையும் தமது சொந்த அனுபவங்களோடு உருத்துக் கொண்டே போகிறார்.

''நடிகனுடைய கண்கள்தான் மற்ற உறுப்புக்களைவிட மிகவும் முதன்மையானவை. கண்கள் இருளிலே ஒளியாக, நடிப்பிலே உயிராக விளங்குகின்றன என்று சொல்லலாம். சபையிலிருக்கும் ரசிகப் பெருமக்கள் நடிகனின் கண்களைத்தான் நன்கு கவனிக்கிறார்கள். அவைகளின் மூலம்தான் பாத்திரத்தின் தன்மையைப் புரிந்து கொள்ளுகிறார்கள். ஒவ்வொரு நடிகனும் பேசும் கண்கள் பெற்றிருக்க வேண்டும்.''

கலை, கலைக்காகவா? பிரசாரத்துக்காகவா? என்ற விஷயம் பற்றி மிக மிகத் தெளிவாகச் சர்ச்சை புரிகிறார்.

''கலை வழி என்பது அன்பு வழி, அற வழி. எந்தக் கருத்தையும் இனிமையாகப் பண்போடு, அன்போடு மக்களுக்கு எடுத்துச் சொல்லி, மனமாற்றம் ஏற்படும்படியாகச் செய்வதுதான் கலை வழி. அதுதான் பயன் தரும் வழி. அந்த வழியில் செல்வதே கலைஞனின் கடமை.''

அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் 1959ம் ஆண்டு, அக்டோபர் 27, 28, 29 தேதிகளில் மாணவர்களுக்காக திரு டி. கே. ஷண்முகம் மூன்று சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அவற்றின் தொகுப்பே இந்நூல்.

சர்வகலாசாலைப் பட்டம் பெறாதவர்கள் கூட அறிவும் ஆற்றலும் மிக்கவர்களாக இருக்கக்கூடும்; அவர்களை மதிக்க வேண்டும் என்று நமது சர்வகலாசாலைகள் உணரத் தொடங்கி விட்டன என்பதும் இந்நூலிலிருந்து வெளியாகிறது.

கிடைக்குமிடம்: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், பிரைவேட் லிமிடெட், சென்னை-2; விலை: ரூ. 2.25.

## முள்ளும் மலரும்

கல்கி வெள்ளிவிழா இலக்கியப் பரிசுத் திட்டத்தில் ரூபாய் பத்தாயிரம் முதல் பரிசு பெற்ற நாவல் முள்ளும் மலரும். கல்கியில் தொடர்ந்து இடம் பெற்று வந்தபோது பல்லாயிரக்கணக்கான வாசகர்கள் படித்து மகிழ்ந்த கதை. ஒரு சிறந்த நாவலுக்குரிய எல்லா லட்சணங்களையும் தன்னகத்தே கொண்ட முள்ளும் மலரும் கதையை வாரா வாரம் படித்து வருவதை விட முழுமையாகப் புத்தக உருவில் கரத்தில் ஏந்திப் படிக்கும் போது சுவை கூடும், இலக்கிய ரசனை பெருகும். ஏனெனில் பரிசு தரப்பட்டது நாவலுக்கே அன்றித் தொடர் கதைக்கல்ல.

கதாபாத்திரங்களின் குண இயல்புகளைச் சொல்லாமல் வெளிப்படுத்துகிற அழகு நாவலாசிரியர் திரு உமாசந்திரனின் திறமைக்குச் சான்று. அது மட்டுமா? அமைதியான கதை ஓட்டம், மிகைப்படுத்தப்படாது அந்த அந்தச் சந்தர்ப்பத்துக்கேற்றவாறு சரியான அளவில் வெளிப்படுகிற உணர்ச்சிகள், இனிய சூழ்நிலையின் அழகிய வர்ணனைகளில் கதாசிரியர் கையாள்கிற எளிய நடை ஆகியவை எல்லாம் சேர்ந்து முள்ளும் மலரும் என்ற இப்படைப்பினை முதல்தரமான நாவலாக்குகின்றன.

ஓவியர் கல்பனாவின் அழகிய வண்ணப் படங்களுடன் தரமான முறையில் புத்தகத்தைப் பிரசுரித்திருக்கிறார்கள்.

பிரசுரம்: அருணா பப்ளிகேஷன்ஸ், 13/1, உஸ்மான் ரோடு, தியாகராய நகர், சென்னை—17; விலை ரூ. 9.00.

# பேராசிரியர் மயிலை சிவமுத்து

சிறுவை மோகனசுந்தரம்

அச்சுக் கோப்பவராய், மரச் செதுக்குச் சித்திரக்காரராய், அடிநிலை ஆசிரியராய், உயர்நிலைப் பள்ளி தமிழ் ஆசிரியராய் இருந்த ஒருவர் தம் தகுதியால், உழைப்பால், பேராசிரியருமானார். இவர் ஒரு கவிஞர். சுவைபட எழுதும் குழந்தை எழுத்தாளர், பாட நூல் ஆசிரியர், சோதிட நூல் வல்லுநர். இத்தனைக்கும் மேலாக ஒரு சைவ சித்தாந்தி. இத்தகு பெரியாரைப் பெத்துநாயக்கன் பேட்டை வாசிகள், தமிழ் அறிந்த அன்பர்கள் ''நமது மயிலை'' என்றே செல்லமாக அழைப்பர்.

சிவ. முத்து அவர்கள் 1892ஆம் ஆண்டு ஜனவரி 14ஆம் நாள் சிவானந்த முதலியாருக்கும் விசாலாட்சி அம்மையாருக்கும் இரண்டாவது குழந்தையாகப் பிறந்தார். தந்தை ஒரு பள்ளி ஆசிரியர். வறுமை காரணமாக ஏழாம் வகுப்பு வரையே பள்ளிப் படிப்பு. பின்னர் சித்திரக் கலாசாலையில் மரச் செதுக்குச் சிற்பப் பயிற்சி. அதனைவிட்டு அச்சுக்கோப்பவராய்ச் சேர்ந்து ரூ. 4 ஊதியத்தில் தாயைக் காக்கும் கடமை. காலுறு குழாய்ப் பிட்டும் நீசி நீரும் கொள்ள வேண்டிய வாழ்க்கை நிலை.

பூவை அஷ்டாவதானம் கலியாணசுந்தரர் சந்திப்பால் தமிழ்மீது அளவிலாப் பற்று ஏற்பட்டது. மறைமலையடிகளார் தலை மாணுக்கர் பேராசிரியர் திரு மணி திருநாவுக்கரசு முதலியார் அவர்கள் தொடர்பு ஏற்பட்டு அவரையே ஆசிரியராகக் கொண்டு தமிழ் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றார். சைவ பாடசாலையின் தலைமை ஆசிரியராய் விளங்கிய இவர் தம் ஆசிரியர் உதவியால் முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியின் தமிழ் ஆசிரியர் ஆனார். சென்னை சிவனடியார் திருக்கூட்டம் என்ற அமைப்பின் மூலம் தாமே தோற்றுவித்த பால சைவ சபையின் மூலமும் சைவ சமய நற்பணிகளை மேற்கொண்டார். தேவாரத் திருமுறைகளை ஆய்ந்து பல குறிப்புக்களை எடுத்து நூலாக்க முயன்றார். வெற்றி பெறவில்லை.

தாம் ஒரு விஞ்ஞானியாக விளங்க வேண்டும் என்று இளமையில் விரும்பினார். விண்வெளியில் உள்ள விண்மீன்களின் அசைவுகளை ஒருவாறு அறிவார். சோதிடக் கலையில் அதிக ஆர்வம். இவரிடம் ஆயிரக் கணக்கான அன்பர்களின் சோதிடக் குறிப்புகள் உள்ளன.

தம் முயற்சியால் ஆங்கிலம் கற்றவர். அச்சுக் கலை இவருக்கு அவ்வகையில் உதவியது. திரு ஆர்தர் மீ அவர்கள் எழுதிய கலைக் களஞ்சியமும், 'உலகின் ஆயிரம் வீரர்கள்' என்ற நூலும் இவரைப் பெரிதும் கவர்ந்தன. வறுமையிலும் நூல்கள் வாங்கும் பழக்கம் அதிகம் உண்டு.

1931 முதல் 1938 வரை நான் மாணவர் மன்றம் என்ற அமைப்பினைக் கண்டு நடத்தியபோது இவர் தம் ஆசிரியர் நினைவாக ''மணி அரசு மன்றம்'' என்ற அமைப்பினைக் கண்டார்கள். மாணவர் மன்றத்துக்கு டாக்டர் எஸ். தருமாம்பாள், மயிலை சிவ. முத்து, அறிஞர் சி. என். அண்ணாதுரை ஆகியவர்கள் காப்பாளராக விளங்குகிறார்கள். காப்பாளராக விளங்கிய மயிலை சிவமுத்து அவர்கள் மாணவர் மன்றத்துடன் இரண்டறக் கலந்து, தம்மையே அதில் அர்ப்பணித்துக் கொண்டார். அவர் டாக்டர் எஸ். தருமாம்பாள் அவர்களின் உதவியால் இன்று ரூபாய் ஒரு லட்சம் பெறும் கட்டடத்தை மன்றத்துக்கு எனக் கண்டு மறைந்திருக்கிறார்.

1943ஆம் ஆண்டு முதல் தமிழ் ஆசிரியர் கழகத்தில் பங்கு கொண்டு தமிழ் ஆசிரியர்களின் நல்வாழ்வுக்காகப் பல சிறப்பான பயனுள்ள பணிகளைச் செய்தார். தமிழ் ஆசிரியர்கள் நிலை உயர ''தமிழ் ஆசிரியர்கள் பட்டினி வாரம்'' என்ற இயக்கத்தைக் கண்டு வெற்றி பெற்றார்.

இவரது அருந் தொண்டால் ''தமிழ் நெறிக் காவலர்'' என்று சிறப்பிக்கப் பெற்றார். தமிழகப் புலவர் குழுவில் ஒருவரானார். எறும்பு போல் இடையறாது உழைத்தார். ''நல்ல எறும்பு'' என்ற சிறு நூல் இயற்றிப் புகழடைந்தார். ''முத்துப் பாடல்'' என்ற குழந்தை இலக்கியத்துக்கு நமது நடுவண் அரசு பரிசு வழங்கி இவரைச் சிறப்புச் செய்தது. இவர் இயற்றிய நித்தில வாசகங்கள் (ஐந்து தொகுப்புகள்) இவர் பெற்ற சிறுவர் உளவியல் திறனுக்கு ஓர் எடுத்துக் காட்டு.

இவர் படைத்த பரந்தாமன், சம்பந்தன், நல்ல குழந்தை, சிவஞானம், தங்க நாணயம் முதலிய சிறுவர் இலக்கியங்களை முதியவர்களும் படித்து இன்பம் பெறலாம். திருக்குறளுக்கு ஓர் இனிய எளிய உரை எழுதிப் பல பேராசிரியர்களின் பாராட்டுதல்களைப் பெற்றார்.



மறைந்த மயிலை சிவமுத்து

இவருக்கு ஆணில் இரண்டும் பெண்ணில் மூன்றும் வாரிசாக உள்ளனர். எல்லோரும் மணமானவர்கள்.

மயிலை சிவ. முத்து அவர்கள் 6–7–68 சனிக்கிழமை இரவு 12–30 மணிக்கு அரசாங்க மருத்துவ மனையில் காலமானார்கள். இதோ இவரைப் பற்றித் தமிழ்த் தென்றல் திரு. வி. க. தம் வாழ்க்கை வரலாறு நூலில் கூறுகிறார்:

''தமிழிலும் சைவத்திலும் பண்பட்டவர் மயிலை சிவ. முத்துக்குமாரசுவாமி முதலியார்.

''சிவ. முத்துக்குமாரசுவாமியின் பணி விளம்பரமற்றது. அமைதியில் நிகழ்வது.''

அத்தியாயம் 32

# பொன்னி வனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு

## நீலமயிலின் மேனாட்டு மோகம்!

அந்தப்புரத்தில் நாயக்கமாதேவியார் ஒரு மஞ்சத்தின் மீது சாய்ந்திருந்தார். அவருடைய தம்பி அமைச்சர் சின்னப்பெருமான் உடனே புரோகிதரை அழைத்து வரும்படி சம்பிரதியிடம் உத்தரவிட்டார். இதற்கு சம்பிரதி, ''புரோகிதம் மாத்திரம் போதுமா, மந்திரவாதியையும் கூட்டி வரவேண்டுமா?'' என்று கேட்டார். யாரைக் கூப்பிடுவது என்று தெரியாமல் அரண்மனைக்குள் பரபரப்புடன் ஆளுக்கு ஒருவரைக் கூப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்போது அரசிளங்குமாரி நீலமயில் தன்னுடைய பிடில் மாஸ்டர் பீட்டர் துரையை அழைத்துக் கொண்டு தன் அன்னையாரின் அருகே வேகமாக வந்தாள். எல்லோரும் விலகினர். பீட்டர் துரை தம் கையிலிருந்த நீல நிறக் குப்பியைத் திறந்தார். அதற்குள் கல் உப்பைப் போல் ஏதோ ஒன்று இருந்தது. அந்தக் குப்பியை மகாராணியின் நாசிக்கு நேரே பிடித்தவுடன் ராணியாரின் எள்ளுப் பூப்போன்ற நாசி முருக்கப் பூப்போல் சிவந்தது. அரை நொடியில் மயக்கம் தெளிந்தது. ராணியார் உடனே கண் திறந்தார். 'அம்மா' என்று எழுந்து உட்கார்ந்தார். அரை நொடியில் மயக்கம் தீர்ந்த அதிசயத்தைக் கண்ட அனைவரும் 'வெள்ளைக்காரன் மருந்தே மருந்து' என்று பிடில் மாஸ்டரைப் பாராட்டினார்கள்.

மங்கம்மாள் ஆட்சி புரிந்த போது காந்தளூர் பாதிரியார் திருச்சி அரண்மனையில் ராணியைச் சந்தித்துப் பல அயல் நாட்டு வாத்தியங்களையும் பளிங்கில்



செய்யப்பட்ட பூகோளம் ஒன்றையும் பரிசளித்தார். அந்தப் பரிசுப் பொருள்கள் வீணாகக்கூடாதே என்ற எண்ணத்தில் மகாராணி மீனாட்சி சில அயல் நாட்டு இசை வித்வான்களையும், வாத்தியத்தில் வல்லவர்களையும் அரண்மனையில் நியமித்து தம் அருமைப் புதல்விக்கு இசையும், நடனமும் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்திருந்தார். இதைத் தவிர 'ஜனானா ப்ரீஸ்ட்' என்று அழைக்கப்படும் இரண்டு கன்னி மாதர்கள் அடிக்கடி அரண்மனைக்கு வந்து தம் நற்பணிகளுக்காக ராணியின் ஆதரவைப் பெற்றுச் செல்வார்கள். ஆனால் மகாராணி அவர்களிடமெல்லாம் ''உங்கள் மதப் பிரசாரத்தை இங்கே செய்யாதீர்கள்'' என்று கண்டிப்பாக உத்தரவிட்டிருந்தார்.

பாடமா சொல்லிக் கொடுக்க வேண்டும், பழகினால் போதாதா? நீலமயில் பாலப் பருவம் உடையவள். பழக்க வழக்கங்கள் பசுமரத்தாணி போல் பதியும் பருவம். மெல்ல மெல்ல அயல் நாட்டு மோகம் அவள் தலையில் ஏறியது. ''பரத நாட்டியத்தில் பாதத்துக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. பார்ப்பவர்கள் கன்னிகையின் முகத்தைப் பார்ப்பார்களா? காலைப் பார்ப்பார்களா? இந்தப் பரதம் மேனாட்டு நடனத்துக்கு இணையாகாது'' என்பாள். 'அந்நிய சங்கீதத்துக்கு இணையாகாது நம் சங்கீதம்' என்பாள். கலையில் மட்டுமல்ல, நம் வாழ்க்கை முறையிலும் பல குறைகளைக் கண்டாள் அவள். 'கோயில் சிலைகளெல்லாம் இப்படியா தொங்கத் தொங்கச் சேலையைக் கொசுவிக் கட்டிக் கொண்டிருக்கின்றன? அடடா! என்ன அழகு! இயற்கை படைத்த அழகை அப்படியே எடுத்துக் காட்டுகின்றனவே. அயல் நாட்டார் உடைகளும் அழகை அப்படியே எடுத்துக் காட்டுகின்றன. துரைசாணிகள் நடையே நடை; அவர்கள் உடையே உடை' என்பாள்.

ஒரு நாள் இரண்டு அரபுக் குதிரைகளை மகாராணியின் முன் கொண்டு வரச் செய்தாள். ''அம்மகாரு, அம்மகாரு! இந்தப் புரவிகளைப் பாருங்கள். இதில் எது அழகு?'' என்றாள். மகாராணி அன்போடு வந்து பூங்காவில் நிற்கும் புரவிகள் இரண்டையும் பார்த்தாள். அதில் ஒன்று பிடரி மயிர் வெட்டப்படாமல்



பிறந்த மேனிக்கு நின்றது. மற்றொன்று பிடரி மயிரையும் அளவாகக் கத்தரித்து உடல் முழுதும் தேய்த்து விடப்பட்டு நின்றது. மகாராணியாரே இரண்டாவது குதிரையைக் கண்டு பிரமித்தாள். ''மயிர் வெட்டப்பட்ட குதிரை தான் அழகு. அதிலென்ன சந்தேகம்?'' என்றாள். உடனே உள்ளே ஓடினாள் நீலமயில். முட்டை வடிவான நிலைக் கண்ணாடியின் முன் வட்ட வடிவமான பரங்கி நாற்காலியில் அமர்ந்தாள். எதிரில் அகில் சந்தனம் போன்ற கட்டைகள் போட்டு எரிந்து கொண்டிருந்த கணப்பில் இரண்டு சூட்டுக் கோல்கள் காய்ந்து கொண்டிருந்தன. அவை சிறிது காய்ந்தவுடன் இரு துரைச் சானிகள் அவற்றை எடுத்து நீல மயிலின் நெருங்கிய கருங் குழலை அந்தச் சூட்டுக் கோலில் சுற்றிச் சுருள் சுருளாக ஆக்கிவிடவே, இருண்ட குழல் பொன் நிறமாக மாறியது. கூந்தல் குதிரை வாலைப்போல் வெட்டப்பட்டது. அதைக் கண்டு அவளே மயங்கினாள். முதலில் முடியில்தான் சூடு பிடித்தது. பிறகு மூளையிலும் ஆங்கில மோகத்தின் சூடு பிடித்தது. ''மயிலே!'' என்று கூப்பிட்டுக் கொண்டே அவள் அருகில் வந்தார் மாமன் சின்னப் பெருமாள். அவருடைய நெற்றியிலிருந்த பட்டை நாமமும், காதுகளில் தொங்கிய முக்கோணக் கடுக்கன்களும், மேலே போட்டிருந்த பீதாம்பரமும் அவள் கண்களுக்குக் கர்நாடகமாகக் காட்சியளித்தன. ''ஏமி மாமா?'' என்றாள் நீலமயில். சின்னப் பெருமாள் திறந்த வாய் மூடாமல் அவளையே வியப்புடன் பார்த்தார்.

''உன்னைப் பார்த்தா பொம்மைக் கணக்கா இருக்கே'' என்றார்.

''உங்களைப் பார்த்தா பூதம் மாதிரி இருக்கு மாமா!'' என்று சிரித்தாள் நீலமயில். அவரும் கூடச் சேர்ந்து சிரித்தார்.

''மயிலே! என்னை, நமது அரசுக்கு எதிராகக் குழப்பம் செய்து வரும் பாளையக்காரர்களை ஆனந்தராவுடன் சென்று அடக்கி வருமாறு அக்கான் ஆணையிட்டிருக்கிறார்கள். உன்னிடம் விடைபெற்றுச் செல்லவே வந்தேன்'' என்று மிகவும் வருத்தத்தோடு கூறினார் சின்னப் பெருமாள்.

''புறப்படுங்கள் மாமா! நீங்க இந்தக் கோலத்தோடு போய் நின்றாலே போதும். படைகள் ஓடி விடுவார்கள். ஏன் மாமா, நீங்க பரங்கி வீரர்களைப்போல் தைத்த உடைகளை அணிந்தால் என்ன? இந்த உடையில் உங்க வாளை உருவவே ஒரு நாழிகை ஆகுமே?

''நெற்றியைப் படைத்த கடவுள் அதில் நீறும் நாமமும் தேவை என்றால் அவரே போட்டிருக்கக் கூடாதா? மூட நம்பிக்கை. ஒரு கடவுளுக்கு ஆயிரம் நாமங்களில் அர்ச்சனை. அதற்கே பதினாயிரம் திருஉருவங்கள். இருக்கிற வெண்கலத்தை யெல்லாம் உருக்கி உற்சவ மூர்த்திகளாக்கி விட்டால் பீரங்கிக்கு வெண்கலம் கிடைக்குமா? சேச்சே! என் வாத்தியார்களெல்லாம் சிரிக்கிறார்கள்.''

அப்பொழுது எங்கிருந்தோ சிரிப்பொலி கேட்கவே இருவரும் திரும்பினார்கள். அங்கே சிரித்துக்கொண்டே மகாராணி மீனாட்சி வந்தாள். தன் அருமை மகளின் உடை அலங்காரத்தைப் பார்த்தவுடன் திடுக்கிட்டாள். பொன்னில் முடி வைத்தது போல் இயற்கையான முடியே பொன் ஒளி. அவள் முகத்தில் சாயம் பூசப்பட்டிருந்தமையால் முகம் தனியாகத் தெரிந்தது. புருவத்தைக் கூட வில்போல் வெட்டிக் கடை விழியின் ஓரம் வரை விரிந்திருப்பதைப் பார்த்தாள். உதட்டில் பூசப்பட்டிருந்த சிவப்பு வண்ணம் 'பவளம் போல் உதடு' என்ற பாடல் வரிகளை நினைவுக்குக் கொண்டு வந்தது. அந்த உதட்டுச் சாயம் வெண் முத்துப் போன்ற பற்களின் ஒளியைப் பன் மடங்கு எடுத்துக் காட்டியது. ஏன், அவள் பேசிய வெள்ளை மொழிகள்கூட இப்போது வர்ண ஜாலத்துடன் வெளி வந்தன. நேற்று வரையில் பச்சைக் குழந்தையாகத் தோன்றிய தன் மகள் இன்று அந்த உடையில் பருவப் பெண்ணாக விளங்குவதைப் பார்த்தாள் ராணி. அவளை அறியாமல் ஒரு பெருமூச்சு வந்தது. 'இவள் வயதில் நாமும் இம்மாதிரி நாகரிக அழகைச் செய்து கொள்ளாமல் போனோமே?' என்ற பெருமூச்சுத்தான் அது. ஆயினும், ''இதென்னம்மா அலங்கோலம்? பார்த்தால் பரங்கிக்காரி மாதிரி இருக்கிறாய்? உடனே இவைகளை யெல்லாம் களைந்து நெற்றி நிறையக் குங்குமத்தை இட்டுக் கொண்டு வா'' என்றாள். அந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திலேயே மகளின் முகக் குறி மாறுவதையும் மலர் விழிகளில் நீர் சொரிவதையும் கண்டாள் மகாராணி.

''சரி சரி. போனால் போகட்டும். உனக்கும் ஆசை இருக்காதா? இன்றைக்கு இப்படியே இருக்கட்டும். நாளை முதல் இப்படி யெல்லாம் செய்யக் கூடாது!'' என்றாள் ராணி.

''என் அம்மா இல்லையா?'' என்று அவளை இரு கைகளாலும் அணைத்துக் கொண்டாள் நீலமயில். மகாராணியின் கைகள் செல்லமாக மகளின் சுருண்ட குழலைத் தொட்டு அழுத்தின. ஆனால் வீரத்துடன் மறுபடியும் அந்த வணங்காமுடி எழுந்தது. அவளது மூக்

# இந்தியன் ஆயில் வழிகாட்டுகிறது



நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் விமான போக்கு வரத்திற்கு ஒரு முக்கியமான பொறுப்பு உண்டு. தனியார் மற்றும் பொதுத்துறை வளர்ச்சிக்கேற்ப அதிகமான மக்களும், பொருள்களும் மற்றும் தபால்களும் இந்தியாவிலுள்ள நகரங்களிடையே துரிதமாய் பயணிவர இந்தப் பொறுப்பும் ஆண்டுதோறும் வளருகிறது!

அதை ஒப்பேற்றும் வகையில் **இந்தியன் ஆயில்** செயலாற்றுகிறது. நாடெங்கிலும் உள்ள அதன் சர்வீஸ் ஸ்டேஷன்கள் முழுப் பயிற்சி பெற்ற பணியாளர்களின் பிரத்தியேக சேவையின் மூலம் ஏவியேஷன் எரிபொருளை தங்கு தடையின்றி வழங்கி, போக்கு வரத்து வசதியைச் சீராக்குகிறது.







**இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் லிட். —**
**பொருளாதார வளமைக்கு உறுதி கூறும் தேசீய நிறுவனம்**

# 'நான்
# புதிய டிராக்டர்
# வாங்கினேன்–
# பஞ்சாப் நேஷனல்
# பாங்கிற்கு
# என் நன்றி'





டிராக்டர்கள், பண்ணைக்கருவிகள்,
குழாய்க் கிணறுகள், பம்பு செட்டுகள்,
தரமான விதைகள், ரசாயன உரங்கள்,
பால்பண்ணை முதலிய வற்றுக்கு
சாதனங்கள் ஆகியவை
வாங்க விவசாயிகளுக்குப் பஞ்சாப்
நேஷனல் பாங்க் முன்பணம்
வழங்குகிறது. நீண்டகால, குறுகிய
காலத் தவணைகளுக்கு முன்பணம்
கொடுக்கப்படுகிறது.

மற்ற விவரங்களுக்கு அருகிலுள்ள
பி என் பி கிளையை அணுகுங்கள்.
நாடெங்கிலும் எங்களுக்கு 500க்கும்
அதிகமான கிளைகள் உள்ளன.

## பஞ்சாப் நேஷனல் பாங்க்

1895ம் ஆண்டிலிருந்து நாட்டிற்குப்
பணியாற்றுகிறது

தலைவர்: [illegible]

PR.PNB.606-Tam-1

கில் ஒரு நெடி ஏறவே, இரண்டு தும் மல்களைத் தும்மினான்.

''அக்கா! நான் போருக்குப் புறப் பட்டுக் கொண்டிருக்கிறேன், நீங்கள் தும்முகிறீர்களே!'' என்று திடுக்கிட்டுக் கேட்டார் சின்னப்பெருமாள்.

''இரட்டைத் தும்மல்தானே, இரட் டிப்பு வெற்றி கிடைக்கும்'' என்றான் தமக்கை.

முதலில் போரில் வெற்றி; பிறகு வாழ்வில் வெற்றி என்று மனப்பால் குடித்துக் கொண்டே போருக்கு விரைந் தார் தம்பி. அன்னையும் மகளும் ஒரு வரையொருவர் பார்த்துக் கொண்டே நின்றார்கள். இருவர் முகத்திலும் திலகம் இல்லை. ஆயினும் ஒரு கேள்விக் குறி இருந்தது.

ஜனநாயகத்தில் பொறுமையை வளர்ப்பதும், பொறாமையை உண் டாக்குவதும்தான் அரசியல் வாதி களின் உடலும் உயிரும். இந்த இரண் டும் இல்லாவிட்டால் இவர்களுக்கு இடமில்லை.

நாயக்கர் ஆட்சியில் ஜனநாயகம் இல்லை. ஆதலால் பொறுமையை வளர்ப்பவர்கள் இல்லை. அதோடு ஏழை பணக்காரன் பேதமும் இந்த அளவுக்கு இல்லை. ஏனெனில் அரசன் அமைச்சன் இவர்களைத் தவிர மற்ற எல்லோருமே ஏழைகளாக இருந்தார்கள். ஆனால் பொறுமை அரச குடும்பத்தில் மட்டும் பெரிதாக இருந்தது. பங்காரு திருமலை நாயக்கர் அமைச்சர் இருவரின் பொறு மையால் தூண்டி விடப் பட்டார். நாயக்கப் படை, தஞ்சைப் படை இரண்டாலும் துரத்தப்பட்டு, காடு மேடெல்லாம் ஓடி அலைந்தார்.

அக்கால அரசியலில் பலரிடம் பல சேனைகள் இருந்தன. ஆளுக்கு ஆயிரம் வீரர்களையும், ஐம்பது குதிரைகளையும் வைத்துக்கொண்டு ஊரையே, பல அரசு களையே ஆட்டி வைத்துக் கொண்டிருந் தார்கள். அவர்களுக்குக் கட்சி, மதம், கொள்கை இதெல்லாம் கிடையாது. காசே கண் கண்ட தெய்வம். பணம் கொடுத்தவர்களுக்குப் படை தரு வார்கள். 'கொடுக்க வசதியில்லையா? சரி, நீ தாக்கும் ஊரில் மூணு நாள் கொள்ளை கொடு' என்பார்கள். யாரைக் கொள்ளையடிப்பது?

சேர, சோழ, பாண்டியர்களுக்குப் பிறகு தமிழ் நாட்டை ஆண்டதில் முக்கால்வாசி அயலார்கள். நித்தம் நித் தம் போர், நித்தம் நித்தம் படைச் செலவு என்று இருந்ததால் அவர்கள் ஒருவன் ஓட்டு வீடு கட்டும் வரை விட்டு வைக்க மாட்டார்கள். கொஞ்சம் தலை நிமிர்ந்தால் போதும். ''உன் பணத்தை என்னிடம் கொடு'' என்பார்கள்.

வியாபாரியை உயர விடமாட் டார்கள். அவன் தேனீயைப் போல் சேர்ப்பான். ஒரே நாளில் தேன் கூட் டைக் கலைத்து விடுவார்கள்.

விவசாயிகளின் கஷ்டத்தையோ கேட்கவே வேண்டாம்! தலையாரி முதல் தண்ணீர் விடுபவன் வரை எல்லாரும் கைக்கூலி வாங்குபவர்கள். இதைத் தவிர, அரசனின் சுபேதார்கள் ''அறு பது எழுபது வாரம் பிரித்துக் கொடு'' என்று கேட்பார்கள்.

இவ்வளவையும் மீறிச் சிலரிடம் இரண்டொரு காசு சேருமானால் அதை, அவர்கள் குந்துமணி, நெல், கோதுமை உளுந்து போல உருட்டித் தங்கமாக மாற்றி வைத்திருப்பார்கள். கொடி, கொலுசு, காப்பு, தாலி, தோடு என்று போட்டுக் கொண்டு வெளியே போனால் கள்வன் கழற்றிக் கொண்டு காதோடு காதைச் சேர்த்துப் பூட்டி விடுவான். ஆதலால் யுத்த காலங்களில் ஆணும் பெண்ணும் தங்கள் பையில் இருந்த தங்கத்தை வாயில் போட்டு விழுங்கி விடுவார்கள்.

கொள்ளை அடிக்கும் சேனைகளோ ஈவிரக்கமின்றி மக்களின் வயிற்றை வாளால் கிழித்துத் தங்கத்தைத் தேடு வார்கள். பொன்னை எடுத்துக்கொண்டு, பிணத்தைப் போட்டு விட்டு ஓடி விடு வார்கள்.

இத்தனை கொடுமைகளும் இரு நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் நமது புண்ணிய பூமியிலே கண்ணிய மாக நடைபெற்று வந்தன. எவரேனும் 'சோழ நாட்டைப் பிரித்துக் கொடு, பாண்டிய நாட்டைப் பங்கு போடு' என்று கேட்பாராயின், அவர்கள் நாட் டைப் பழைய நிலைக்குக் கொண்டுபோய் மக்களைப் பலியிடத் துணிந்தவர்கள் ஆவார்கள்.

இத்தகைய போருக்குத் தன் தம் பியை அனுப்பிவிட்டு மீனாட்சி தன் மகளின் அழகைப் பார்த்துக் கொண் டிருக்கையில், திடீரென்று அவளது முகம் சோகமாக மாறியது. கடை விழி களில் கண்ணீர் மல்கியது.

''மகளே! அழகு ஆபத்து. அது அவதூறின் பிறப்பிடம். எச்சரிக்கை யாக இரு'' என்றாள்.

''அவதூறுக்கென்ன அம்மா? யார் வேண்டுமானாலும் சொல்லலாம். என் பிடில் மாஸ்டர் கூடத்தான், தாத்தா திருமலை அய்யனைப் பற்றிச் சொன்னார்'' என்றாள்.

ராணி மிக அக்கறையுடன் அவளைப் பார்க்கவே, ''அம்மகாரு! அவர் ஏதோ

அறுநூறு ஆண்டுகளாய் அணையாமல் எரிந்து கொண்டிருக்கும் அடுப்பைப் பார்த்திருக்கிறீர்களா ?

தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருவாவடுதுறை ஆதீனத்துக்கு வந்தால் அந்த அதிசய அணையா அடுப்பைக் காணலாம். அறுநூறு ஆண்டுகளுக்கு முன் இந்த ஆதீனத்தை நிறுவிய ஸ்ரீலஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் ஆதீனத்தின் இந்த அடுப்பை முதன் முதல் தொடங்கியபோது இது என்றென்றும் அணையாமல் இருந்து வரவேண்டும் என்று திருவுள்ளம் கொண்டபடி இந்த அடுப்பு ஒரு விநாடிகூட அணையாமல் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. ஆம், அன்று அவர் இட்ட அடுப்புத் தீ இன்று வரை தொடர்ந்து எரிந்துகொண்டிருக்கிறது. அந்த அணையா அடுப்பில் தயாராகும் உணவுதான் நாள்தோறும் ஏழை மக்களின் பசி (தீ)யை அணைத்து வருகிறது. — குத்தாலம் வி. சம்பந்தன்




கள்ளநட்பு விஷயமாக இரவில் வெளியே போய் விட்டு வரும்போது கிணற்றில் தள்ளப்பட்டுக் கொல்லப்பட்டாராம்!'' என்றாள்.

''அவர் கட்டிய மகாலைப் புகழவில்லை; கோயிலைப் பாராட்டவில்லை. குளத்தைச் சொல்லவில்லை. அவர் பண்புகள் கண்ணுக்குத் தெரியவில்லை. பாழுங் கிணறு மட்டும்தான் தெரிந்ததோ? வேறு என்ன சொன்னான்!''

''அதை நான் சொல்ல மாட்டேன் அம்மா. வெட்கமாக இருக்கிறது.''

''சும்மா சொல்.''

''நாவு கூசுகிறது. மகாராணி மங்கம்மகாரு தம் அறுபது வயதில் யாரிடமோ ஆசை கொண்டிருந்தாளாம். அவருக்குத் தளவாய் நரசப்பன் என்று பெயராம். பொற்றாமரைக் குளத்தில் அவர்கள் இரண்டு பேரும் ஒன்றாக இருப்பது போல் ஒரு சித்திரமே வரைந்திருக்கிறார்களாம்!''

''அதில் அவர்கள் பெயர் எழுதியிருக்கிறதாம்மா? பொய்! பிறகு..''

''இல்லையம்மா! உண்மைதானாம். அவன் சொல்லைக் கேட்டுக் கொண்டுதான் நம்ம அப்பாவுக்கு ராஜாங்கத்தைக் கொடுக்க மறுத்தார்களாம். இதனால் நம்ம அப்பாவே அவங்களுக்குச் சோறு போடாமல் கொன்று விட்டார்களாம்.''

மகாராணி தன் இரு காதுகளையும் பொத்திக் கொண்டாள். ''மகா பாவிகள்; அரக்கர்கள்; இந்த நாட்டிலே உள்ள நாயக்கர், சேதுபதிகள், மராட்டியர், சைவர், வைணவர், சிவாஜி, ஔரங்கசீப் அத்தனை பேரும் கெட்டவர்களாம், இவர்கள் மட்டும் நல்லவர்களாம் — மகளே! வரலாற்றைச் சொல்லிக் கொடுத்ததற்காக அவர்களைக் கும்பிடலாம்; ஆனால் நம்பிடலாமா? அவர்கள் வந்திருக்கும் நோக்கமே வேறு; இங்கு வரும் ஒவ்வொரு வெள்ளையனும் ஊருக்கு எழுதும் கடிதத்தில் இந்தியர்களை இழிவுபடுத்தி எழுதுவான். பிறரைக் குறை கூறுவது சிலரின் பிறவிக் குணம். அவர்களை மட்டும் சொல்வானேன்? நமது ஊரிலேயே என்மீதுகூட....'' என்று கூறி விட்டு ராணி ஒரு பெருமூச்சு விட்டாள்.

''செல்வி! நெடுநாட்களுக்கு முன் நடந்திருந்தாலும் இன்னும் அதை நினைத்தால் என் நெஞ்சம் பதறுகிறது. நமது ஆஸ்தானத்தில் ஒரு மகான் சம்பிரதியாக இருந்தார்.

''தாயுமானவர் என்னும் பெயர் உடையவர். அவரது அடிச்சுவட்டில் பத்ம ரேகையைக் கண்டேன். 'அவர் ராஜலக்ஷணங்களுடன் விளங்குகிறார்' என்று உன் அப்பா அடிக்கடி சொல்லுவார். அவர் எந்த நாட்டுக்கும் அரசராக இல்லையே என்று நாங்கள் சாமுத்திரிகா லட்சணத்தையே சந்தேகப்பட்டோம். ஆனால் அவரோ, சேர, சோழ பாண்டிய நாடுகள் மூன்றுக்குமே கவியரசராக ஆகிவிட்டார் இப்போது.

''நான் அவருடைய ஞானத்தையும், பக்தி வைராக்கியத்தையும் கேள்விப்பட்டு அவரை ஒரு நாள் அரண்மனைக்கு அழைத்துவரச் செய்தேன். நம் ஊர் விஷயம்தான் உனக்குத் தெரியுமே? 'சைவத் துறவியை மகாராணி அழைப்பதா?' என்றார்கள். அவர் காலில் விழுந்து, 'எனக்குப் புத்திர பாக்கியம் அருள வேண்டும்' என்று பிரார்த்தித்தேன். அவரோ, 'இறைவன் திட்டப்படி எல்லாம் நடக்கும்' என்று சொல்லிப் போனார். நான் சும்மா இருந்தேன். ஆனால் ஊர் வாய் சும்மா இருக்கவில்லை. 'ராணி மீனாட்சி—தாயுமானவர் பற்றிப் பல கட்டுக்கதைகள் பறந்தன. இந்த அபவாதத்தைக் கேட்ட பிறகும் எனக்குப் புத்திரப் பேற்றில் உள்ள பற்று விடவில்லை.

''ஒரு நாள் காவிரியில் ஒரு ஹம்சம் விளையாடுகிறது என்றார்கள். அது சாதா

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்...உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்






காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






# காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.6.21 TAM.

# பொது பிராவிடண்ட் நிதி திட்டத்தில் சேர்ந்து

உங்கள் எதிர்காலத்திற்காகச் சேமியுங்கள்

இந்தத் திட்டம் இந்திய அரசாங்கத்தாரால் துவங்கப்பட்டுள்ளது. ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியாவின் கிளைகளிலும், அதன் துணை பாங்குகளிலும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படும்.

**சந்தா செலுத்தும் முறை**

ஆண்டு ஒன்றுக்கு ரூ. 100/-க்கு குறையாமலும், ரூ. 15,000/-க்கு மேல் போகாமலும், ரூ. 5/-ன் மடங்குகளில் எந்த நேரத்திலும் எத்தனை தவணைகளாக வேண்டுமானாலும் நீங்கள் சந்தா செலுத்தலாம். ஆனால், அது ஒரு மாதத்தில் ஒரு முறைக்கு மேல் போகக்கூடாது. சந்தாக்களுக்கு இந்த ஆண்டு 4.8 சதவிகிதம் வட்டி கிடைக்கும்.

**வரி அனுகூலங்கள்**

வருமான வரி சட்டத்தின்படி வரி செலுத்துவதற்குரிய வருமானம் என்று கணக்கிடப்படும் தொகையிலிருந்து சந்தாக்களைக் கழித்துக் கொள்ளலாம். வட்டிக்கும் வரி கிடையாது. நிதியில் மீதமிருக்கும் தொகைக்கும் செல்வ வரியிலிருந்து விலக்கு உண்டு.

**பணமெடுக்கும் முறைகளும், கடன்களும்**

15 ஆண்டுகளுக்குப் பின்னர் முழுத் தொகையையும் வாபஸ் பெற்றுக்கொள்ள அனுமதி உண்டு. சந்தாதாரருக்கு மரணம் நேரிடுமாயின் அவரால் நியமிக்கப்பட்ட நபருக்கோ அல்லது அவரது சட்டபூர்வமான வாரிசுகளுக்கோ, முழுத் தொகையும் இந்த கால வரம்பிற்குள்ளாகவே திருப்பி அளிக்கப்படும்.

**பறிமுதல் செய்வதிலிருந்து பாதுகாப்பு**

நிதியில் மீதமிருக்கும் தொகையை எந்த நீதி மன்றத்தினாலும் பறிமுதல் செய்ய முடியாது.

டாக்டர்கள், வக்கீல்கள், நடிகர்கள், வியாபாரிகள் போன்ற சொந்தத் தொழில் நடத்தும் நபர்களும், பென்ஷன் வாங்குபவர்களும், கணிசமான வரி விலக்குகளுடன் சுயேச்சையாக சேமித்து வைக்க இப்போது வசதி ஏற்பட்டுள்ளது.

முழு விவரங்களுக்கு ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியாவின் கிளைகளிலும், அதன் துணை பாங்குகளிலும் விசாரியுங்கள்.

**பொது பிராவிடண்ட் நிதி திட்டம்**

**பொதுமக்களுக்கு ஒரு பேருதவி**

நிதி மந்திராலயம், இந்திய அரசாங்கம்

davp 68/185

ரண ஹம்சம் அல்ல. பரமஹம்ஸம். காவிரியின் நீர் மேல் பத்மாசனத்தில் அமர்ந்து நீரின் போக்கை எதிர்த்து தெனூர் பக்கம் போய்க்கொண்டிருந்தது.

"என்னைப் பார்த்தவுடன் தன் ஆள் காட்டி விரலால் காவிரி நீரின் மேல் "ராணி மீனாட்சி" என்று எழுதினார். என் பெயரை என் கண் முன் தண்ணீர் அடித்துக் கொண்டு சென்றதைக் கண்டு நான் அதிர்ச்சி யடைந்தேன். அடுத் தாற்போல் "பிள்ளை" என்று எழுதி னார். அதையும் தண்ணீர் கொண்டு போனதைப் பார்த்தேன். இதன்மூலம் ஏதோ ஒரு தத்துவத்தைக் கூறுகிறார் என்பதை உணர்ந்தேன்.

"நீரில் எழுத்துப் போல் நிலையற்ற வாழ்வில் புத்திர மித்திர பாசம் ஏன்? என்னும் பொருள்படப் பாடினார் அவர்.

"இரு விழிகளிலும் நீர் அருக ஓட அவரை வணங்கினேன். அதன் பிறகு தான் என் ஆசை தீர என் கண்மணி போல் இரு பெண்மணிகளை என் குழந்தைகளாக...." மகாராணி திடுக்கிட்டு நாக்கைக் கடித்துக் கொண்டாள். "என்ன சொன்னேன்? என் கண்மணி யாகிய உன்னை என் புதல்வியாகவே வளர்த்து வருகின்றேன். உன் அழகில் நானே பூரித்துப் போய் உளறுகிறேன். அம்மா, உலகம் பொல்லாதது. உன்னை யும் அவதூறு சொல்லும். ஆதலால் நாளை முதல் நீ பிறர் கண்ணில் படாத படி கோஷாவாகச் செல்ல வேண்டும்" என்று கூறினார் தாயார். மகள் பிர மித்தாள்.

"**உ**ங்களுக்கு என்னய்யா, 'கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு' என்று அறுந்த கைக்குச் சுண்ணாம்பு கூடக் கொடுக்காத சில பேர்வழிகள் கூறுவார்கள். காரணம் வேறொன்று மல்ல. அவர்கள் வெற்றிலை போடுவ தில்லை. ஆனால் அந்தக் கற்றவர்களும் சிறப்புக் கிடைப்பதற்காகப் போகாத இடந்தனிலே போக வேண்டாம் என் பதையும் மறந்து தேங்காய்மூடிக் கச்சேரிக்காகத் திருவனந்தபுரம் போவார்கள். மல்லிகை மாலைக்காகக் கல்கத்தாவைக் கடப்பார்கள். புகழ் என்னும் போதை அத்தகையது. ரங்க மன்னருக்குத் தஞ்சை அரசில் 'ஆஸ்தான ஓவியர்' என்ற பட்டமும், அதற்காக ஆண்டுதோறும் அறுபது கலநெல்லும் ஒரு ஜோடி வேட்டியும் சன்மானமாக அளித்து வந்தார்கள். பல்லக்கு வைத்துக் கொள்ளும் உரிமை யும் அளித்திருந்தார்கள். அப்படி இருந் தும் அவர் மனம் திருச்சி ராணியாரிட

## வாத்துக்கு அடித்த லாடம்!



பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற் பகுதி வரையில், ரஷ்யாவில் விவ சாயிகள் குதிரைகளுக்கு லாடம் கட்டு வது போல், வாத்துகளுக்கும் அற்புத மான ஒரு வழியில் லாடம் கட்டி வந் தார்களாம்.

வாத்துக்களைக் கிராமங்களிலிருந்து, நகரச் சந்தைகளுக்கு ஓட்டிச் செல்லும் போது, அவைகளின் பாதங்கள் தேய்ந்து ரத்தம் கசியுமாம். இதனால் பல வாத்துக்கள் இறக்க நேர்ந்தன. அதைத் தடுக்கப் புத்திசாலி விவ சாயிகள், தங்கள் வாத்துக்களை இளகிய தாரில் நடக்கவிட்டு, பின்பு மணலில் நடக்க விட்டனர். தாரும் மணலும் கலந்து வாத்துக்களின் பாதங்களில் லாடம் கட்டியது போல் பாதுகாப் பளித்து உதவினவாம்.

ஆதாரம்: 'ஸ்புட்னிக்' தகவல்: ஆர்ஜேபி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மும் பரிசு வாங்கிப் புகழ் பெற வேண்டு மென்று ஆசைப்பட்டது. மைசூரிலே ஓர் ஓவியர் கண்ணன் யசோதையின் மார் மீது அமர்ந்து பால் ஊட்டுவது போலும், யசோதை தன்னை மறந்து அரைக் கண் மூடி முகமலர்ந்து கண்ணனைப் பார்ப்பது போலும் ஒரு படத்தை வரைந்தார்; அதற்கு நாயக அரசு தங்கத் தோடா அளித்தது என்பதைக் கேட்ட நாள் முதல் அங்கு பரிசுபெறத் தக்க ஓவியம் ஒன்று தயாரிக்கப் பாடு பட்டார். அதன் விளைவே அவரது அமரப்படைப்பாகிய சாவித்திரி. ஓவியம் முடிந்தவுடன் அவர் மனைவி ருக்மாயி அதைப் பூசை அறையில் வைக்கவேண்டு மென்று கேட்டுக் கொண்டாள். "சின்ன மேனக்காரியை வைத்து எழுதிய படமாயிற்றே?" என்று கேலி யாகச் சிரித்தார் அவர்.

"அதனால் என்ன? அவள் முகத்தில் தெய்வம் இருக்கிறது!" என்று அன் போடு கூறினாள் ருக்மாயி.

சாவித்திரி படத்தை எடுத்துக் கொண்டு திருச்சிக்கு எப்போது செல்ல லாம் என்பதிலேயே அவர் கவனம் இருந்தது. (தொடரும்)

# புலி ராஜா



ஸி. ராஜப்பா

புலி வேட்டை ஆடியே புகழ் பெற்றவர் ஜிம் கார்பெட். மனித உயிர்களைத் தன் கொடும் பசிக்கு இரையாக்கி வந்த வேங்கைகளையும், சிறுத்தைகளையும் அவர் தம் உயிரைப் பொருட்படுத்தாமல் வேட்டையாடிப் புகழ் பெற்ற கதையைக் கேட்டால் உடல் புல்லரிக்கும்.

வேட்டையாடுவதைப் பொழுது போக்காகக் கொண்ட ஜிம் கார்பெட், அதை அருங் கலையாக வளர்த்து விட்டார். தம் வேட்டை அனுபவங்களை எழுத்துருவில் வடித்து, தம் வனாந்திர வாழ்க்கையை நம் நினைவிலும் பதிய வைக்கிறார், தமது ஒப்பற்ற இலக்கிய சிருஷ்டிகளான பல நூல்களின் வாயிலாக. இவற்றில் குமாவும் புலிகள் மிகப் பிரசித்தி.

ஜிம் கார்பெட் இமயமலைச் சாரலில் நைனிடாலில் 1875ல் பிறந்தார். மலைப் பிராந்தியத்தில் அலைந்து திரிவதிலேயே அவர் இளமை கழிந்தது. வாலிபப் பருவத்தில் அவர் இந்திய ரயில்வேயில் பல வேலைகளில் ஈடுபட்டார். போர்முனையிலும் துப்பாக்கி ஏந்திய அவர், முதல் உலகப் போரில் பிரான்சில் இந்திய ராணுவத்தில் ஒருவராக இருந்து போரிட்டவர். இரண்டாவது உலகப் போரில் காட்டில் போர் புரியும் விதங்களில் வீரர்களுக்குப் பயிற்சி அளித்தார் ஜிம் கார்பெட். பாரத நாட்டில் பிறந்த கார்பெட், ஆப்பிரிக்காவில் தம் முதுமையைக் கழித்தார். கென்யாவில் வாழ்ந்து வந்தார். 1955ஆம் ஆண்டில் அவர் அங்கு காலமானார்.

வனாந்திர வாழ்வில் அவருக்கு ஏற்பட்ட விநோத அனுபவங்கள்தான் எத்தனை!

பறவைகளும் விலங்குகளும் பயம் மிகுதியினாலும், விரக தாபத்தாலும் குரல் எழுப்பும் போது அவற்றை அடையாளம் காண்பதில் அவர் வல்லவர். ஜிம்கார்பெட் தாமே பறவைகளைப் போலவும் மிருகங்களைப் போலவும் குரல் எழுப்பி, நம்மை ஏமாற வைப்பார்.

ஒரு முறை ஜிம்கார்பெட் ஒரு சிறுத்தையைப் பக்கத்தில் அழைப்பதற்காகச் சிறுத்தை போல் குரல் எழுப்பிக் கொண்டு காட்டுக்குள் ஒளிந்திருந்தார். அதே சமயம் சற்றுத் தொலைவில், புதர் மறைவில் ஒரு துப்பாக்கியின் குழல் தம்மை நோக்கி அசைவதைச் சட்

டென்று புரிந்து கொண்டு உடனே மனிதக் குரலில் பேசித் தம்முடைய உயிரைக் காத்துக் கொண்டார்.

விலங்கின் அடிச்சுவட்டினை வைத்து அது எந்த மிருகத்தின் காலடி, அதன் வயது என்ன, அது ஆணா பெண்ணா, எந்தத் திசையில் அது சென்றுள்ளது ஆகிய உண்மைகளை வெகுவாக அறிந்து கொள்ளும் அதிசயத்திறன் பெற்றிருந்தார் கார்பெட்.

ஜிம்கார்பெட் கவி உள்ளம் கொண்டவர். ஓர் அழகிய பள்ளத்தாக்கை அவர் விவரிக்கும் விதத்தைப் பார்ப்போம்.

''நீர்ப் பரப்பின் மீது மீன்கொத்திக் குருவி வந்து பாய்ந்து நீரைப் பிளக்கும் போது, அந்தக் குருவியிடமிருந்து சிதறும் பற்பல வர்ண ஒளியின் அழகுக்கு ஈடு அதுவே. ஆனந்தக் கடலில் மூழ்கிய குருவி மேலெழும்பும் போது, அதன் வண்ணச் சிறகுகளிலிருந்து சிதறும் நீர்த் துளிகள் வைரமணிகளாகத் தோன்றுகின்றன. சின்னஞ் சிறு வெள்ளி நிற மீன் ஒன்று அதன் குங்குமச் சிவப்பு மூக்கிலே கெட்டியாய்ச் சிக்கியிருக்கும் காட்சியைக் காணும்போது அந்தப் பள்ளத் தாக்கையே என் நிரந்தர வாசஸ்தலமாக்கிக் கொள்ள மனம் விழைகிறது....''

உத்தரப் பிரதேச மாநிலத்தின் வழியே ஹரித்துவார், கேதாரிநாத், பத்ரிநாத் முதலிய புண்ணியத் தலங்களை நாடிச் செல்லும் யாத்திரிகர்களை இந்த ஆட்கொல்லிகள் எவ்வளவு வகையில் கொன்று இன்று மகிழ்ந்தன! அந்தப் பயங்கர நிகழ்ச்சிகளுக்கு முடிவு கண்டவர் ஜிம்கார்பெட். அதன் மூலம் அந்தப் பகுதி மக்களின் கண்கண்ட தெய்வமாக விளங்கினார் அவர்.

நூற்றிருபது மனிதர்களைக் கொன்ற ஆட்கொல்லிப் புலியைச் சாமர்த்தியமாகச் சுட்டுவிட்டார் கார்பெட். மயங்கி விழுந்த புலியிடம் கர்வத்தோடு சென்று அதன் காலை அசைத்தார். மறுவினாடி அது மின்னல் வேகத்தில் எழுந்து ஓடிவிட்டது. ஏமாற்றம் தாங்காமல் மூன்று இரவுகள் ஊண் உறக்கமின்றி அலைந்து, தளர்ந்து போய் ஒரு மரத்தின் கிளையில் அமர்ந்தார். அதே மரத்தடியில், அவரைப் போலவே சோர்ந்து தளர்ந்து வந்த, அந்த அடிபட்ட புலி சுருண்டு விழுந்து சில நிமிடங்களில் இறந்தும் விட்டது! இதை அவர் சுவைபடத் தம் நூலில் விளக்கும் போது, கார்பெட்டிடம் மட்டுமல்ல, அந்தப் புலியிடமேகூட நமக்கு மதிப்பு கூடுகிறது !

வேங்கைப் புலிகளின் வீர வாழ்வில் மனத்தைப் பறிகொடுத்தவர் ஜிம் கார்பெட். ''வேங்கை பரந்த மனம் படைத்த கனவான். அதன் மனோ இடம் எல்லையற்றது'' என்கிறார் ஓரிடத்தில். அவற்றை 'ரத்த தாகம் மிகுந்தவை', 'பயங்கரமானவை' என்று வர்ணிப்பதை அவர் வெறுக்கிறார்.



புலிகள் ஏன் ஆட்கொல்லிகளாக மாறுகின்றன? அதற்கு ஜிம்கார்பெட் கூறும் காரணங்கள்: தங்களுக்கு இயற்கையான உணவைப்பெற முடியாதபடி காயப்படுத்தப்பட்ட புலிகளே பெரும்பாலும் ஆட்கொல்லிகள் ஆகின்றன. கவனக் குறைவாக வேட்டையாடுபவர்கள் புலிகளைப் பலமாகக் காயப்படுத்தி விட்டுவிடுவது உண்டு. அல்லது முள்ளம் பன்றிகளோடு சண்டையிட்டுத் தீராத புண்களைப் புலிகள் பெற்றுவிடுவது உண்டு. இத்தகைய புண்பட்ட புலிகள் ஆத்திரத்தால் ஆட்கொல்லிகள் ஆகிவிடுகின்றன.

இந்த உண்மையை உணர்ந்திருந்த ஜிம்கார்பெட் தம் புலி வேட்டையிலும் இரக்கம் மிகுந்து காணப்பட்டார். ஓர் ஆட்கொல்லிப் புலியை அது தூங்கும் போது அவர் சுட்டுவிட்டார். அது பரிதாபமாக அவரைப் பார்த்துக் கொண்டு உயிர் விட்டது. யுத்த தர்மத்துக்கு விரோதமாக நடந்து கொண்டு விட்டதை எண்ணி எண்ணிப் பல நாட்கள் அழுதார் கார்பெட்!

வேங்கை வேந்தன் கார்பெட் இறுதியாக வேட்டையாடிய நிகழ்ச்சி சுவையானது. அவருடன் அன்று தங்கியிருந்தவர் இளவரசி எலிஸபெத் ராணியும் அவள் கணவரும்தான்! கென்யாவில் வேட்டையாடுபவர்கள் தங்க மரங்களின் உச்சியில் சிறு வீடு கட்டப்பட்டிருக்கும். இத்தகைய ஒரு வீட்டில் 1952ம் ஆண்டு பிப்ரவரி 5ந் தேதி இளவரசியும் அவள் கணவரும் வேட்டையாடுவதற்கென்று ஜிம்கார்பெட்டுடன் தங்கியிருந்த போது 'இங்கிலாந்தின் மன்னர் ஆறும் ஜார்ஜ் இறந்து விட்டார்' என்ற செய்தி இளவரசிக்குத் தெரிவிக்கப்பட்டது. இளவரசியாக வேட்டைக்கு அந்தக்காட்டுக்கு வந்தவர் இங்கிலாந்தின் மகாராணியாகத் திரும்பினார். அன்றே ஜிம்கார்பெட்டும் தம் துப்பாக்கிக்கு நிரந்தர ஓய்வளித்து விட்டார்.



## தபாலாபீஸே வந்தது!

ஒருவர்: அடடே! நம்ம கிராமத்துக்குத் தபாலாபீஸ்கூட வந்துட்டுதா? ஆச்சரியமாயிருக்கே!

மற்றவர்: கதாசிரியர் காளமேகம் இங்கு பட்டணத்திலிருந்து குடிவந்துட்டாரே, உனக்குத் தெரியாதா?

— கு. க. ர.

## கார் பஞ்சரானால்...



நடு வழியில் கார் பஞ்சரானால் சக்கரத்தைக் கழற்றி ஸ்டெப்னியை மாட்டுவதற்காக அமெரிக்காவில் நீண்ட நேரம் பிரயாசைப்பட வேண்டியதில்லை. 'லெக்ட்ரோஜாக்' (Lectro jack) என்ற புதுரக ஜாக்கின் உதவியால் நொடிப் பொழுதில் காரை உயர்த்திச் சக்கரத்தை மாற்றிவிடலாம் அவர்கள். கார் பாட்டரியின் விசையினால் இது இயங்குகிறது: காரில் இருக்கும் சிகரெட் லைட்டரில் இதன் பிளக்கைச் செருகினால் போதும். கார் ஜன்னலின் கண்ணாடியை உயர்த்துவதற்கு எவ்வளவு மின்விசை பாட்டரியில் செலவாகுமோ அவ்வளவுதான் இந்த ஜாக்கை இயக்குவதற்கும் தேவை.

ஆதாரம்: நியூஸ் வீக் - தகவல்: எஸ். கோவிந்தன்

## காலத்தின் அருமை!



லூயி பிஷர் அமெரிக்கப் பத்திரிகையின் நிருபர். நல்ல கோடைகாலத்தில் அவர் காந்திஜியின் சேவாகிராமத்தில் வந்து தங்க நேர்ந்தது. கோடை வெய்யிலின் கடுமையிலிருந்து ஓரளவு பாதுகாத்துக் கொள்வதற்காகத் தினமும் நடுப்பகலில் குளிர்ந்த நீரில் 'தொட்டி ஸ்நானம்' எடுத்துக் கொள்ளுமாறு அவருக்கு ஆலோசனை கூறினார் காந்திஜி. காந்திஜியின் ஆலோசனையை ஏற்றுக்கொண்ட லூயி பிஷர், தம் வேலை நேரம் இதனால் குறைந்து விடுமே என்று கவலைப்பட்டார். இதை அறிந்த காந்திஜி, ''உங்களை நான் ஸ்நானம் செய்ய வேண்டும் என்று சொன்னேனே தவிர வேலை செய்யக் கூடாது என்று சொல்லவில்லையே!'' என்றார். உடனே தாம் அமிழ்ந்திருக்க வேண்டிய தொட்டியின் விளிம்பில் ஒரு பலகையை வைத்துக் கட்டினார் பிஷர். அதன் மீது தட்டெழுத்து இயந்திரத்தை வைத்துத் தாம் நீரில் இருக்கும் போதும் தொடர்ந்து வேலையைச் செய்து வந்தார். காலத்தின் பெருமையை உணர்ந்து இந்த நேரத்தினை உபயோகப்படுத்தியதன் விளைவாக நமக்குக் கிடைத்தது, 'காந்திஜியுடன் ஒரு வாரம்' என்ற தலைப்பில் அவர் எழுதிய நல்லதொரு நூல்!

ஆதாரம்: 'காந்திஜியின் நினைவுகள்' - தகவல்: லலிதா காளிதாஸ்



மானேஜர் சார்! அந்த டேபிள் ஃபானை என் நாற்காலிக்குப் பின்னாலிருந்து எடுத்துவிடுங்க சார்!

# தண்டனை கொடியது

இருள்நீக்கி கணேசன்




"இனிப்பான முட்டாயி....! சீனி முட்டாயி... சர்க்கரை முட்டாய்யி....!"

அந்தப் பஸ் ஸ்டாண்டில் அத்தனை கூக்குரல்களுக்கிடையேயும் தனித்து ஒலிப்பது அந்த மிட்டாய் விற்கும் சிறுவனுடைய குரல்தான். பஸ்கள் வந்து நிற்கையிலும், ஓடுகையிலும், அரக்கப் பரக்க ஓடுபவர்களையும், வழியனுப்ப வந்தவர்களையும் விடைபெற்றுக் கொள்ளுபவர்களையும் கவர்ந்திழுப்பது அந்த மிட்டாய் விற்கும் சிறுவனுடைய குரல்தான். கிழிந்த நிஜாரும், பித்தான் இல்லாத சட்டையும் அவனுடைய ஏழைமையைப் பறைசாற்றினாலும், அவனுடைய முகத்தின் குறுகுறுப்பும் கால்களின் சுறுசுறுப்பும் அவனுக்கு ஒரு முதல்தர வியாபாரியின் களையைக் கொடுத்திருந்தன.

ஆனால் இன்று ?

"சே ! என்னடாது எளவு? இன்னைக்குக் காலையிலிருந்தே போணியே ஆவல்லே ! நானும் அந்த ஆறு மணி அறந்தாங்கி பஸ் கிளம்பாங்காட்டியும் வந்து கரடியாக் கத்திக்கிட்டிருக்கேன்.... ஒரு முட்டாயிகூட விக்கலியே..!" என்று சிறுவன் ஆதங்கத்துடன் அங்கலாய்க்கிறான்.

பஸ் ஸ்டாண்டு முழுதும் ஒரு பெரிய சுற்றுச் சுற்றி விடுகிறான். குழந்தைகள் இருக்கும் பக்கம்தான் அவனுடைய முழுக் குறி. ஆனால் இன்று அவன் பொழுது தரித்திரமாகவல்லவோ விடிந்திருக்கிறது. அரைமணி நேரம் தொண்டைத் தண்ணீர் வற்றக் கூவிய பிறகு கடைசியில் கிளம்பப் போகும் திருவையாற்றுப் பஸ்ஸில் ஒரு பத்துக் காசுக்கு மிட்டாய் விற்கிறது.

முதல் போணியில் கிடைத்த அந்தப் பத்துப் பைசாவைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு பையில் போட்டுக் கொள்ளுகிறான். 'ஆச்சு! இன்னும் ஓர் அரைமணிக்கு ஒரு பஸ்ஸூம் வராது. ஒரு பஸ்ஸூம் கிளம்பாது.'

வெய்யில் ஏறிக் கொண்டேயிருக்கிறது.

"அப்பா! காலம்பற எட்டரை மணிக்கே என்ன வெய்யிலுடா அது!" என்று சபித்துக்கொண்டே பையன் அந்த மூலையில் உள்ள காந்தி சிலை மண்டபத்தின் பக்கமாய் நகர்ந்து, மிட்டாய்த் தட்டைப் படிக்கட்டில் இறக்கி வைத்துவிட்டுத் தானும் தூணில் சாய்ந்தவாறு உட்காருகிறான். இப்படித்தான் வியாபாரம் இல்லாத சமயத்தில் இந்தக் காந்தி மண்டபத்துக்கு வந்து காந்தி மகாத்மா சிலையையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பான். காந்தித் தாத்தாவைப்பற்றி — அவருடைய ஒழுக்கம், பொய் பேசக் கூடாது, திருடக் கூடாது என்று ஒரு கண்டிப்பு இவையெல்லாம் பற்றி அவனுடைய அம்மா அவனுக்கு எவ்வளவு கதைகள் சொல்லியிருக்கிறாள். அதனால்தான் அவன் அந்த பஸ் ஸ்டாண்டில் பீடி குடித்துக் கொண்டு, சினிமாப் பாட்டைக் கன்னாபின்னாவென்று பாடிக்கொண்டு அசிங்க அசிங்கமாகப் பேசித் திரியும் கூலிப் பையன்கள்கூடச் சேருவதில்லை. சேரக் கூடாது என்று அவன் அம்மா கண்டிப்பாகச் சொல்லி யிருக்கிறாள்.

தூணில் சாய்ந்து உட்கார்ந்து ஓரக்கண்ணால் காந்தித் தாத்தாவைப் பார்த்துக்கொண்டே நெற்றியில் வழியும்

வியர்வையைச் சட்டை நுனியால் அவன் துடைத்து விட்டுக் கொள்ளும்போதே 'கர்...கர்' என்று அவன் வயிறு குரல் கொடுக்கிறது.

''ஏ! கவிச்சல்ல போற வவுறே! என்ன அதுக்குள்ளாற குரல் கொடுக்கிறே! மணி எட்டரைக்கே பசி எடுத்துப் போச்சா, தொரப் பயமவன் வவுத்துக்கு..... கம்மாக் இட.....!'' என்று திட்டுகிறான்.

வயிறு கம்மா இருப்பதற்காகவா மனுஷனுக்கு அதையே பிரதானமாக வைத்திருக்கிறார் கடவுள்! பசி பிடித்து வயிற்றைக் கிள்ள அது மறுபடியும் குரல் கொடுக்கிறது.

'ஒரு டீத்தண்ணியோ ஒரு பக்கோடாவோ வாங்கிப்போட்டு வயிற்றை அமுக்கலாமோ?' என்று சிறுவனுக்கு ஒரு சபலம் தட்டுகிறது. ஆம்! அவன் வயிற்றுக்கு ஏதோ ஒன்றைப் போட்டுச் சுமார் பன்னிரண்டு மணி நேரம் தான் ஆகியிருந்தது என்றாலும் அவன் சரியாகச் சாப்பாடு என்று ஒன்று சாப்பிட்டு முழுசாக இரண்டு நாட்கள் ஆகிவிட்டன.

அதுவும் அவன் அம்மா காயலாவாகப் படுத்தாலும் படுத்தாள், அரை வயிற்றுக்குக் கிடைத்துக் கொண்டிருந்த கூழும் பழங்கதை ஆகிவிட்டது.

சிறுவனின் தகப்பன் இரண்டு மாதங்கள் முன்பு திடீரென்று கிளம்பி ஊரைச் சூறையாடிய விஷக் காய்ச்சலில் எப்பொழுது வாயைப் பிளந்தானோ அன்றிலிருந்தே தாயும் மகனும் 'அம்போ' என்று விடப்பட்டு விட்டனர்.

குப்புறப் படுத்துக் கொண்டு எவ்வளவு நாட்கள் பிலாக்கணம் வைத்துக் கொண்டிருக்க முடியும்?

சிறுவனின் தாய் மேட்டுக்குடி வீடுகளில் வேலை தேடி அலைந்தாள். குடிசை வாழ்வோரைப் பிடிக்க வந்த விஷ ஜுரம் எங்கே தங்கள் பொன்மேனியையும் பாழ்படுத்தி விடுமோ என அஞ்சி அவர்கள் யாரும் அவளுக்கு வேலை கொடுக்க முன்வரவில்லை.

பிறகென்ன? சிறுவனின் சோற்றில் விழ வேண்டிய மண் அவன் படிப்பில் வந்து விழுந்தது.

ஏதோ கையில் மிச்சம் இருந்த எட்டணா பத்தணாவுக்கு மிட்டாய் வாங்கிக் கலிம்பேறி மூலையில் கிடந்த ஒரு பித்தளைத் தட்டைப் புளி போட்டுத் துலக்கி அதில் அந்த மிட்டாய் களை வைத்துக் தெருத் தெருவாய் அலைய அன்றே ஆரம்பித்தான். சிறுவனின் சுறு சுறுப்பினால் ஒரு சிற்றுண்டியையாவது அவனுக்கும் அவன் தாயாருக்கும் இன்றளவு போட்டு வருகிறது.

இதன் நடுவில் சிறிது சிற்றுண்டியைக் கொண்டு மட்டும் உயிரை உடலில் தக்க வைக்க முடியாது என்ற எண்ணமோ அல்லது வளர ஆரம்பிக்கும் முன்னமேயே கருக அடிக்கிறோம் என்ற ஆதங்கமோ அந்தத் தாயாரை விடாமுயற்சியுடன் மேட்டுக்குடி வீடுகளில் கெஞ்சிக் கூத்தாட வைத்துப் பற்றுத் தேய்ப்பது, துணி துவைப்பது போன்ற சில்லுண்டி வேலைகள் கிடைக்க வகை செய்து அரை வயிற்றுக் கஞ்சிக்குப் பழுதில்லாத நிலையை ஏற்படுத்திக் கொடுத்தது.

இந்தத் துன்ப வாழ்வில் அந்தத் தாயாருக்குச் சந்தோஷம்தான். ஆமாம்! அவ்வளவு கஷ்ண நிலையிலும், அவள் தானும் கடைப்பிடித்துத் தன் மகனுக்குப் படித்துப் படித்துச் சொல்லிக் கொடுக்கும், ''திருடக் கூடாது, பொய் சொல்லக் கூடாது, பிச்சை எடுக்கக் கூடாது' என்ற மான வாழ்க்கையின் மூல மந்திரங்களுக்கு ஹானி இல்லையல்லவா?

ஆனால் ஆண்டவன் பொறுப்பானா? நன் மக்களை — அவர்கள் செல்வ மேட்டில் வாழ்ந்தாலும் சரி, ஏழைமைப் பள்ளத்தில் உழன்றாலும் சரி— சோதித்தே பழகி விட்டவனுக்குச் சும்மா இருக்க முடியுமா?

சிறுவனின் தாயார் இரண்டு நாட்களாகவே எழுந்து நான்கு இடங்களுக்குப் போய் வேலை செய்ய முடியாதபடி பூட்டுக்குப் பூட்டு விட்டுப் போகும்படியான ஒருவித உடம்பு வலியும் தொடர்ந்த காய்ச்சலாகவும் இருக்கிறது என்று சொல்லிக் கொண்டே இருந்தவள் வயிற்றுப் பெருச்சாளியை மனத்தில் கொண்டு பல்லைக் கடித்துக் கொண்டு வேலைக்குப் போய் வந்தாள். ஏழைக்கு என்ன ராஜ வைத்தியமா செய்துகொள்ள முடியும்? ஏதோ ஒரு மூலிகைக் கஷாயத்தைக் குடித்துப் பார்த்தாள். அதற்கெல்லாம் கட்டுப்படக் கூடியதாகவா அவளுக்கு உடம்புக்கு வந்திருக்கிறது?

பசி மயக்கமும் சேர்ந்துவிட அப்படி இப்படி அசைய மாட்டாமல் கண்ணையும் திறக்காமல் முனகிக் கொண்டே நேற்று இரவிலிருந்து குடிசை மூலையில் ஒரு கிழிந்த கோணியின் மேல் படுத்துக் கிடக்கிறாள்.

குருவியின் தலையில் பனங்காய் விழுந்த கதைதான். தாய் தாங்கிக் கொண்டிருந்த பாரமும் சிறுவனின் தலை மேல் விழுந்து விட்டது.

வெறுமனே விதியைத் திட்டக் கூடாது என்றாலும் அது இரக்கமற்றது என்பதை மறுக்கவா முடியும்? அந்தச் சிறுவனின் வியாபாரத்தையும் அல்லவா இன்று படுக்க வைத்து விட்டது! இல்லாவிட்டால் இந்த நேரத்துக்குத் தினமும் ஒரு மிட்டாய் பாக்கெட் தீர்ந்து போய் இரண்டாவதைப் பிரித்திருப்பான்.

பாவம், சிறுவன்! தாயின் நினைவில் அவன் கண்கள் ததும்ப அப்படியே துவண்டு விடுகிறான். ஆனால் அவனுக்கு இந்த உலகத்தில் ஒரே ஆதரவாக இருக்கும் தாயாரை இழந்து விட அவன் தயாரில்லை. கண்ணீருக்கிடையேயும் அந்த உறுதி அவன் முகத்தில் பளிச்சிடுகிறது.

ஒரு விளக்குக் கம்பத்தில் கட்டித் தொங்க விடப்பட்டிருக்கும் உடம்பு வலி நிவாரணத்துக்கான ஏதோ ஒரு மாத்திரையின் விளம்பரம் அவன் கண்ணில் படுகிறது. அம்மா படுத்திருக்கும் நிலையில் அவளை எந்த ஆஸ்பத்திரிக்கும் அழைத்துச் செல்லச் சௌகரியப்படாது. வைத்தியரை வரவழைக்கவும் வசதியில்லை. அந்த மாத்திரையையே வாங்கிக் கொடுக்க அவன் முடிவு செய்கிறான். அதன் விலை இருபத்தைந்து காசு. அவன் மனம் கணக்குப் போடுகிறது. மாத்திரை இருபத்தைந்து காசு. தாயின் பசித்த வயிற்றுக்குக் குறைந்தபட்சம் ஒரு

பஸ், ஒரு டீ. இரண்டும் இருபது காசு. கையில் இருப்பது பத்து காசு. இன்னும் ஒரு நாற்பது நாற்பத்தைந்து காசு கிடைத்து விட்டால் போதும். ''கிடைச்சுட்டா..... அம்மாவுக்கு மட்டுமென்ன? எனக்குக்கூட டீ கெடச்சிடும்.....'' என்று நினைக்கும் போதே உற்சாகம் அடைகிறான்.

எப்படியாவது கஷ்டப்பட்டு அந்தக் காசைச் சம்பாதித்துவிட வேண்டும்.... தாயைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஒரு வேகம் உந்தித் தள்ளத் தன் பசியை மறந்தவனாக 'சர்....' என்று வந்து நிற்கும் பஸ்ஸை நோக்கி ஓடுகிறான். ஆனால் என்ன சோதனை? அந்த பஸ்ஸிலிருந்து கண்டக்டரையும், டிரைவரையும் தவிர, இன்னும் ஒரே ஒரு 'சூட்' போட்ட ஆசாமிதான் இறங்குகிறார். அவரிடமா மிட்டாய் வேண்டுமா என்று கேட்பது?

சட்டென்று ஞாபகம் வந்தது போல் பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்தில் இருக்கும் மணிக் கூண்டைப் பார்க்கிறான். மணி ஒன்பதரை. நாகூருக்குப் போகும் ரயில் வரும் நேரமல்லவா அது? ரயில்வே ஸ்டேஷன் என்ன? ஒரு பர்லாங் தூரத்தில்தானே இருக்கிறது? ஒரே ஓட்டம்தான். ''ரயிலு டேசனுக்குப் போனுக்க.... அதுவும் இந்த வண்டி வர நேரமாப் போனு நல்லா வியாபாரம் நடக்குமில்லே...'' — என்று மனத்தில் ஓர் எண்ணம் நீந்த மிட்டாய்த் தட்டைத் தூக்கிக் கொண்டு ஓடுகிறான்.

சிறுவன் ஸ்டேஷனை அடைவதற்கும், வண்டி வருவதற்கும் சரியாக இருக்கிறது. வண்டியில் நல்ல கூட்டம். வண்டி ஓர் இருபது நிமிடம் நிற்கும். அந்தக் கோடிக்கும் இந்தக் கோடிக்கும் கூவிக் கொண்டே ஓடுகிறான். இதன் நடுவே சக வியாபாரிகளுடன் சண்டை. அவர்கள்தான் வம்புக்கு வந்தது. அவர்கள் லைசென்ஸோ மண்ணாங்கட்டியோ வாங்கியவர்களாம். அதனால் ஸ்டேஷனே அவர்களுக்குத்தான் சொந்தம் போல் வாதிட... வண்டி கிளம்ப மணி அடித்துவிடுகிறது.

சிறுவனுக்கு அசடு தட்டுகிறது. ஒரு மிட்டாய்கூட விற்கவில்லை. அவன் மனத்தில் பயம் உதைத்துக் கொள்ளுகிறது. ஐயோ ! இது என்ன இன்று சனியன் பிடித்த மாதிரி. தேவையான காசு கிடைக்காதா? தாயாரைக் காப்பாற்ற முடியாதா? அப்பொழுதே ஓடிப் போய்த் தாயாரைக் காண 'ஆவல்' தூண்டுகிறது. ஆனால் மருந்தில்லாமல் ஒன்றுமில்லாமல் அங்கே போய் என்ன செய்வது? இல்லை. காசுடன்தான் வீடு திரும்புவது என்ற திடசங்கல்பம் அவன் மனத்தில் எழுகிறது.

நகர்ந்து கொண்டிருக்கும் வண்டியில் ஏதோ ஒரு குதியில் அவன் கண்கள் சட்டென்று பார்த்து நிலைக்க வண்டியில் தொற்றிக் கொள்ளுகிறான். கூட்டம் காரணமாக உள்ளே நுழைய முடியாமல் கதவின் அருகே நிற்க வேண்டியதாகி விடுகிறது.

அவனைக் கவர்ந்து ரயிலில் தொற்றிக் கொள்ளச் செய்த அது இதோ அவனுக்கு ஐந்தங்குலம் அருகில் இருந்து கொண்டு அவன் மனத்தில் ஆசைக் கனலைத் தூண்டுகிறது. சே ! என்ன மினுமினுப்பு! எத்தனை பெரியது ? பெருச்சாளி மாதிரி அல்லவோ பருத்துக் கிடக்கிறது !

## வேலை செய்யாத இயந்திரம் !

ஒரு கம்பெனியில் ஏராளமாக 'கம்ப்யூட்டிங்' யந்திரங்களைக் கொண்டுவந்து விட்டார்கள். அதைப் பார்த்த ஒரு கிளார்க் மானேஜரிடம் போய், ''இப்படி எல்லாவற்றுக்கும் மெஷின்கள் வருவதைப் பார்த்தால் எனக்கு வேலை போய்விடுமோ என்று கவலையாக இருக்கிறது'' என்று கூறினான். அப்போது மானேஜர் அவனுக்குப் பின்வருமாறு ஆறுதல் கூறினார்:

''கவலைப்படாதே. எந்த வேலையும் செய்யாமலிருக்கக் கூடிய ஒரு யந்திரத்தை இன்னும் யாரும் கண்டு பிடிக்கவில்லை.''

- சரோஜா இராமச்சந்திரன்

---

''அது மட்டும் எனக்குக் கிடைச்சிட்டா...'' சிறுவனுக்கு நினைத்துப் பார்க்கவே மனம் விம்மி வெடிக்கிறது.

அப்படித்தான் அது என்ன ? மணிபர்ஸ். கூட்டத்தில் நெரிபட்டுக் கொண்டு ''உஸ்... உஸ்....'' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு அதோ நிற்கிறாரே ஒரு சில்க் ஜிப்பாக்காரர் — அவருடைய 'சைட்' பாக்கெட்டில் கறுப்பாக ஒரு மணிபர்ஸ். அது தன் பாதி உடலை ஜிப்பாப் பாக்கெட்டின் உள்ளிருந்தும் மறு பாதியைப் பாக்கெட்டுக்கு வெளியிலும் காட்டிக் கொண்டு சிறுவனை அலைக்கழிக்கிறது.

அப்படிச் செய்யலாமா என்று அவன் மனத்தில் ஒரு கழிப்பு. அதன் அர்த்தம் அவனுக்கே புரியவில்லை. மனம் செய்வோமா என்கிறதா அல்லது செய்யலாமா என்று அவனைக் கண்டிக்கிறதா என்றே அவனுக்குப் புரியாத ஒரு கழிப்பு அது.

அதே சமயம் காய்ச்சலில் அடிபட்டுப் பசியால் களைத்து வறண்ட அவனது தாயாரின் உருவம் அவன் கண்களில் சதிராடுகிறது. தாய்க்கு மருந்து வாங்க வேண்டும். அவள் உடம்பு தேற வேண்டும் என்ற ஓர் அசுர ஆவல் அவனை உந்துகிறது.

சட்டென்று ஒரு முடிவுக்கு வந்துவிடுகிறான் பையன். முழங்காலால் கதவுக்கு முட்டுக் கொடுத்துக் கொண்டு மிட்டாய்த் தட்டை அதன் மேல் இருத்தி ஒரு கையால் அணைத்து இன்னொரு கையால்.... சர்க்கஸ் தான். செப்பிடு வித்தைதான். சில்க் ஜிப்பாக்காரரின் பையில் இருந்த மணிபர்ஸ் பையனின் கைக்குள் அடக்கமாகிறது.

யாரேனும் பார்த்து விட்டார்களோ என நெஞ்சம் படபடக்க உடல் வியர்வையில் தெப்பமாக நனைந்து விடுகிறது. கோடையில் மார்கழி எங்கே வந்தது ? அவன் கைகால்கள் இப்படி வெட வெடக்கின்றனவே! சூறவளியை அடங்கச் செய்து மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பர்ஸைக் கால் சட்டைப் பையில் பத்திரப்படுத்திக் கொள்கிறான்.

மாரியம்மன் கோயில் ஸ்டேஷன் வந்து விடுகிறது. டிக்கெட்டா வாங்கியிருக்கிறான்? இறங்கி நேர்வழியே போக? வேகமாக இறங்கிப் பரபரத்து ஸ்டேஷனின் கோடியை

நோக்கி ஓடுகிறான். சே! இந்த இரும்புச் சட்டம் போட்ட வேலிக்கு ஒரு முடிவே கிடையாதா? ஆ! அதோ அங்கே ஓர் ஆள் நுழையும் அளவுக்கு ஒரு சட்டம் பெயர்த்து எடுக்கப்பட்டிருக்கிறதே....! அதன் வழியே புகுந்து தலைதெறிக்க ஓடுகிறான்.

அவன் ஓடும் வேகத்தில் அவனுடைய தட்டிலிருந்த சில மிட்டாய்கள் தெறித்துச் சிதறுகின்றன. ஆனால் அதையா அவன் பொருட்படுத்தப் போகிறான்? அவன்தான் சரியான ஒரு வேட்டையாடியிருக்கிறானே!

பஸ் ஸ்டாண்டை அடைந்து அங்கே கக்கூஸில் உள்ள ஓர் அறையில் நுழைந்து தாளிட்டுக் கொண்டு மிட்டாய்த் தட்டைக் கீழே வைக்கிறான். ஐயையோ! அங்கே அசிங்கமாக இல்லே? இருந்தால் அவனுக்கென்ன? மிட்டாய்த் தட்டைக் கையிலேயே வைத்துக் கொண்டால் மணிபர்ஸை எப்படிப் பிரித்துப் பார்க்க முடியும்?

பிரித்த மணிபர்ஸிலிருந்து சில மடித்த பேப்பர் துணுக்குகள் தானாகவே விழுகின்றன. இன்னும் அவன் எடுக்க எடுக்க பேப்பர்...பேப்பர்....பேப்பர் மயம்....மருந்துச் சீட்டு...மளிகைக்கடை ரசீதுகள், சினிமா டிக்கெட்டுகள்... ''ஐயோ, எளவே! அது தான் இவ்வளவோ பெரிசா உப்பிக்கிட்டுப் பொணம் மாதிரி கனத்திச்சா!'' — என்று நினைக்க நினைக்க ஆத்திரமை பொங்கிப் பொங்கி அவன் முகத்தில் அசடு வழிகிறது.

அப்பா! கடைசியாக எட்டாக மடித்த இன்னொரு காகிதம். விரக்தியுடன் ஆனால் ஒரு நப்பாசையுடன் அதையும் பிரிக்கிறான். மடித்துக் கசங்கிய ஓர் இரண்டு ரூபாய்த் தாள் அதனுள்ளிருந்து எட்டிப் பார்க்கிறது. சிறுவனுக்கு முகம் பிரகாசமடைகிறது. ரூபாய் நோட்டைச் சட்டைப் பைக்குள் திணித்துக் கொண்டு மணிபர்ஸுக்குள் கையை விட்டு நன்றாகத் துழாவி அதில் இனி ஒன்றும் இல்லே என்று நிச்சயப்படுத்திக் கொண்டு அந்த மணிபர்ஸையும் இறைந்து கிடந்த காகிதக் குப்பையும் அப்படியே ஒரு சாக்கடையில் தள்ளி அவற்றைக் காலாலேயே சேற்றில் நன்றாக அழுத்தி விட்டு மிட்டாய்த் தட்டை எடுத்துக் கொண்டு வெளியே வந்தவனுக்குத் தஞ்சாவூர் செல்லூரம் டவுன் பஸ் கண்ணில்படுகிறது.

ஓடி அந்தப் பஸ்ஸில் ஏறியவனுக்குப் பஸ் ஓடும் பொழுது பயத்தால் மனம் கனக்க, பணத்தால் மடி கனக்க ஒரு நிலைகொள்ளாத தவிப்பு ஏற்பட்டு 'இந்தப் பஸ் ஏன் ஓடுகிறது? பறந்தால் என்ன?' என்று ஓர் உத்வேகம் எழுந்தது.

ஒரு வழியாக பஸ் தஞ்சாவூரை அடைய பஸ் ஸ்டாண்டில் இறங்கித் தாயைக் காண வீட்டுக்குப் பறந்தோட ஆயத்தமானவனுக்குக் கால்கள் பின்னுகின்றன. காரணம்? தாயாரின் நினைவுடன் மனத்தில் ஒரு சந்தேகக் குழப்பம்.

தட்டு நிறைய மிட்டாயுடனும் ஜேபி நிறையத் துட்டுடனும் வீட்டுக்குச் சென்றால்?

''எலே, தம்பி! என்னடாது, மிட்டாயி, ஒண்ணுகூட விக்கலேயாடா? பின்னே ஏதுடா இம்பிட்டுக் காசு கொண்டாந்திருக்கே.... எலே! ஏதாவது தப்புத் தண்டா செஞ்சுப்புட்டியாடா கட்டையிலே போறவனே!'' என்று அவன் அம்மா பிடித்துக் கொண்டு, ''அந்த நாத்தக் காசுக்கு எனக்கு வைத்தியம் செய்ய வேண்டாம்டா, பாவி!'' என்று மறுத்துவிடுவாளோ எனச் கிலி ஏற்படுகிறது அவனுக்கு.

இல்லே! அவளுக்கு எப்படியாவது மருந்து வாங்கிக் கொடுத்து அவளைக் காப்பாற்ற வேண்டும். அது ஒன்றுதான் அவனுக்குக் குறி. சட்டென்று ஓர் எண்ணம் பளிச்சிடத் தட்டில் உள்ள மிட்டாய்களை வழியில் எதிர்ப்படும் புது ஆற்றில் வீசுகிறான். மனத்திலே ஒரு நிம்மதி. ஒரு கடையில் அந்த உடம்பு வலி நிவாரண மாத்திரையும் ஒரு மஸ்டாஸில் பன்னும் வாங்கிக் கொள்ளுகிறான். காப்பி? ''வூட்டுக்குப் போயி அம்மாவுக்கு மருந்து கொடுத்துட்டுப் பொறவு கிளாஸு டம்ளரை எடுத்துகிட்டுப் போய் நாயரு கடையில் ம வாங்கியாந்துக்கலாம்'' என்று நினைத்துக் கொண்டவனாக மானம்புச்சாவடியில் உள்ள தன் வீட்டை நோக்கி ஓடுகிறான்.

வீட்டை நெருங்க நெருங்க, அதென்ன அவன் வீட்டருகே அவ்வளவு கூட்டம்? அழுகைக் குரலும் அலை அலையாக வரவில்லே? அவனைக் கண்டுவிட்ட பக்கத்து வீட்டுக் கிழவி ஓட்டமாக ஓடி வந்து அவனை அப்படியே வாரி அணைத்துக் கொண்டு, ''ராசகோவாலு! ஒங்கம்மா என்னெ மோசம் பண்ணிட்டுப் போயிட்டாடா ... பாவீ...'' — என்று பிலாக்கணம் வைத்துக் கதற, சிறுவன் பொறி கலங்கிப் போனான்.

அம்மாவின் வார்த்தைகளை அலட்சியம் செய்து அத்திருட்டுக் காரியத்தைச் செய்து விட்டானே, அதுதான் அவளுக்கு மானசீகமாகத் தெரிந்துபோய் மாய்ந்து விட்டாளோ? அவள் என்ன கவரிமான் ஜாதியா? இல்லே, அவள் காலம்தான் இயற்கையாகவே இன்று முடிந்து விட்டதா?

இப்படி ஒரு செய்தியைக் கேட்கவா அவன் ஒரு திருட்டு... அதை மறைப்பதற்காக ஒரு பொய் என்று அடுக்கடுக்காகத் தவறுகளைச் செய்தான்?

'தாயையும் காப்பாற்ற முடியவில்லே.... தாயின் சொல்லையும் காப்பாற்ற முடியவில்லே என்ற எண்ணங்கள் இரு கைகளாக மாறி அவன் பிஞ்சு இதயத்தைப் பிசைய... ஓ! அச்சிறுவன் படும் பாடு... வேதனை... விவரனைக்கு உட்பட்டதா என்ன?

சடக்கென்று கிழவியிடமிருந்து விடுவித்துக் கொண்டு, ''அம்மா...'' என்று அலறிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தவன் நிலைப்படி தடுக்கிக் குப்புற விழ, அவன் கையிலிருந்த மிட்டாய்த் தட்டு எகிறித் தூர விழ, அவன் பையிலிருந்த சில்லறைக் காசுகள் சில்சில் என்று கலகலத்து விழ அந்த மாத்திரையும் டக்கென்று மிட்டாய்த் தட்டில் விழுந்து தெறித்து அங்கே மூலையில் நெடுஞ்சாண் கிடையாகக் கிடக்கும் அவன் தாயின் முகத்தில் அடைக்கலமாகிறது.

கீழே விழுந்த சிறுவன் நெற்றிப் பொட்டில் ரத்தம் வழியத் தவழ்ந்தே வந்து அம்மாவின் மேல் விழுந்து குமுறிக் குமுறி அழுகிறான். பாவம்! அந்தச் சிறுவனுக்கு இந்தத் தண்டனை கொடியதுதான்!



சென்னை, மாயூரம் டிம்பர் டிரேடிங் கம்பெனியின் மானேஜிங் பார்ட்னர் மாயூரம் ஸ்ரீ S. N. ஜெயராம அய்யர் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி J. ராஜகோபாலன் B. Com.க்கும், ஜாம்ஷெட்பூர், டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி அட்மினிஸ்ட்ரேடிவ் ஆபீஸர் ஸ்ரீ B. R. T. ராஜன் அவர்கள் குமாரத்தி சௌ. வசந்தாவுக்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!




# கவிஞர் பிறந்தார்!

"தபால்!"

குரல் கேட்டதுதான் தாமதம்; ஆவலோடு தபால் வாங்கிவர ஓடினான் பையன்.

எழுதப் படிக்கக் கற்று ஸ்லேட் கட்டையைக் கையில் பிடித்த நாளாக, அவனுக்குத் தபால் வரும் நேரம் என்றால் ஒரு பரபரப்புத்தான். காரணம், 'அவன் எழுத்தைத் தாங்கி ஏதாவது பத்திரிகை வராதா?' என்பதுதான். அவன் தன் மனத்தில் தோன்றும் உணர்ச்சிக்கு ஒரு வரி வடிவம் கொடுத்து அனுப்பாத பத்திரிகைகள் கிடையாது. ஆனால் 'முயற்சி திருவினையாக்கும்' என்ற பழமொழியின்மீதுள்ள நம்பிக்கை தளர்ந்ததே ஒழிய, அவன் ஆசை கைகூடவில்லை.

அன்றும் அப்படித்தான். வாசலில் அவநம்பிக்கைதான் தபால் உருவத்தில் காத்திருந்தது. அவன் வெகு சிரமப்பட்டு எழுதியனுப்பியிருந்த கதை – கட்டுரைகள் திரும்பி வந்திருந்தன, கவரில் அடித்த பந்தாக.

அதைக் கண்டதும் அவனுக்கு ஏற்பட்ட ஆத்திரத்தைச் சொல்லி முடியாது.

'என் எழுத்தில் என்ன தவறு இருக்கிறது? என்னைக் காட்டிலும் யார் நன்றாக எழுதி விட்டார்கள்? மட்டமெல்லாம் பிரசுரமாகும்பொழுது என்னுடைய எழுத்துக்கள் மட்டும் என்ன பாவம் பண்ணின, பிரசுரமாகாமல் திரும்பி வர?' என்று ஆத்திரப்பட்டவன், ஆத்திரம் மீறிய செயலிலும் இறங்கினான். ஆம், தான் எழுதியவற்றையெல்லாம் எடுத்துச் சுக்குநூறாகக் கிழித்தான். அது மட்டுமில்லை; இனி எழுதுவதில்லை என்றும் தீர்மானித்தான். அப்படியும் அவன் ஆத்திரம் அடங்கவில்லை. தான் எழுத உபயோகித்து வந்த ஹோல்டரையும் அதாவது பேனாக்கட்டையையும் எடுத்து முறித்துப் போட்டான். பெரும் பாழுங்கல்லாக எடுத்துத் தன் ஆத்திரம் தீர அதை நசுக்கியும் மகிழ்ந்தான்!

அதே சமயம் வாசலில் ஒரு குரல் ஒலித்தது:

"ஹோல்டர் வாங்கலையா, ஹோல்டர்! அழகான ஹோல்டர், அற்புதமான ஹோல்டர்! முத்து முத்தாக எழுதும்; அச்சு அச்சாகத் தோன்றும்! இந்த ஹோல்டரைக் கொண்டு கதை, கட்டுரை, கவிதை எது வேண்டுமானாலும் எழுதலாம். ஒரு முறை வாங்கிப் பாருங்கள்!"

தான் செய்து கொண்டிருந்த காரியத்தை அப்படியே போட்டுவிட்டு வாசலுக்கு ஓடினான் சிறுவன். ஹோல்டர் விற்பனையாளனைக் கூப்பிட்டு, "முத்து முத்தா எழுதும், அச்சு அச்சாகத் தோன்றும் என்கிறாயே! உன் பேனாவினால் எழுதினால் என் கதை கட்டுரைகள் பத்திரிகைகளில் பிரசுரமாகுமா, சொல்லு!" என்று கேட்டான்.

"அதென்ன, அப்படிக் கேட்டுட்டே! இது மாய ஹோல்டர், தம்பி! இது மாய ஹோல்டர்! எழுதுவதெல்லாம் அச்சேறும்; அச்சேறியதெல்லாம் அகிலமெங்கும் பரவும். பார்ப்பவர் படிப்பார்; படிப்பவர் புகழ்வார்! ஒன்றை வாங்கிப் பார், தம்பி!" தன் பொருளுக்குப் பெருமை ஏற்றிப் பேசினான் விற்பனையாளன்.

அவன் பேச்சை நம்பி ஒரு ஹோல்டரை வாங்கினான் அந்தப் பையன். உடனே வியாபாரியின் சொல் உண்மைதானா என்று பரிசோதித்துப் பார்த்துவிட வேண்டும் என்று தோன்றியது. வீட்டுக்குள் ஓடினான். கவிதை எழுதினான். ஹோல்டர் உருவத்தில் நம்பிக்கை அவனுக்குக் கைகொடுத்து உதவியது. எழுதியதைக் கையோடு கையாகப் பத்திரிகைக்கும் அனுப்பி வைத்தான்.

என்ன அதிசயம்! திரும்பி வரவில்லை கவிதை! சில நாட்களுக்கெல்லாம் பிரசுரமும் ஆகி விட்டது! ஆனந்தம் பிடிபடவில்லை அவனுக்கு. அந்த ஹோல்டரின்மீது அபார நம்பிக்கை பூண்டான். அதைத் தெய்வமாகவே மதித்துப் பூசிக்கலானான். அவன் நம்பிக்கை வீண் போகவில்லை. அவன் எழுதிய கட்டுரைகளையும் கவிதைகளையும் உலகம் புகழ்ந்தது. சொல்லப் போனால், அந்த ஹோல்டரினால் எழுதிய நூல் ஒன்று நோபல் பரிசைக்கூடப் பெற்றது.

அந்த ஹோல்டரை ஒட்டி அவனுக்குக் கிடைத்த நல்ல நல்ல பேனாக்களுக்கும் ஒரு கணக்குவழக்கில்லை. ஆயினும், அந்தப் பழம் பெரும் ஹோல்டரை அவன் புறக்கணித்தானில்லை. அதன் மீது அபாரப் பற்றும் நம்பிக்கையும் வைத்திருந்தான்.

ஆனால் ஒரு நாள் வீட்டு வேலைக்காரி சாயம் போய் வெறும் கட்டையாகக் காட்சி அளித்த அந்தப் பேனாவை உபயோகமற்றது என்று எண்ணிக் குப்பைத் தொட்டியில் தூக்கி எறிந்து விட்டான்.

அவளது அந்தச் செயல் அவனுக்கு அளவற்ற வருத்தத்தை அளித்தது. பேனா பறிபோன துயரத்தைக் கவியாகவே வடித்தான். அக்கவிகள் அவன் புகழுக்குப் புகழ் சேர்த்தன. அதோடு அந்த ஹோல்டருக்கும் அழியாப் பெயரை அளித்தன.

ஹோல்டரின் மீது நம்பிக்கை வைத்து, அந்த நம்பிக்கையின் பேரில் எழுத்தார்வத்தை வளர்த்து அரும்பெரும் காவியங்கள் எழுதி அபாரப் புகழ்பெற்ற அந்த மனிதர் யார், தெரியுமா? உலகப் புகழ் பெற்ற நமது இந்திய மகாகவி ரவீந்திரநாத் டாகூர் அவர்கள்தான்!

— ரா. வீ.



# கைதிக் கூண்டில் நீதிபதி

நந்தலால்

நினைவிருக்கிறதா?

சென்னை உயர்நீதி மன்றத்தில் எத்தனையோ நீதிபதிகள் பெயரும் புகழும் ஓங்கப் பணியாற்றியுள்ளனர். ஆனால் இவர்களில் ஒருவர் மட்டும் கைதிக் கூண்டில் கொலைக் குற்றவாளியாக நிற்க நேரிட்டது!

1946 பிப்ரவரி 25ந் தேதி சென்னை நகரில் பல அரசியல் கட்சிகள் ஹர்த்தால் அனுஷ்டித்ததன் விளைவாகக் கொந்தளிப்பான நிலைமை ஏற்பட்டது. கோட்டை ஸ்டேஷன் அருகில் சர் முத்துஸ்வாமி அய்யர் பாலத்தருகில் சிலர் கூடிப் போகும் கார்கள் மீது கற்களை வீசிக் கொண்டிருந்தார்கள். நீதிபதி பயர்ஸ் ஓட்டி வந்த கார் மீதும் கற்கள் வீசப்பட்டன.



கூட்டத்தினரின் செயலை வன்மையாகக் கண்டித்தார் பயர்ஸ். இது கூட்டத்தினரின் ஆத்திரத்தைக் கிளறிவிட்டது. பயர்ஸ் தம் கைத்துப்பாக்கியை எடுத்து அவர்களைப் பயமுறுத்துவதற்காக ஆகாயத்தை நோக்கிச் சுடாமல் கூட்டத்தைப் பார்த்துச் சுட்டு விட்டார். பதினேழு வயதுள்ள பையன் ஒருவன் குண்டு பாய்ந்து மாண்டான்.

நீதிபதி பயர்ஸ் மீது இ. பி. கோ. 304ன் படி குற்றம் சாட்டப்பட்டது. 28ந் தேதி பயர்ஸ் கைதுசெய்யப்பட்டுப் பிரதமமாகாண மாஜிஸ்டிரேட் ஹாஸன் முன்பு ஆஜர் செய்யப்பட்டார். விசாரணையின்போது கைதிக் கூண்டிலேயே அவருக்கு உட்கார ஆசனம் அளிக்கப்பட்டது.

பின்னால் பிரதம நீதிபதியாகவும் சென்னை கவர்னராகவும் இருந்த சந்திரா ரெட்டி அப்போது கிரௌன் பிராசிக்யூட்டராக இருந்தார். முதல் சாட்சியாக நீதிபதி சோமையா விசாரிக்கப்பட்டார். பயர்ஸ் வாக்குமூலம் பதிவான பின்பு மாஜிஸ்திரேட், அந்த நிலைமையைச் சமாளிக்க பயர்ஸ் அப்படி நடந்து அதனால் ஏற்பட்ட உயிர் நஷ்டம் கொலையாகக் கருதுவதற்கில்லை என்றும், ஆகவே பயர்ஸை விடுதலை செய்ய உத்தரவிடுவதாகவும் தம் தீர்ப்பில் கூறினார்.

பயர்ஸ் குற்றவாளியல்ல என்று தீர்ப்பளிக்கப்பட்ட பின்பும் பிரதம நீதிபதி லையனல் லீச் அவரை நீதிபதியாகச் செயல்பட அனுமதிக்கவில்லை. நீதிபதி பயர்ஸ் நீண்ட நாட்கள் ரஜாவில் சென்று பின்னர் பதவியிலிருந்து விலகினார். பதவிக் காலத்தில் ஒரு நீதிபதிமீது குற்றம் சாட்டப்பட்டு விசாரணை நடைபெற்றது மிகுந்த பரபரப்பை அக்காலத்தில் ஏற்படுத்தியது.

✿ ✿ ✿

குற்றால நீர்வீழ்ச்சியில் குளிப்பதில் ஒரு தனி சுகம் உண்டு. அதை அனுபவித்துப் பார்த்தவர்கள்தான் உணர முடியும். இந்தக் குற்றால அருவியில் குளிப்பதற்கு ஒரு காலத்தில் தடையும் இருந்திருக்கிறது. அத்தடை நிறத் திமிரை அடிப்படையாகக் கொண்டது.

வெள்ளையர்கள் அருவியில் குளிக்கும்போது இந்தியர்கள் யாரும் அந்தப் பக்கமே வரக்கூடாது. இது 1905ம் வருடவாக்கில் இருந்த ஏற்பாடு. அப்போது தென்காசி வரை ரயில் வண்டி கிடையாது. வெள்ளைக்காரர்கள் குதிரை மீதும் அவர்கள் மனைவிமார்கள் கோச்சு வண்டியிலும் குற்றாலம் வருவார்கள். அவர்கள் குளிக்கும்போது இந்தியர்கள் அந்தப் பக்கம் வராமல் தடுக்கக் காட்டிலாகா காவல்காரர்கள், போலீஸ்காரர்கள், டவாலி போட்ட பியூன்கள் காவல் இருப்பார்கள். இந்தக் கெடுபிடி இந்தியர்களிடையே மனக் கொதிப்பை ஏற்படுத்தி வந்தது.

திருநெல்வேலியில் வெள்ளையரைக் கண்டால் சுட்டுத் தள்ள வேண்டும் என்று மனக் கொதிப்பு ஏற்பட்டு, கலெக்டர் ஆஷ் கொலையுண்டதற்கு இந்த நிறத் திமிர் கெடுபிடியும் ஒரு காரணமாகும்.

இந்த மனக் கொதிப்பை அறிந்த அதிகாரிகள் காலை நேரத்தில் இரண்டு மணி நேரம் வெள்ளையர்கள் குளிக்கலாம் என்றும் அந்த நேரத்தில் இந்தியர்கள் அருவிப் பக்கம் வரக்கூடாது என்றும் உத்தரவு பிறப்பித்து அதை அங்கு ஒரு போர்டில் எழுதியும் வைத்தார்கள்.

இந்த அக்கிரமத்தைத் தடுக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் குற்றாலநாதர் ஆலயத்தின் டிரஸ்டிகள் நீர்வீழ்ச்சியின் உரிமை கோரி நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்தனர். இவ்வழக்கு திருநெல்வேலி சபார்டினேட் ஜட்ஜ் முன்பு விசாரணைக்கு வந்தது. பிரதிவாதிகள் இந்தியா மந்திரி, திருநெல்வேலி கலெக்டர். நீதிபதி தம் தீர்ப்பில் கோவில் தன் பூஜைகளை அருவிக்கருகில் செய்து கொள்ளலாம் என்றும், ஆனால் வெள்ளையர் குளிக்கும்போது அவர்களுக்கு இடைஞ்சல் செய்யக் கூடாதென்றும் குறிப்பிட்டிருந்தார்.

இத் தீர்ப்பை எதிர்த்து ஹைகோர்ட்டில் அப்பீல் செய்யப்பட்டது. 1910ல் பிரதம நீதிபதி சர் ஆர்னல்ட் ஒயிட்டும், நீதிபதி அய்லிங்கும் கொண்ட புல் பெஞ்ச் இதை விசாரித்தது. தீர்ப்பில் கூறப்பட்டதாவது:

''நீர்வீழ்ச்சி யாருக்குச் சொந்தம் என்ற பிரச்னைக்கே இடமில்லை. தாழ்த்தப்பட்டவர்கள் அருவியில் குளிக்கக் கூடாது என்று மாஜிஸ்டிரேட் உத்தரவு கூறுகிறது. பொது ஜன அமைதியைக் காக்கும்பொருட்டே குளிப்பது பற்றிய கட்டுப்பாடு உத்தரவுகள் பிறப்பிக்கப் படுகின்றன. வெள்ளையர்கள் குளிக்க இரண்டு மணி நேரம் மட்டும் ஒதுக்கப்பட்டுள்ளது. விசேஷ தினங்களில் வெள்ளையர்கள் அருவியில் இனி குளிக்காமல் இருப்பார்கள்.''

நீர்வீழ்ச்சியில் ஏககாலத்தில் சுமார் இரு நூறு பேர்கள் குளிக்கலாம். ஓர் இருபது வெள்ளையர்கள் குளிப்பதற்காக மற்ற ஹிந்துக்கள் நீர்வீழ்ச்சியில் குளிக்கக் கூடாது என்று தடுத்தது இந்தியர்களிடையே பெரும் கொதிப்பை ஏற்படுத்தியது. 1911ல் கலெக்டர் ஆஷ் கொலை செய்யப்படுவதற்கு உருவான சதியும் குற்றாலத்தில்தான் என்பது பின்னர்தான் தெரிய வந்தது.

ஆலய டிரஸ்டிகள் இத்துடன் விட்டுவிடவில்லை. 1915ல் பிரிவி கௌன்ஸிலுக்கு ஹைகோர்ட்டு தீர்ப்பை எதிர்த்து அப்பீல் செய்தனர். இந்தத் தீர்ப்பில் நியாயம் கிடைத்தது. யாரும் எப்போது வேண்டுமானாலும் நீர்வீழ்ச்சியில் குளிக்கலாம் என்ற ஏற்பாடு 1917லிருந்து ஏற்பட்டது.

ஹரிஜனங்கள் இந்த நீர்வீழ்ச்சியில் குளிக்கக்கூடாது என்ற தடை மட்டும் நீடித்தது.

1934ல் மகாத்மா காந்தி தமிழ் நாட்டு யாத்திரையின்போது குற்றாலம் வந்தார். சுமார் மூன்று மணி நேரம் இங்கு தங்கினார்; அருவியில் அவர் நீராடத் திட்டமிடப்பட்டிருந்தது. இதற்குள் அங்கு ஹரிஜனங்கள் குளிக்க உரிமை இல்லை என்பது அவருக்கு எட்டிவிட்டது. நீர் வீழ்ச்சியில் குளிக்க அவர் மறுத்துவிட்டார். ''என்றைய தினம் என் ஹரிஜனச் சகோதரர்கள் இந்த அருவியில் மற்றவர்களைப் போல் நீராட அனுமதிக்கப்படுகிறார்களோ அன்றைய தினம்தான் நான் இதில் குளிப்பேன்'' என்றார். ஹரிஜனங்கள் நீராட இருந்த தடை 1938ல் ராஜாஜி மந்திரி சபையால் நீக்கப்பட்டது.





சென்னை K. C. P. லிமிடெட், ஸேல்ஸ் எக்ஸிக்யூட்டிவ், ஸ்ரீ K. S. ராமஸ்வாமி அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி விஜயலக்ஷ்மிக்கும், தேவகோட்டை ஸ்ரீ டி. பார்த்தசாரதி அய்யங்கார் B. A. B. L. அவர்கள் குமாரர் சிரஞ்சீவி டி. பி. ஸ்ரீநிவாசன் B. A.க்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!



அஹமதாபாத் ஸ்ரீ பி.எஸ். ஸ்ரீநிவாசன் அவர்கள் குமாரனும், அரவிந்த் மில்ஸ் லிட்., பிரிண்டிங் டிபார்ட்மெண்ட் உதவியாளருமான ஸ்ரீ பி.எஸ். ராஜாமணிக்கும் சென்னை ஸ்ரீ என். எஸ். வத்ஸலன் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி பத்மினி, B. Sc., B. T.க்கும் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும், உறவினர்களும், வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

வாழ்க மணமக்கள்!



“நிஜமாகவா சொல்லறே, மதுரம்?” மீனாவை வியப்புடன் உற்றுப் பார்த்தார் ராமையா.

“ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்? எனக்கு மட்டும் ஆசை இருக்காதா?”

“ஆசையா? திடீரென்று உன் தம்பியிடமா?” நம்ப முடியாதது போல் இருந்தது அவர் குரல்.

“சரி, ஆசையோ இல்லையோ, ஓர் இரண்டு மாதம் அனுப்பலாமா கூடாதா நீங்கள்? சொல்லுங்கள்.”

“மதுரம், அசட்டுத்தனமாகப் பேசாதே. மாலா புதுப் பெண்; அவளிடம் வீட்டுப் பொறுப்பை முழுதும் விட்டால் எப்படி?”



# பாவம், மதுரம் அசடு!

ஸ்ரீப்ரியா

“புதுப் பெண்ணானால் என்ன? அவள் என்னைப் போல் அசடில்லையே! கெட்டிக்காரிதானே? இந்தக் காலத்துப் பெண்களுக்குக் கற்று தர வேண்டும்?” மதுரம் விட்டேற்றியாகப் பேசினாள்.

“எனக்கென்னவோ சரியாகப் படவில்லை! கண்ணனிடம் சொன்னாயா? என்ன சொன்னான்?”

“ஆமாம். நீங்களே சரியாகப் பதில் சொல்லவில்லையாம். அவன் என்ன சொல்லக் கிடக்கு?” வேதனையுடன் உள்ளே திரும்பினாள் மதுரம்.

“என்னம்மா, மாமா வீட்டில் என்ன விசேஷம்? ஏதாவது கடிதம் வந்ததா? அப்பா ஏதோ சொல்லுறாரே! மாமாவுக்கு என்ன திடீரென்று தங்கை மீது பாசம் பிறந்து விட்டது?” சாப்பிட உட்கார்ந்த கண்ணன் தாயாரை வினவினான்.

“ஏண்டா, அசடோ, சமர்த்தோ, ஏழையோ பணக்காரனோ. அண்ணன் தங்கை பாசம் விட்டுப் போகுமா? ஆனால் அவன் ஒன்றும் எழுதவில்லை. எனக்கேதான் அவனையும் குழந்தைகளையும் பார்க்க வேண்டும் போல் தோன்றியது. அப்படியே வடக்கேயும் எல்லா இடங்களையும் எப்போதான் நான் பார்ப்பது?” தலை குனிந்தபடியே பதில் அளித்தாள் மதுரம். எள்ளும் அட்சதையும் கலந்தது போலவே அவள் குரலில் பொய்யும் மெய்யும் கலந்து ஒலித்தன.

“எனக்கென்னவோ நீ இப்போது போவது திருப்தியாக இல்லை. முட்டாள்தனமும் கூட. அத்துடன் மாலாவின் பெற்றோர்கள் வேறு வந்தாலும் வரலாம். அப்போது நீ இல்லாவிட்டால் மாலா தனியாகத் திண்டாடுவாள்.”

“இதோ பாரு கண்ணா, நானே ஓர் அசடுதானே? திடீரென்று என் காரியங்களில் சமர்த்து வந்து விடுமா? இருக்கட்டும். எப்படியும் போக வேண்டும் என்று தோன்றிவிட்டது. மாலாவுக்கு என்ன தனி? என் மாதிரி அவள் அசடா? காலை விட்டெறிந்தால் நூறு ஆள் போட்டு அவர்களிடம் திறமையாக வேலை வாங்கும் சாமர்த்தியம் உண்டு அவளுக்கு. தவிர, வருவது அவள் அம்மா, அப்பா தானே! என்ன கவலை? நானும் என் அசட்டுத்தனமும் இல்லாமல் இங்கு ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது.”-ஓரக்கண்ணால் மருமகளைப் பார்த்தபடியே பதில் அளித்தாள் மதுரம்.

“பாட்டி சொல்வது சரிதான். அசட்டுப் பிடிவாதம்தான் உன்னுடையது.”

“போகட்டும், பாட்டி பேச்சாவது புத்திசாலித்தனமானதுன்னு ஒத்துக்கிறியே!” கண்ணீர் பொங்கும் முகத்தைத்



திருப்பிக் கொண்டாள் மதுரம். அவள் கண் எதிரே நீர்த்திரையினூடே சுவரிலிருந்த ராமர் படம் தெரிந்தது. பட்டாபிஷேகப் படம் அது. முதன் முதலில் புக்ககம் வந்த போது கொண்டு வந்தது. அவளுக்குக் கிடைத்த அசட்டுப் பட்டமும், அலட்சியமும் கிட்டாமல் அப்படம் அன்று முதல் இன்று வரையில் பூஜை அறையை அலங்கரித்தது. அத்துடன் அங்கிருந்து அவளைப் பார்க்கிறது. இரகசியமாக அவள் தன்னிடம் கூறுபவைகளைக் கேட்கிறது!

மதுரம் காமுவுக்கு மாட்டுப் பெண்ணாக வந்த அன்றே ஊர் முழுதும் ஒரு முகமாகக் கூறிவிட்டது: ''காமுவின் மாட்டுப் பெண் அடக்க ஒடுக்கமாக, சாது போல் இருக்கிறது. பாவம், அது எப்படிக் காமுவிடம் குப்பை கொட்டி நல்ல பெயர் சொல்லப் போகிறதோ! தாயில்லாப் பெண் வேறு...''

மதுரம் அந்தச் சொற்களைத் தலைப்பில் இறுக முடிந்து கொண்டாள். மாமியாரிடம் நல்ல பெயர் வாங்காவிட்டாலும், கெட்ட பெயர் வாங்காமல் இருப்பது என்று. எப்படியும் அவள் அந்த வீட்டில் மாமியாருடன் இருக்க வேண்டியவள். பிறந்தகத்தில் மட்டும் என்ன, அம்மாவா இருக்கிறாள்?

மதுரம் பெயர் வாங்கி விட்டாள். அவள் எதிர்பார்த்தது போல் பொறுமைசாலி என்றோ, காரியக் கப்பல் என்றோ அல்ல. அசடு! மாடு போல் உழைக்கும் ஜன்மம்! இவைதான் அவள் பெற்றபட்டப் பெயர்கள்!

மாமியார் அழைக்கும் செல்லப் பெயரே அசடாகி விட்டது. மதுரம் ஊமையாக, செவிடாக, ஜடமாக இருக்கப் பழகிக்கொண்டாள். தலை வாரிப் பொட்டிட்டுக் கொண்டு 'பளிச்'சென்று இருந்தால் ஒரு பேச்சு; அலங்காரமின்றி இருந்தால் ஓர் ஏச்சு! எல்லாவற்றுக்கும் மேல் அசட்டுத்தனம்! வருகிறவர், போகிறவர்களிடமெல்லாம் அசட்டின் உழைப்பையும் செயலையும் தனதாக்கிக் கொண்டு பெருமைப்படுவாள். சிவகாமு.. மதுரத்தை ஏசுவாள். மதுரம் வாயே திறப்பதில்லை. ஏன், சில சமயம் குழந்தைகள் கூட 'ஏ அசடு, ஏ மூடம்' என்று பாட்டியிடம் கேட்ட பாடத்தைக் கொண்டு அவளை அழைக்கும்போதும் அவள் வருந்தவில்லை.

ராமையர் ஒரு கர்ம யோகி. வேளா வேளைக்கு உணவு, அவர் ஆபீஸ், அம்மாவின் உடல் நலம், அவளைக் கதா காலட்சேபம், கோயில்களுக்கு அழைத்துச் செல்வது – இவைதான் அவர் கடமை. ஏதோ சில சமயம் அவர் இந்த அசட்டையும் சமர்த்தாக நினைத்த பலன் குடும்பம் பெருகியது! காமுவின் உடல் தளர்ந்ததே தவிரப் பேச்சு ஓயவில்லை. தான் சொல்வதை யெல்லாம் கேட்கும் மருமகள் என்பதில் வாஸ்தவத்தில் பரம திருப்தி காமுவுக்கு. அதிகாரத்துக்குட்பட்ட மருமகள் வந்தால் எந்த மாமியார்தான் மகிழமாட்டாள்?

திடீரென்று ஒரு நாள் காமு மாரடைக்கிறது என்று அசட்டைத் தன் கணவனுக்குப் போன் செய்யச் சொன்னாள். அசட்டின் கையால் ஒரு வாய் தண்ணீர் குடித்தாள். அவ்வளவுதான்!

''ஐயோ, அம்மா, நீங்கள் இல்லாமல் நான் எப்படிக் குடித்தனம் செய்வேன்... எனக்கு ஒன்றும் புரியவில்லையே'' என்று அழுதது. இரண்டு பெண்களைக் கொண்டு, கொடுத்து, சம்பந்தம் செய்து பேரன் பேத்தி எடுத்துவிட்ட அந்த அசடு! அந்த அளவுக்கு மாமியாருடன் ஒன்றிவிட்டது. அவர் 'அசடு' என்று அழைப்பதே ஓர் அருமையாக இருக்குமே என்றுகூட அழுததாகக் கேள்வி!

குழந்தைகள் நல்ல வேளை அம்மாவைக் கொள்ளாமல் பாட்டியைக் கொண்டோ என்னவோ துடியாக இருந்தன. கண்ணன் பெரிய அதிகாரியானான். பெரிய இடத்துப் பெண் வந்து இதோ கல்யாணமும் ஆகி விட்டது.

''இந்தக் கூத்தைப் பாரேன்! டாண் என்று மணி ஐந்தடித்ததும் பௌடரும், பூவும், கொண்டையுமாக அந்தப் பெண் மினுக்க ஆரம்பித்து விடுகிறது! மாமியார் செய்த டிபனைப் பெருமையாகக் கணவனுக்கு வாசலறையில் கொண்டு வைத்துக்கொண்டு, ஊட்டி விட்டு, கையோடு, பீச்சுக்கு, சினிமாவுக்குன்னு இழுத்துக் கொண்டு கிளம்பி விடுகிறது! இந்த அசடு தான் ஆகட்டும், கொஞ்சம் குடும்பப் பாங்காக அவளை அடக்கிப் பழக்கக் கூடாதோ!'' என்று பொருமிய சில 'அக்கறை' உள்ள அயல் வீட்டுப் பிரமுகர்கள் இப்படி மதுரத்திடமே வந்து சொல்லவும் தவறவில்லை.

ஸ்டேஷன் அமர்க்களப்பட்டது. பம்பாய் மெயில் கிளம்பப் போகிறது. கூட்டத்துக்குக் கேட்க வேண்டுமா?

எங்கேயோ வேடிக்கை பார்த்தபடி, இல்லை, அப்படிப் பார்வையை இலயிக்க விட்டபடி, ஜன்னலோரம் உட்கார்ந்திருந்தாள் மதுரம்.

''முதன் முதலாக, அதுவும் தனியாகப் போகிறாய், மதுரம். ஜாக்கிரதை. அசட்டுத் தனமாக, எதையாவது கோட்டை விடாதே'' என்று ராமையர் எச்சரித்தார்.

''ஏன்? என் அசட்டுத்தனத்தால் நான் என்னுடையது எதையும் பறிகொடுக்க மாட்டேன்.'' அழுத்தமாகப் பதில் சொன்னாள் மதுரம்.

ராமையர் புதிதாகப் பார்ப்பது போல அப்போதுதான் தம் மனைவியைப் பார்த்தார். கறுப்பென்று கூற முடியாவிட்டாலும் சற்று மட்டமான நிறம்தான். ஒருகால் கொஞ்சம் பூசியிருந்தால் அதுவே எடுப்பாக இருக்குமோ? கருத்த விழிகள், ஆனால் காலத்தினால் ஓர் ஏக்கத்தின் சாயையை நிரந்தரமாகப் பெற்று விட்டன. தலை நிறைய இருந்த கூந்தல், எந்த வித அலங்காரம், செயற்கைகளும் இன்றி இன்னும் காலத்தின் நரை தவிர அப்படியேதான் இருந்தது. சீ! இதென்ன, நாற்பது வருட வாழ்க்கைக்குப் பின் இன்றுதான் அவளைப் பார்க்கிறாரா? ஆனால் அவள் அழகும், அழகில்லாமலும் இருப்பது போல் அவள் செயல்களும் புரிந்தும் புரியாதனவாகி விட்டனவே!

''மதுரம்! அதென்ன, அப்படிப் பிடிவாதமாகக் கிளம்பி விட்டாய்? கண்ணன் கூட எத்தனை முறை சொன்னான்? ஆனால்...மாலா அத்தனை வற்புறுத்தவில்லையோ?'' ஏதோ நெருடுவதுபோல் இருந்தது அவர் குரலில்.

''சே, என் வீட்டில் நான் இருக்கப் போக யார் என்னை உபசரிக்க வேண்டும்?''

''பின் ஏன் இந்தப் பிடிவாதம்? சாதாரணமாக அம்மா உன்னை அசடு என்று சொன்னால் கூட நான் அதைப் பற்றிச் சிந்தித்ததில்லை. ஆனால்...''

''நிச்சயம் அசடுதான்னு தீர்மானமாச்சாக்கும்! அதைக் கண்டு பிடிக்க இத்தனை நாட்களா? நீங்கள் ரொம்பச் சமர்த்து!'' மதுரம் சிரித்தாள்.

''ஏது, மாட்டுப் பெண் வந்ததும் அவளிடம் நீகூடப் பேசக் கற்றுக் கொண்டு விட்டாயா?''

# யாவற்றிலும் முதன்மை




★ சுச்சிதமான நயம்
★ ஒப்பற்ற சுவை
★ முரமுரப்பான புதுமை
★ ஈடிணையற்ற போஷாக்கு யாவற்றிலும் முதன்மை–




# க்ளுகோ

பிஸ்கட்டுகள்




பார்லே க்ளுகோ இந்தியாவிலேயே உன்னத விற்பனையுள்ள பிஸ்கட்டாக விளங்குவதில் வியப்பில்லை!

''ஏன்?''

''ஏன்? அவள்தான் அவனை இப்படி ஏதாவது சீண்டிக் கொண்டே இருப்பாள்... அவனும்...''

''அதை ரசித்துக்கொண்டே இருக்கிறான்.'' மதுரம் மறுபடியும் சிரித்தாள்.

''நீ என்ன நினைக்கிறாய் அதுபற்றி? பின்னே அசடு என்கிறாயா?''

''நான் என்ன சொல்ல! அந்தக் கால முறைக்கு அடங்கின பெண் வீட்டுக்கு அழகு; இன்று இப்படி இருக்கும் பெண்தான் இனிப்பு!''

''ஓ...கோ...''

''என்ன ஓகோ?''

''என் அசட்டுக்கும் உள்ளூற ஆழம் இருக்கும் போலிருக்கு... தேவலையே...''

மதுரம் ஒரு கணம் மௌனம் சாதித்தாள். திடீரென்று அவள் முகம் வாடியது. கண்கள் கலங்கின. அதை அவள் மறைக்கு முன் அவர் பார்த்து விட்டார்.

''மதுரம், எதையோ மனத்தில் வைத்துக் கொண்டு பிடிவாதமாகக் கிளம்பி விட்டாய். நான் ஒருநாள் எங்காவது வெளியில் கூப்பிட்டால் கூட இட்டிலிக்கு அரைக்க வேண்டும், கடுகு உருட்ட வேண்டும் என்று வீட்டை விட்டு நகராத நீ இன்று குழந்தைகளைவிட்டுப் பண்டிகைக்கு முன் கிளம்புகிறாய் என்றால், அது ஏன்? மருமகள் ஏதாவது சொன்னாளா?''

''அடடா, அவள் என்ன என்னைச் சொல்லக் கிடக்கு? அப்படி அவள் சொன்னாலும் தப்பென்ன?''

''பின் என்ன அடுக்கிக் கொண்டே போகிறாய்?''

கணகணவென்று முதல் மணி அடித்தது.

''மதுரம், உன் மனத்தில் என்னதான் இருக்கிறது என்று சொல்லேன். நான் உன்னை நன்றாகப் புரிந்துகொண் டிருக்கிறேன். ஏதோ பெரிய காரணம் இருந்தாலொழிய நீ இப்படிக் குடும்பத்தையும், ஏன் என்னையும் விட்டு விட்டு....''

சட்டென்று அவள் பாய்ந்து அவர் வாயைப் பொத்தினாள். ''நான் உங்களை விட்டுச் செல்லவில்லை. அப்படிப் போனாலும் ஒரே ஒரு இடம்தான் நான் உங்களை முந்திக் கொண்டு போக விரும்புவது...'' அவள் குரல் கரகரத்தது.

''மதுரம்....!'' நாற்பது வருட தாம்பத்தியத்தில் முதன் முறையாக அவர் குரல் அவள் காதருகே அந்தரங்கமாக உருக்கமாக ஒலித்தது.

''மாமியார் அசடு என்றாள்; சொல்ல உரிமைப்பட்டவள்தானே.... பொறுத்திருந்தேன். கணவர் அசடு என்றார். வெள்ளைக்காரர்கள் எப்படி எப்படியோ தன் மனைவிகளைச் செல்லமாக அழைப்பார்களாம். அப்படி அதுவும் ஒரு செல்லப் பெயர் என்று நினைத்தேன். பெற்ற குழந்தைகள் அசடு என்றால் பின்னால் புரிந்து கொள்வார்கள் என்று விட்டு விட்டேன். அக்கம் பக்கத்தவர்கள் அசடு என்றால் அதனால் நமக்கு ஒன்றும் நஷ்டமில்லை! அட, வந்த மருமகளே அப்படிக் கூறினால்தான் என்ன? அன்று போலவே இன்றும் 'ஒரு கைதட்டினால் ஓசை வராது' என்று வாயை மூடிக் கொள்வேன். அன்று மாமியார் கீழ் அடங்கியவள் இன்று மருமகள் கீழும் மௌனமாகவே இருப்பேன். அது அவரவர் வந்த வழி. ஆனால்....

''பின் என்னதான் காரணம்...?''

கார்டு விசில் ஒலி கேட்டது.

''ஆனால் நாற்பது வருட வாழ்வில் என் ஒரே கொள்கை வீட்டுக்கு வெளியில் சத்தம் கேட்கக் கூடாது. அதாவது நம் வீட்டு விஷயம் வெளியில் போகக் கூடாது...''

கணவன் காதுவரை கூடத் தன் நெஞ்சை விட்டுக் குரல் வெளியே போகலாமா என்பது போல் மதுரம் சற்றுத் தயங்கினாள்.

''ஏன், என்னவாயிற்று? மாலா ஏதாவது...'' ராமய்யர் படபடப்புடன் வினவினார்.

''சே...சே. தப்பு அவள் பேரில் இல்லை! சாதாரணமாக இந்தக் காலப் பெண்களுக்கு யாரிடமும் பேசிப் பழகும் சுபாவம் உண்டு. எனக்கு அது அன்றும் இல்லை, இன்றும் இல்லை. ஆனால் புதிதாக வீட்டுக்கு வருபவர்களும் சரி, வெளியில் புதுப் பெண் சந்திக்கும் தோழிகளுக்கும் சரி, முதல் 'டாபிக்'காகப் பேசக் கிடைப்பது இந்த மாமியார்' தான்.' நம் குடும்பத்தில் இருக்கும், இல்லாத பிரச்னைகள், மற்ற குழந்தைகள் பற்றிய ஆராய்ச்சிகள்தாம்! அதுவும் இந்தப் பெண்களோ படுக்கை அறைப் பிரச்னை முதல், அரசியல் வரை எல்லாவற்றையும் ஒரே சீராக ஒரு சமூகப் பிரச்னையாக அலசுகிறார்கள்! அதுதான் பாஷன்! அவர்கள் படிக்கும் ஹாஸ்யத் துணுக்குகள் முதல் கதைகள், சினிமாக்கள் முடிய எல்லாம் மாமியாரைப் பிரும்மராக்ஷஸியாகவும் கணவனைக் கைகட்டி நிற்கும் சேவகனாகவும் சித்திரிக்கின்றன! கணவனைத் தவிர மற்றவர்கள் ஒட்டாத உறவாகவே மனத்தில் தோன்றும் போதும்! அந்தக் குடும்பத்தின் மீது ஒரு பெண்ணுக்குப் பாசம், பொறுப்பு என்பது எப்படி ஏற்படும்? நான் அசடுதான்! ஆனால் என் வீட்டுப் பிரச்னைகள், குடும்பமோ, பொருளாதாரமோ வெளியில் செல்வது எனக்கு விருப்பமில்லை. அதற்காக அந்தக் குழந்தையைக் குறை கூறுவதைவிட, நாம் சற்று விலகி யிருந்தால் அது அவளுடைய சகிகளின் வாய்க்கும் அவல் கிடைக்காமல் செய்வதுடன், குடும்பத்தைத் தனியாக நடத்துவதின் பொறுப்புணர்ச்சி, பிரச்னைகளைத் தீர்க்கும் பொறுமைகளையும் அவளுக்குப் போதிக்கும். அதன் பின் இந்த அசட்டு மாமியார் அவளுக்கு ஒரு பிரச்னையல்ல — தலைவேதனையாக இராது...''

''மதுரம்! நீ... நீயா அசடு!...'' ராமையர் திகைத்து நின்றார். ''எத்தனை பெரிய பிரச்னையை ஒருத்தியாக, சத்தமின்றித் தீர்க்க வழிகாட்டிவிட்டாய் நீ?'' அவர் குரலைக் காற்றோடு கலக்க விட்டு வண்டி புறப்பட்டு விட்டது.

'போய் வருகிறேன். கட்டாயம் உங்களிடம் சீக்கிரம் திரும்பி விடுவேன்' என்பது போல் கையாட்டினாள் மதுரம்!

அந்த வண்டி வெறும் மனிதர்களை மட்டுமா, இல்லை. அவர்களுடைய பல பிரச்னைகளையும் தன்னுள் அடக்கிக் கொண்டு முன்னேறிக் கொண்டிருந்தது. அதில் ஏதோ நம்பிக்கையுடன் உட்கார்ந்திருந்தாள் அசட்டு மதுரம்!



# அம்மா ஒரு மலை

டி. எஸ். கோதண்டராமன்

கல்யாணக் கலகலப்பு இன்னும் முற்றிலும் நீங்கினபாடில்லை. இறைந்து கிடக்கும் துணிமணிகளை எடுத்து வைப்பதற்கோ, ஓடிப் பிடித்து விளையாடும் குழந்தைகளைக் கண்டிப்பதற்கோ யாருக்கும் உணர்ச்சி தோன்றவில்லை.

அப்பாவுக்கும் அம்மாவுக்கும் கல்யாணம்-அறுபதாங் கல்யாணம் — ஆகி இரண்டு நாட்களே ஆகின்றன.

சந்தனப் பேலாவையும், சர்க்கரை, தாம்பூலத் தட்டுகளையும் இன்னும் பீரோவில் எடுத்து வைக்கவில்லை.

மூன்று மாப்பிள்ளைகளில் நடு மாப்பிள்ளை மட்டும் 'ஊருக்குக் கிளம்பணுமே' என்று முணு முணுக்கத் தொடங்கியிருந்தார். ராஞ்சியில் வேலை அவருக்கு.

பத்து நாட்களாய் அலைந்த அலைச்சல்கள், செய்த ஏற்பாடுகள் வீண் போகாமல், கல்யாணத்தை நிறைவேற்றிவிட்ட பெருமை பையன்களுக்கு. நான்கு திக்குகளிலும் இருந்த அவர்கள், இந்த மகத்தான நிகழ்ச்சிக்காக எவ்வளவு தவம் கிடந்திருக்கிறார்கள்! அவர்களது தவம் பயனளித்து விட்டது. இரண்டு நாட்களுக்கு முன்பு; நால்வருடைய மனைவிகளும் குழந்தைகளும் புடைசூழ, பார்வதி அம்மாளின் கழுத்தில் சுந்தரேசன் அணிவித்த மங்கல நாண்.... நெஞ்சைவிட்டு அகலாத காட்சி.

பரிகாசத்துக்கும் கேலிக்கும் எல்லை மறைந்து போயிற்று. யார் யாரைச் சீண்டலாம் என்ற நியதியும் ஒளிந்து கொண்டது. பெரிய அக்காவின் கணவரைக் கடைசித் தம்பி படுத்தி வைக்கும் பாடு!...

பொழுது விடிந்ததிலிருந்து ஒன்பது மணி வரை மகிழ்ச்சியின் உறைவிடமாய் விளங்கிய அந்த வீட்டில், பத்து மணி ஆவதற்குள்ளாக என்ன நேர்ந்துவிட்டது? கூடிக் கூடிப் பேசிச்

சிரித்த அவர்கள், ஒருவரையொருவர் பார்க்க அஞ்சுவது போல், தரையைப் பார்த்துக் கொண்டு போவானேன் ? வாய்கள் பேசும் சக்தியை இழந்து விட்டனவா ? இல்லே....

''ஏண்டா, கோபு! நீங்கள் எல்லாரும் வந்து ஒரு பிடி சாப்பிடப் போகிறீர்களோ, இல்லேயோ?....''

கோபுவுக்கு அம்மாளைப் பார்ப்பதற்கே கூச்சமாக இருந்தது. அவள் மேல் அளவிட முடியாத பரிதாபம் மேலோங்கி நின்றது. தெய்வத்திலும் புனிதமான அந்தத் தாயாருக்கு ஓர் அநீதி...

அழுகை வந்துவிடும் போலிருந்தது கோபுவுக்கு. அம்மாளை நேருக்கு நேராகச் சந்திக்க முடியவில்லே. சந்திப்பின் நெகிழ்ச்சியை, அதன் சுகத்தை, சலுகையை அவனல் தாங்க முடியாது. எறும்புப் புற்றாய் இடிந்துவிடுவான் அவன்.

''உங்களுக்கு எல்லாம் காது கேட்கிறதோ இல்லேயோ?.... துரை, உன்னேத் தாண்டா?.....''

துரை, அம்மாளின் செல்லப்பிள்ளே. கொஞ்சம் உறுதியான மனம் அவனுக்கு. கட்டிக் கொண்ட மனேவியையே ஆட்டி வைத்து விடுவான்.

''எனக்குப் பசிக்கவில்லே.''

''பசிக்காமல் என்ன? என்னேப் பார்த்துச் சொல்லு....''

''பசிக்கவில்லே என்கிறேன்.... மறுபடியும் கேட்டால்....?'' என்றவாறே துரை நகர்ந்து விட்டான்.

''நல்ல பிள்ளேகள்!'' என்று பெருமூச்சு விட்ட பார்வதி அம்மாள், 'சாரதா' என்று குரல் கொடுத்தாள். சாரதா அந்தக் குடும்பத்தின் மூத்த நாட்டுப்பெண்.

''ஏம்மா ?''

அம்மாள் அவளே உற்றுப் பார்த்தாள். கண்களில் ஒரு கலக்கம் போல் தோன்றியது.

''என்ன, உன் உடம்புக்கு?''

''ஒன்றுமில்லேயே....!''

''அப்போ..... மனசுக்கு வியாதியா...?''

சாரதாவுக்கு நெஞ்சை அடைத்துக் கொண்டது. பெற்ற தாயிலும் மிக்க பரிவு காட்டும் மாமியாரை ஏறிட்டு நோக்க இயலவில்லே அவளால் இப்போது. ''ஐயோ அம்மா! நீங்கள் மகா வெகுளியாயிருக்கிறீர்கள் !... ஒரு பச்சைக் குழந்தைகூட உங்களே ஏமாற்றி விடும். அறுபது வயசானவர்....''

''வழக்கமாய் வருகிற தலேவலியா ?.... போய்ப் படுத்துக் கொள்ளேன்....''

''....ரவியின் அப்பாவுக்குச் சாதம் போட வேணும்.''

''கலேச்சு போடுவான். நீ போ. ம..... கலேச்சு! மணியைக் கூப்பிட்டு இலேயைப் போடு....!

இவர்களுக்கெல்லாம் என்ன வந்துவிட்டது, திடீரென்று ?

''சுந்தரம், உன் குழந்தைகளெல்லாம் சாப்பிட்டாச்சோ இல்லேயோ? அப்பாவை, அழைத்துக் கொண்டு நீ சாப்பிட வா. என்ன, மூக்கு உறிஞ்சல்? ஏண்டா....அழுறே? சுந்தரம்...சுந்தரம்...ஏண்டா இப்படி?...

''இந்தாருங்கள்... உங்களேத்தானே?...

''எங்கே போய் உட்கார்ந்திருக்கிறாரோ, தெரியவில்லேயே ? குரோடன்ஸ் பைத்தியம். ஒரு வாரமாய்க் கொத்திக் கிளறி, மண்ணே உதிர்த்து, தண்ணீர் ஊற்ற முடியவில்லே. இன்றைக்குப் போய் விட்டாராக்கும்....

''சுந்தரம், சொல்லுடா. நீ அழுறதை என்னல் பார்க்க முடியல்லியே. சொல்லுடா...'' சிறு வயதில் அவனேத் தூக்கி வளர்த்த கரம், அவன் சிரசைத் தடவிக் கொடுக்கிறது.

''சொல்லு.... எங்கிட்டச் சொல்லு....''

''ஒ... ஒன்னுமில்லே....!''

'ப்ப்பல்ல்ல்' என்று சிரித்தாள் அம்மா.

''ஒன்னுமில்லாததுக்கா, அழுதே ?.'... என்கிட்டே சொல்லாட்டாப் போயேன்...''

அம்மா நகரத் தொடங்கியதும் பேபி எதிரே வந்தாள். ''இந்தாடி குட்டி, தாத்தாவைச் சாப்பிடக் கூப்பிடு.''

பேபி விளேயாட்டில் 'அம்பேல்' சொல்லிவிட்டு வந்திருக்கிருள். ஒரு டம்ளர் தண்ணீரை மடக்கென்று குடித்துவிட்டு ஓடிப் போக வேண்டும். சிறுப் பயல் பெரிய வாச்சாங்குளி. ஆடுவதெல்லாம் தப்பாட்டம்தான்.

''போ, பாட்டி. நீயே கூப்பிட்டுக்கோ? நாற்காலியிலேதான் சாஞ்சிண்டிருக்கார்...''

நாற்காலியில் சாய்ந்து கொண்டிருக்கிறார்! அப்படியாளுல் சுந்தரம் கண்ணீர் விட்டது



அவருக்குத் தெரிந்திருக்க வேண்டுமே? எழுந்து வந்து ஒரு வார்த்தை கேட்கப்படாது?

எல்லாம் நான் சொல்லணும்.

பாவம் குழந்தை அழுதிருளே, என்ன வேதனையோ? — அந்த ராட்சஸி என்ன சொன்னுளோ? — என்று எழுந்து வந்து பார்க்கக் கூடாது?....

''இங்கே உட்கார்ந்து என்ன பண்ணுறீர்கள்? நாழியாகவில்லே?.... உங்களுக்குத்தான் சொல்கிறேன். சாப்பிட்டேன் என்று பெயர் பண்ணிவிட்டு வந்து உட்கார்ந்து கொள்ளுங்களேன். அப்புறம் உங்களை யார் தொந்தரவு செய்யப் போகிறுர்கள்? எழுந்திருங்கோ....''

அம்மாளின் கைபட்டதும் அவர் உடம்பு சிலும்பிற்று.

''ஏன் இப்படி உடம்பு சிலிர்க்கிறது? அப்படி என்ன யோசனை?.... கல்யாணத்துக்கு இவ்வளவு செலவாகி விட்டதே என்று? எல்லாரும் ஆசைப்பட்டார்கள். சௌகரியமாய் இருக்கிற குழந்தைகள், செய்யட்டுமே? உசிரைக் கொடுத்தின்னு ஒவ்வொருத்தரையும் வளர்த்திருக்கு. எழுந்திருங்கோ.''

''எனக்கு.... எனக்கு... பசிக்கல்லே....''

மாடியிலிருந்து வாசற்புறம் இறங்குவதற்கான படிக்கட்டில் நிழலாடியது. அடுத்த கணம்....

''ஏண்டி மீனும்பா, நீ எப்போ வந்தே?''

''அப்பவே வந்துப்புட்டேன். குளாயடியிலே துணி போட்டிருக்கீங்களா?''

சுந்தரேசன் தலை நிமிரவில்லே. கல்லாய், சிலேயாய், மரமாய் அசைவற்றிருந்தார்.

பார்வதி அம்மாளின் கண்கள் அவரை ஊடுருவின. அவளுடைய அந்தராத்மா அவர் இதயத்தைத் துழாவியது.

என்ன....!

ஐயோ?....அப்படியா....? அப்படியா?

அம்மாளின் வயோதிகப் பாதங்கள் நடுங்கிக் கொண்டே உட்புறம் நோக்கிப் பெயர்ந்தன.

**கா**ற்று நிரம்பிய பலூன் நேரம் ஆக ஆக வதங்கிக் கொண்டே போகிறது. வருத்தம் நிரம்பியமனம், காற்றடைத்த பலூன்மாதிரி.

''அம்மா எங்கே, மன்னி?'' அடிக்குரலில் கேட்கிறுள் கலோ.

''அதுதான் எனக்கும் தெரியவில்லே. ஒரு மணி நேரத்துக்குமுன் ஒவ்வோர் அங்கணமாய் நின்று, ஒவ்வொரு பெயராய்ச் சொல்லிச் சாப்பிடக் கூப்பிட்டுக் கொண்டிருந்தாரே?'' என்கிறுள் சாரதா.

''எங்கே போயிருப்பாள்?'' என்று தனக்குத் தானே கேட்டவாறு வாசற்புறம் நோக்கி நடக்கிறுள் கலோ. நாற்காலியில் கல்லாய், சிலேயாய், மரமாய் அப்பா உட்கார்ந்திருப்பது கண்களில் படுகிறது. அவள் முயற்சி இன்றியே, அவரை விசாரிக்கலாம் என்ற எண்ணம் பிறந்து, சொற்களாய் அவதாரம் எடுக்கத் தொடங்குகையில் —

....சே! அவரைக் கேட்பதா?.... அப்பாவாம் அப்பா....! இனிமேல் அந்தத் தாய பெயரிஜனக் கொண்டு அவரை அழைக்கமாட்டேன்..... துரோகி.... பாசாங்குக்காரர்.

விருட்டென்று மாடிப் படியில் கலோ ஏறுகிறுள். துரையும் 'துரைசானி'யும் எதிர்ப்படுகிறுர்கள்.

''அம்மா எங்கே?'' என்று பொதுவில் கேட்கிறுள்.

''முதல் அறையில் நுழைவதைப் பார்த்தேன்....''

''எப்போ?''

''ரொம்ப நேரமாச்சே....!''

முதல் அறையின் கதவு சாத்தியிருக்கிறது. கலோ சத்தப்படுத்தாமல் கதவைத் தள்ளிப் பார்க்கிறுள். உட்புறம் தாளிட்டிருக்கிறது.

துரை பறந்து வந்து, ''திறக்க முடியல்லே?'' என்று விக்கித்துக் கேட்கிறுன்.

கலோ தலையை அசைக்கிறுள்.

''சுந்தரத்தைக் கூப்பிடு....''

திரும்பித் தன் மனைவியிடம், ''காபுராபடுத்தாமல் கோபுவை அழைத்துக் கொண்டு வா'' என்கிறுன்.

அந்த அறையின் இரு ஜன்னல்களும் வீட்டின் வெளிப்புறம் நோக்கியிருக்கின்றன. அறைக்குள் கம்பிக் கொடியில் புடவை உலர்த்துகிற பழக்கம். அறை பத்தடி உயரம். ஒரு ஸ்டூல் எப்போதும் இருக்கும். தாளி கட்ட வசதியாய் உச்சியில் ஒரு கம்பி வளையம் உண்டு.

துரையின் கண்களிலிருந்து அவன் அறியாமல் நீர் வழிந்து கொண்டிருக்கிறது.

''என்னண்ணு?''

சுந்தரத்தின் கைகளும் கதவைத் தள்ளுகின்றன.

''அம்மா ரொம்ப மானி.... அவளால் இந்த அவமானத்தைத் தாங்கவே முடியாது. அவளிடம் யாரோ சொல்லியிருக்கிறுர்கள். பேரிடி மாதிரி....'' கலோ மெதுவாக விசிக்க ஆரம்பிக்கிறுள்.

''இறங்கிப் போய் ஜன்னல் வழியாகப் பாரேன்....''

ஓட்டமும் நடையுமாகக் கீழே போகிறுன், சுந்தரம்.

இதற்குள் அந்தப் பரபரப்பின், மௌன நாடகத்தின் சூடு வீடு முழுவதிலும் பரவுகிறது. பிள்ளைகள், பெண்கள், மாப்பிள்ளைகள் நாட்டுப் பெண்கள், பேரன் — பேத்திகள் என்று மாடி நிரம்புகிறது. இரு ஜன்னல்களிலும் கீழ்ப் பாதி மூடியிருக்கிறது என்று சுந்தரம் செய்தி கொண்டு வருகிறுன்.

''அப்பா எங்கே?''

அங்கேதான் இருக்கிறுர், நாற்காலியில் சாய்ந்து கொண்டு.

எனக்கு வருகிற ஆத்திரத்தில் அவரை.... அவரை..... இருக்கட்டும், இருக்கட்டும்.

வயசாகி என்ன லாபம்? ஒரு 'இது' வேண்டாம்? புத்தி போகிறதே, இந்த வயசில்!.... சந்நியாசம் வாங்கிக் கொண்டு இமாலயம் போகிற வயசு. இப்போதுதான் இளமை திரும்புகிறது அப்பாவுக்கு!

அதுவும் இதே வீட்டுக்குள்....

வெட்கம் வேண்டாம்?

என்னுலேயே இந்த அவமானத்தைச் சகிக்க முடியவில்லே. அம்மாவால் முடியுமா?

அந்தத் தடிச்சி 'மீனும்பா இனிமேல் இந்த வீட்டுக்குள் நுழையட்டும்.... காலே ஒடித்து விடுகிறேன், ஒடித்து. அவள் குதுக்

கும் மினுக்கும்.... உடம்பைப் பாரேன், மினுமினுவென்று.... அம்மா அவனுக்குப் பரிந்து பரிந்து சோறு கொடுக்கிறதும் காப்பி கொடுக்கிறதும், உம்....? கஷ்டம், கஷ்டம் !....

'அப்போ கடப்பாரை கொண்டு வரட்டுமா?'' என்று ரமணி கேட்கிறான்.

''நாலு பேராய்க் கதவைத் தூக்கிப் பார்ப்போமே ?''

எட்டுக் கைகளின் வலிமை ஒன்று சேர்ந்து கதவைத் தூக்குகையில், ...'கடக்'.

அம்மா!...

எல்லோரும் நீருக்குள்ளிருந்து நிமிறிக் கொண்டு வெளியே வந்துவிட்ட மாதிரி இருக்கிறது.

அம்மாதான் எவ்வளவு தெளிவாய், சாந்தமாய், பனி நீராய், முழு நிலவாய் அவர்களைப் பார்க்கிறாள் !

''என்ன கூட்டம், இங்கே?''

கூட்டம் கலையப் பார்க்கிறது. கீழ் வாரிசுகள் பயம் நீங்கி வியப்புடன் பார்க்கின்றன, பாட்டியை.

''எல்லோரும் நில்லுங்கோ.... குழந்தைகளை மட்டும் கீழே போகச் சொல்லுடா, கோபு....!''

இரண்டு நிமிஷ மௌனம்.

''கேட்டுக்குங்கோ. இப்போ இந்த வீட்டிலே, தகாத எந்தக் காரியம் நடந்து விட்டதுன்னு எல்லாரும் முகத்தைத் தூக்கிக் கொண்டிருக்கிறீர்கள்?

''அப்படியே நடந்திருந்தாலும், நீங்க சாப்பிடாமல் இருக்கிறதினாலே, அதை அழிக்கட முடியுமா? இம்ம்....?

''நாலு வருஷங்களாய் அந்த விஷயம் எனக்குத் தெரியும்டி, கலோ. நான் மனப்பூர்வமாகத்தான் விட்டுக் கொடுத்திருந்தேன்! கண்ணை மூடிக் கொண்டிருந்தேன்!

''என்னடா, அப்படிப் பார்க்கிறே ? அதிசயமா இருக்கோ, உனக்கு ?

''மீனும்பா முறுக்கிக் கொண்டு போனபோதெல்லாம் நான் உபசாரம் பண்ணி, நல்ல வார்த்தை சொல்லித் தங்க வச்சிண்டிருக்கேன். அவருக்காகத்தான் !

''இந்த வீடும் வாசலும் சொத்தும் பத்தும் உங்க அப்பா சம்பாதிச்சது. யாரும் சேர்த்து வைச்சுட்டுப் போகல்லே. முப்பது வயசு வரை அவர் எதிரே நின்று நான் ஒரு வார்த்தை பேசி அறியேன். வீடு முழுக்க ஜனங்கள். இவருக்கு ஊர் ஊராய்ச் சுற்றுகிற வேலை. மாதத்தில் மூணு நாள் வீட்டில் தங்குவதே அபூர்வம். சின்ன வயசில் அவருக்கு எத்தனையோ ஆசைகள் இருந்திருக்கும். நிறைவேறாமலே இருந்திருக்கும்.....

''இப்போ எனக்கு என்ன துரோகம் பண்ணி விட்டார் ? யார் வீட்டு வாசலிலாவது பழியாய்க் கிடக்கிறாரா ?.. நோட்டு நோட்டாய் வீசி எறிகிறாரா?.... அல்ப ஆசை. அதை நான் நிறைவேற்றி வைக்கக் கூடாதா? சொல்லுங்கடா...?''

அம்மாவின் குரல் கெஞ்சலாய் இரங்குகிறது.

கலோ அழுகிறாள். சுந்தரம் அழுகிறான். சாரதா விம்முகிறாள்; துரையின் நெஞ்சு கதறுகிறது. ராஜூ மாப்பிள்ளை, உதடுகளை வாயினுள் திருப்பி, மேற்கே பார்க்கிறார்.

''எனக்கு ஒரேயொரு வருத்தம். இத்தனை பேர் வலைய வந்து கொண்டிருக்கிற சமயத்தில், தம் பலஹீனத்தைக் காட்டிக்கொண்டு விட்டாரே என்று. நீங்க எல்லோரும் ஊருக்குப் போகிறவரை காத்திருக்கக் கூடாதா?''

அம்மாவின் குரலிலிருந்த கனீர் என்ற தொனி எல்லோரையும் நிமிர வைக்கிறது.

''யாராவது இதை மனசில் வைத்துக் கொண்டு அவரிடம் மரியாதைக் குறைவா நடந்தா, அறைஞ்சுப்பிடுவேன், அறைஞ்சு ! அவரைப் பார்த்தும் பார்க்காதது போல் போனா, கட்டுப்பிடுவேன், கட்டு ! ஆமாம். பழையபடி இருப்பதற்கு இஷ்டமிருந்தால் இருங்கோ. இல்லே, அவனவன் பெட்டியைத் தூக்கிக் கொண்டு ஊருக்குத் தொலையுங்கோ! மறுபடியும் இங்கே கால் வைக்கப்படாது.... சொல்லிப்பிட்டேன்....''

அம்மா ஓரடி எடுத்து வைத்தாள். பின், கால்களைப் பெயர்க்க முடியவில்லை. அத்தனை கரங்களும் சிரங்களும் கிடந்தன, பாதத்தில்.

**மா**டியிலிருந்து இறங்கிய துரைக்கு அப்பாவைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. அவருடன் இரண்டு வார்த்தைகள் பேசவேண்டும் போல் இருந்தது. அவர் அருகில் நிற்க வேண்டும்போல் இருந்தது.

சாய்வு நாற்காலியில் அவரைக் காணவில்லை. தோட்டத்தில் மேரிகோல்டு அருகே களைக் கொட்டுடன் நிற்கக்கூடும்.

கூடத்தில் தொலை பேசி 'டிரிங்'கிற்று.

துரை போய் எடுப்பதற்குள், ரமணி, 'ஹலோ' என்றுவிட்டான்.

''யாரு.....? அப்பாவா!.... எங்கே விருந்து பேசுகிறீர்கள்? பப்ளிக் போனு....? என்ன, என்ன? காசிக்கு....?

''இருங்கள், இருங்கள், அம்மாவைக் கூப்பிடுகிறேன். அம்மா.....அம்மா....இங்கே வாயேன்......

''அம்மாவைக் கூப்பிட வேண்டாமா ? வீட்டுக்கு வந்துவிடுங்கள் அப்பா. நா..ங்க...ளெல்லாம் பழைய மாதிரி...யே....

''நான் ஒண்ணும் அழல்லே...ஏ...ஏ...

''கங்கையில் குளிக்கப் போக்கிக்கிற மாதிரி நீங்கள் ஒரு பாபமும் பண்ணவில்லேன்னு அம்மா சொல்கிறாள்.....

''ஏன் இப்படிப் பிடிவாதம், அப்பா?... நீங்க திரும்பி வர வரையிலும், ஒரு மாசம், நாங்களெல்லாம் வேலைக்குப் போகாமல் இங்கேயே இருக்க முடியுமா அப்பா ?

''அம்மா சொன்னதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தீர்களா ?.... இதோ, பக்கத்திலேயே அம்மா நிற்கிறா. பேசச் சொல்லட்டுமா?... ஹலோ.....ஹலோ....''

தொலை பேசி அவன் கையினின்றும் நழுவிற்று.

'' எழுந்திருடா. இப்போ என்ன, ஆயிடுத்து ? அவர் இஷ்டப்படி ஒரு மாசம் சுத்திப்பிட்டுத்தான் வரட்டுமே?.... சரி சரி. எல்லோரும் சாப்பிட வாருங்கள். மணி ரெண்டாகப் போகிறது... கலகலன்னு பேசிண்டே வரணும்...''

அம்மா — ஒரு மலை !




கடந்த 10–7–68 அன்று நாகர்கோயிலில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்தில் பேசிய திரு சுப்பிரமணியம் அவர்கள், "நாகர்கோயில் நாடாளுமன்றத் தொகுதி இடைத் தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளர் வெற்றி பெற்றால் அவருக்குத் தில்லியில் மந்திரி பதவி நிச்சயம் கிடைக்கும். அந்தப் பொறுப்பை நானே ஏற்கிறேன்" என்று அறிவித்தார்.

இது அரசியல் "லஞ்சம்" அல்லவா? பதவி ஆசை காட்டி வாக்காளர்களை மயக்குவதும், வாக்காளர்களுக்குப் பணம் கொடுத்து வாக்குகளைப் பெறுவது போன்ற பெரிய குற்றம்தான்.

நாகர்கோயில்
11–7–68

ராஜகோபால்

தங்கள் 14–7–68 இதழில் 'தி பைபிள்' என்ற ஆங்கிலத் திரைப் படத்தின் விமரிசனத்தைப் படித்தேன். மகிழ்ந்தேன். அதில் எழுதியிருக்கிற ஒவ்வொரு வார்த்தையும் உண்மை. நானும் என் குடும்பத்தாரும் சில மாதங்களுக்குமுன் இந்தப் படத்தைப் பார்க்கும் பேறு பெற்றோம்.

நம் படாதிபதிகள் வெளி நாட்டாரின் நடை உடை, இரவு விடுதி, முறுக்கு (Twist) நடனம் இவற்றையெல்லாம் காப்பியடிக்கிறார்களே தவிர, அவர்களிடம் உள்ள நல்ல விஷயங்களைப் பற்றிக் கவலைப்படுவதாகத் தெரியவில்லை.

பம்பாய்–22
12–7–68

அ.ரா. சுப்பரத்னம்

திரு எல்லார்வி அவர்களின் 'மலர்ச்சி' மலர்ந்து நறுமணம் கமழ்ந்தது.

தத்துவங்கள் நிறைந்த வாக்கியங்களில், தமக்கே உரித்தான நடையில், என் போன்ற எண்ணற்ற வாசகர்களின் இதயங்களை மகிழ்வடையச் செய்து விட்டார்.

போபால் – 21
11–7–68

எஸ். ராஜகோபாலன்

# ஜாம்பஜார் ஜக்குவினால் தமிழுக்கு ஆபத்தா?



பொம்மலாட்டம் படத்தில் மெட்ராஸ் பாஷை இடம் பெற்றிருப்பது குறித்து திரு மணி அவர்கள் வட்டமேஜை பகுதியில் பிரலாபித்திருக்கிறார். ஒரு மொழியில் கொச்சை மொழி இருப்பது அம்மொழிக்கு இழுக்கல்ல. 'ஸ்லாங்க்' (Slang) என்பது எல்லா மொழிகளிலும் உண்டு. டிக்கன்ஸ் போன்ற ஆங்கில நாவலாசிரியர்களும், பெர்னார்ட் ஷா போன்ற நாடகாசிரியர்களும், ஆங்கிலக் கொச்சை மொழியைத் தங்கள் சிருஷ்டிகளில் பயன்படுத்தியிருக்கிறார்கள். அவர்கள் ஆங்கில மொழியை அழிக்க முற்பட்டதாக அவர்கள் மீது குற்றம் சாட்டப்படவில்லை.

'செம்மீன்' என்ற மலையாளப் படம் ஜனாதிபதியின் தங்கப் பதக்கத்தைப் பெற்றது. அப்படத்தில் மீனவர் பேசும் கொச்சை மலையாளம் பெருவாரியாக இடம் பெற்றிருந்தது. மலையாள மொழியை ஒழித்துக் கட்டவா இந்திய ஜனாதிபதி அப்படத்துக்குப் பரிசளித்து ஊக்குவித்தார்?

கல்கி பத்திரிகை உட்பட, தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் பலவற்றில் வெளிவந்த கதைகளில் மதராஸ் பாஷை இடம் பெற்ற கதைகளின் பட்டியலைக் கூறட்டுமா? கல்கியும் மற்றப் பத்திரிகைகளும் தமிழ் மொழியை அழித்துவிடவா பாடுபடுகின்றன?

தமிழ் என்ன தொட்டால் சிணுங்கியா, கலபத்தில் அழிந்துவிட? கம்பன், வள்ளுவன், பாரதி போன்றவர்களால் வளர்ந்த தமிழை ஒரு 'சோ' தனது முயற்சியால் அழித்துவிட முடியும் என்று கூறும் திரு மணி அவர்களைப் பார்த்து நான் பரிதாபப்படுகிறேன்.

பொழுதுபோக்குச் சாதனத்தில்கூட இலக்கியத்தைத் தேடும் திரு மணியைப் போன்றவர்களைப் பார்த்து அழுவதா சிரிப்பதா என்றே எனக்குப் புரியவில்லை. ஆனால் திருவனந்தபுரம் திரு மணியைப் பார்த்துத் தமிழ் அன்னை கலகலவென நகைக்கும் ஒலி மட்டும் எனக்குக் கேட்கிறது!

சென்னை – 18
21–7–68

"சோ"

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam



# It's the cloth that matters!

## Buying an umbrella? Make sure it works!

(and is colour-fast, strong, keeps its shape)

## It's easy—make sure the cloth is Century's!

Century's umbrella cloth is used for all the best umbrellas made in India because umbrella manufacturers *know* that it is the cloth that matters.

Century's umbrella cloth starts right with superior cotton and a special construction which makes the fabric strong and not only water-proof but *shower-proof*. The fabric is dyed with a special process which makes it guaranteed colour-fast; it is finally mercerized and schreiner calenderized to give that smart silky finish. At every stage of manufacture, the fabric goes through rigid quality control tests.

The result is a cloth that really protects you from rain or sun.

***Umbrella shops everywhere stock umbrellas made with* Century's *cloth: buy one of these—they are the best.***

**Century's**

**UMBRELLA CLOTH**

**your guarantee for quality**

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon